தாய் வீடு

THAIVEEDU யூலை 2008 HOME & LIVING



# வாகனம் ஓட்டும்போது தொலைபேசிப் பாவனை முற்றாகத் தடை

**செல்லிடத் தொலைபேசிப் பாவனையை இருபத்தி நான்கு நாடுகள் ஏற்கனவே தடை செய்து விட்டன. அமெரிக்காவில் பல மாநிலங்களும் தடை செய்து விட்டன. இப்போ கனடாவில் கியூபெக் மாகாணமும் இதை தடை செய்து விட்டது.**

செல்லிடத் தொலைபேசி பாவிக்கும் வாகன ஓட்டுனர்களுக்கு அபராதம்

கியூபெக் மாநில வாகன ஓட்டுனர்களுக்கு செல்லிடத் தொலைபேசி பாவனையை வாகனங்கள் ஓட்டும்போது, பாவிப்பதை கட்டுப்படுத்தும் சட்டம் அமல்படுத்தப்பட்டுள்ளது. சட்டத்தைமீறி நடந்துகொள்வோருக்கு அபராதத் தொகையும், புள்ளி இழப்புக்களும் ஏற்படும். காவல் துறையினர் அந்தச் சட்டங்களை பிரயோகிப்பதில் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

இக்கட்டணங்கள் $115 வரை உயரலாம் என்று பொலிஸ் அதிகாரி மார்க் பட்ஸ் கடந்த வாரம் கூறியுள்ளார். இதில் 3 சாரதி அனுமதிப்பத்திர புள்ளிகளும் பறிக்கப்படும். ஒரு செல்லிடத் தொலைபேசியை பாவிக்காமலே கையில் ஒருவர் வாகனம் ஓட்டும்போது வைத்திருப்பது கண்டு பிடிக்கப்பட்டால், அவருக்கும் அபராதம் விதிக்கப்படும்.

*3ம் பக்கம் பார்க்க...*



**கடந்தவாரம் ஒன்ராறியோப் பிளேசில் இடம்பெற்ற தமிழர் மரபுரிமை நாள் நிகழ்வில் பாராளுமன்ற உறுப்பினர் Andrea Horwath.**

### மாறிவரும் சுற்றுச் சூழல்

உலகம் முழுவதும் சுற்றுச் சூழல் பாதிப்படைவது மனித குலத்துக்கு பெரும் அச்சுறுத்தல்

உலகம் முழுவதும் சுற்றுச்சூழல் பாதிப்படைந்து வருவது மனிதகுலத்துக்கு பெரும் அச்சுறுத்தலாக அமைந்துள்ளது. வளிமண்டலத்தில் காபன் செறிவு அதிகரித்து வருவது, காலநிலைகளில் பெரும் தாக்கத்தை உருவாக்கி வருவதாக ஆய்வுகள் மூலம் தெரிய வந்தாலும், இயற்கையை நேசிக்காத மனிதகுலம் தனது வாழ்க்கை நெறிகளை மாற்றிக்கொண்டதே இதற்கான காரணமாகும்.

உலகிலுள்ள உயிரினங்களில் ஒவ்வொரு மணிநேரத்திற்கும் மூன்று உயிரினங்கள் அழிந்து வருவதாக ஐ.நா.வின் அறிக்கையொன்று தெரிவிக்கின்றது. இயற்கைச் சீரழிவு மற்றும் சுற்றுச் சூழல் மாசு குறித்து ஜேர்மனியில் நடைபெற்ற 193 நாடுகள் கலந்து கொண்ட மாநாட்டில் ஐ.நா. பொதுச் செயலாளர் பான்-கி-மூன் இத்தகவலை வெளியிட்டுள்ளார்.

உலகில் டைனோஸர் இனங்கள் அழிந்து 6.5 கோடி ஆண்டுகளுக்குப் பின் உயிரினங்கள் அழிவது இப்போது தான் பெரிதும் அதிகரித்துள்ளது. ஒவ்வொரு மணி நேரத்திற்கும் மூன்று உயிரினங்கள் அழிந்து வருகின்றன. ஓரங்கொட்டான், சிம்பன்ஸி மற்றும் யானை உள்ளிட்ட பாலூட்டி உயிரினங்களில் நான்கில் ஒன்று அழிந்து வருகின்றது. அதேபோன்று பறவைகளில் 8 வகைகளில் ஒன்றும் ஈரூடக உயிரினங்களில் (நீர் மற்றும் நிலத்தில் வசிப்பவை) மூன்றிலொரு பகுதி வகைகளும் அழிந்து வருகின்றன.

தாவரங்களின் வாழ்நாள் 70 சதவீதமாகக் குறைந்து வருகின்றது. இவை எல்லாவற்றுக்கும் காரணம் மனிதர்கள் சுற்றுச் சூழலை மிக அதிகளவில் மாசுபடுத்தலேயாகும்.

உலகம் வெப்பமயமாதல், காலநிலை மாற்றம், சுற்றுச் சூழல் சீர்கேடு, மற்றும் காடுகளை அழித்தல் போன்றவற்றினாலேயே உயிரினங்கள் அழிவை நோக்கிச் செல்கின்றன. தாவரங்களின் வாழ்நாள் குறைவதால் உணவுப் பற்றாக்குறை கடுமையாக அதிகரிக்குமென எச்சரிக்கப்பட்டுள்ளது.

உலகளாவிய ரீதியில் புவியின் சூழல் மாசடைவதைக் கருத்திற்கொண்டு முதன் முதலாக ஐக்கிய அமெரிக்காவில் சுற்றுச் சூழலியல் நிபுணரும் செனட்டருமான கேலோர்ட் நெல்சன் என்பவர் சுற்றுச்சூழல் பற்றிய அறிவைப் பரப்பத் தகுந்த நாளாக 1970 ஆம் ஆண்டு ஏப்ரல் 22 நடாத்த அழைப்பு விடுத்தார். அவரது அழைப்பை ஏற்று 20 மில்லியன் மக்கள் இந்நிகழ்வில் பங்கெடுத்தார்கள். அன்றிலிருந்து ஆண்டு தோறும் இந்நாள் 175 நாடுகளில் பூமி நாளாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஐக்கிய நாடுகள் அவை யூன் 5ம் நாளை உலக சுற்றுச் சூழல் நாளாக அனுசரித்து வருகிறது.

சுற்றுப் புறசூழலில் காபன் தாக்கம் அதிகரிப்பதை கட்டுப்படுத்த பசுமையைப் பேண வேண்டுமென்பதில் யாருக்கும் கருத்து முரண்பாடு இருக்க முடியாது. ஆனால், திட்டமிட்ட செயல்பாடு அவசியம். சுற்றுச்சூழலை பாதுகாப்பது நமது கடமை. அதற்காக நாம் விரைந்து செயற்பட வேண்டும்.

நமது மூதாதையர்கள் சுற்றுப் புறச்சூழல் மாசடையாமல், இயற்கையோடு இணைந்து செயற்பட்டனர். எமது முன்னோர்கள், மண்ணின் வளம் பற்றி அறிந்து திட்டமிட்டே சேதனப் பசளைகளைப் பயன்படுத்தி வந்தனர்.
இயற்கையோடு இணைந்து வாழ ஒட்டுமொத்த மனித குலமும் மீண்டும் எப்போது ஆரம்பிக்கின்றதோ, அன்றைய தினம் தான் உண்மையில் உலகச் சுற்றுச் சூழல் தினமாக அமையும்.





# வாகனம் ஓட்டும்போது...

25ம் பக்கத் தொடர்ச்சி...

"பிளாக்பெர்ரி"போன்ற செல்லிடத் தொலைபேசி உள்ளிட்ட, அவற்றுடன் சம்பந்தப்பட்ட எந்தவொரு சாதனமும், வாகனத்தைச் செலுத்துமிடத்து கண்டுபிடிக்கப்படின், அதற்கும் அபராதங்கள் உண்டு.

தொலைபேசியுடன் ஒருவர் அடையாளம் காணப்படின் அவரை ஓரங்கட்டி, அவருக்கு அபராதம் விதிக்கப்படும் என்று மேலும் மார்க் கருத்துக் கூறினார். கையே தொலைபேசியில் படாமல் கதைக்கக் கூடிய வசதிகள் இருப்பின் பேசலாம் என்பது இவரின் கூற்று.

நோவா ஸ்கோஷியா இச்சட்டத்தை ஏப்ரல் 1ந் திகதியிலிருந்து அமுலுக்குக் கொண்டு வந்தது. முதன்முறை இவ்விடயத்தில் ஒருவர் அபராதம் விதிக்கப்பட்டிருப்பின், அவரின் நீதிமன்றச் செலவினங்களையும் சேர்த்துக் கருத்தில் கொண்டு, $165 இற்கும் குறைவாகவே அபராதத் தொகை அறவிடப்படலாம்.

நியூ ஃபௌண்ட்லாண்ட் மற்றும் லாப்ரடோர் போன்ற மாநிலங்கள் தான் கனடாவிலேயே முதன்முதலில் இச்சட்டத்தை 2003ம் ஆண்டில் அமுலுக்குக் கொண்டு வந்தன. இதில் அபராதத் தொகை $400 வரைக்கும் உயர்வதுடன், வாகன ஓட்டுனர் அனுமதிப்பத்திர புள்ளி இழப்புக்களும் கருத்தில் கொள்ளப் பட்டன.

தற்போது ஒன்ராரியோவும் இம்மாதிரிச் சட்டங்களை, Black berry பாவிப்பதிலும், அதன் சம்பந்தப் பட்ட தொலைதொடர் சாதனங்களையும், வாகனம் ஓட்டும்போது, பாவிப்பதையும், அமுலுக்குக் கொண்டு வரலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கின்றது. ஒன்ராரியோ மாநில முதல்வர் டால்டன் மாக்கெண்டியும், போக்குவரத்து அமைச்சரை, அச்சட்டம் பொறுத்து சிந்திக்குமாறு பணித்ததுடன், இம்மாதிரி சட்டங்களுக்கு தான் மனப்பூர்வமாக தன் ஆதரவைத் தெரிவிப்பதாகவும்,

ஒரு தனிமனிதரின் மதீப்பீட்டின் அடிப்படையில், இம்மாதிரிச் சட்டம் அல்பேர்ட்டாவிலும் சிந்திக்கப்பட்ட போதிலும், அம் மாநில முதல்வர், எட் ஸ்டெல்மாக் இதற்கு எதிர்க்கருத்தையே ஒப்பித்ததால், அங்கு மாற்றங்கள் எதுவும் இதுவரை கொண்டு வரப் படவில்லை.

கனேடிய பாதுகாப்புத்துறை அதிபர் ஜாக் ஸ்மித் கருத்துக் கூறுகையில், ஏற்கனவே மூன்றுமாத அவகாசம் இந்த விடயத்தில் கொடுக்கப் பட்டிருந்ததால், ஒருவர் இதன் பின்னும் அபராதத் தண்டனையில் மாட்டிக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களில் சிக்கியிருக்கக் கூடாது என்று விமர்சித்தார். தமது செவ்வியில், இது வாகன ஓட்டுனர்களை பாதையில் கவனம் செலுத்தும் வாய்ப்புக்களை பாதுகாப்பு முறையில் அதிகரிக்கும். அதனாலேயே இந்தவொருகட்டத்தில் இப்படியான முடிவுகளை எடுக்கும் நிலைக்கு ஆளாகியுள்ளோம் என்பதையும் விளக்கினார்.

கையைப் பயன் படுத்தாமல், தொலைபேசியைப் பாவிப்பது உசிதம், ஏனெனில் வளர்ந்து வரும் தொழில்நுட்பத்தின் ஆற்றலை நாம் கட்டாயம் அன்றாட வாழ்வில் பயன்படுத்த வேண்டுமல்லவா?

தொலைபேசி அழைப்பு, நீங்கள் வாகனம் ஓட்டும்போது வருகிறது. கட்டாயம் பதிலளித்தே ஆகவேண்டிய அழைப்பா? வாகனத்தை முதலில் பாதுகாப்பாக ஓரங்கட்டி நிறுத்துங்கள். ஆறுதலாகப் பேசுங்கள்.

■ ■ ■

Publisher & Editor : P.J. Dilipkumar
பதிப்பாளர், ஆசிரியர் : பி.ஜே. டிலிப்குமார்

ஆலோசகர் குழு : ஞானம் லம்பேட், மாமூலன், கருணா, பொன்னையா விவேகானந்தன், ரதன், சுந்தர் சின்னத்தம்பி.

தட்டச்சு : கௌரி, கௌசலா, ஜீவா, பிரியதர்சினி.

ஒப்புநோக்கல் : சாவையம்பதி சுப்ரமணியம், கௌரி.

வரைகலை ஆலோசனை : கருணா (டிஜி வரைகலை அமையம்)

தொடர்புகள் :
For More Info : Editor
P.O.Box #63581
Woodside Squarew
1571 Sandhurast Circ.
Toronto, ON. M1V 1V0

Montréal விநியோகம் : சுகுமாரன் சின்னையா
1-514-299-3186
Ottawa விநியோகம் : அலெக்ஸ் சிவசம்பு
1-613 -276-7253

Tel : 416-646-3422, 416.400.6406
Fax : 416.849.0594
Web : www.thaiveedu.com
E-mail : info@thaiveedu.com

# சமாதானச் சூரியன் மேற்கில் தான் உதிக்குமாம்

## அந்தரத்தை அண்ணார்ந்து பார்த்துக் கொண்டேயிருக்கும் அரசியல் அகதிகள்

- அ. கணபதிப்பிள்ளை -
kanapathipillai@thaiveedu.com

***1948ல் இருந்தே அகதிகளாக்கப்பட்ட இரு இனங்கள் அமைதியைத் தேடுவதும் அந்த அமைதி கிடைக்குமா? என்று ஏங்கிக் கொண்டிருப்பதும் உலகில் இரண்டு நாடுகளுக்குப் பொருத்தமான வரலாறு. பலஸ்தீனம், தமிழீழம் இரண்டுமே தாங்களாகவே தனிநாட்டுப் பிரகடனம் செய்து கொண்டவை. பல சுதந்திரப் போராட்ட இயக்கங்களுடைய அர்ப்பணிப்புடன் வளர்ந்துவந்த சுதந்திரப் பறவையின் சிறகுகள், உள்ளேயும் வெளியேயும் உள்ள ஒரே இன எதிரிகளால் உடைக்கப்படுவது ஏன்? போரும் சமாதானமும் என்ற இரு துருவங்களுக்கிடையே ஏங்கித்தவிக்கும் அரசியல் அகதிகள் பல தலைமுறைகளாக சுதந்திரத்தை அண்ணார்ந்து பார்த்துக் கொண்டேயிருக்கின்றார்கள். சமாதானச் சூரியன் மேற்கில் உதயமாகுமா?***

***சமாதானப்புயல் அடித்து ஓய்ந்ததும் போர் மழை பெய்யும். அதில் இரத்தமும் சதையும் மிதக்கும் காற்றுக்கும் கனமழைக்கும் எதிர்த்துநிற்க முடியாத இலைகளும் குருத்துக்களும், இரத்தச் சகதிக்குள் தங்களை இனமாக்கிக் கொள்ளும். இயற்கையின் அகதிகளாகப் பறந்து கொண்டிருக்கும் இலைகள் மீண்டும் மீண்டும் சுதந்திர மரத்திற்கு உரமாக்கிக் கொண்டேயிருக்கின்றன. இந்நிலை தொடர வெண்டுமா?***

> “ உலகின் கொந்தளிப்பாக இருக்கும் பிரதேசங்களில் மத்திய கிழக்கும், தென்னாசியாவும் முக்கியமாயுள்ளன. இரண்டு பிரதேசங்களிலும் ஏற்படுத்தப்படப்போகும் ‘சமாதானம்’ பிரதேச உடன்பாட்டினை வலியுறுத்துவதாக அமைய வேண்டும் சமாதானத்தை மேற்குலகுமே கொண்டுவரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்கள் சமாதானத்துக்காக எத்தகைய சகிப்புத் தன்மையினையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலை தொடரவேண்டும். ”

இஸ்ரேலுக்கும் இலங்கைக்கும் ஒப்பிட்டுப் பார்க்கக்கூட முடியாத வேறுபாடுகள் இருந்த போதிலும் ஏன் இருநாடுகளையும் சேர்த்துப் பார்க்க முடிகின்றது என்ற ஆச்சரியம் ஏற்படாமல் இருக்க முடியாது. கிறிஸ்துவுக்கு முற்பட்ட கால நாகரீகங்களின் வரலாற்றை தம்மகத்தே கொண்ட இரண்டு நாடுகளும் பிரித்தானிய காலனித்துவக் காலடியில் சிக்கித் தவித்தவைகள். 1948ம் ஆண்டு சுதந்திரம் பெறும்பொழுது இரண்டு அரசுகள் என்ற தீர்வினைப் பெறமுடியாமற் போன இரண்டு இனங்களின் வரலாற்றை இன்னமும் பேணிப்பாதுகாப்புடன் தீர்வு என்ற ஒன்றே இலக்கெனக்கொண்டு போராடிவரும் இரு சிறுபான்மை இனங்களின் எதிர்கால நம்பிக்கையைத் தன்னகத்தே கொண்டுள்ளமைதான் இரண்டு நாடுகளையும் சேர்த்துப் பார்க்கக் காரணமாகியது.

இஸ்ரேல் தனது அறுபதாண்டு வயதைக் கொண்டாடுகின்ற பொழுது பலஸ்தீனர்கள் தங்களின் இழப்பை நக்பா என்ற நினைவாக நினைவுபடுத்திக் கொள்கின்றார்கள். இலங்கை அறுபதாண்டு சுதந்திரத்தைக் கொண்டாடுகின்ற பொழுது தமிழர்கள் ஒவ்வொரு இனக்கலவரங்களையும் சத்தியாக்கிரகத்தில் பட்ட அடி உதைகளையும் கறுப்பு ஜுலையினையும் நினைவுபடுத்திக் கொள்ளுகின்றார்கள்.

நக்பா என்பது பேரனர்த்தம் என்று கூறப்படும் அராபிய வாதத்தை. இதனைப் பலஸ்தீனியர்கள் பயன்படுத்துகின்றபொழுது யூதர்கள் அராபியர்களுக்குச் செய்த கொடுமைகளை நினைவுகூருகின்றார்கள். பெரும்பாலான பலஸ்தீனியர்கள் யூதர்களை வெறுக்காத போதும் யூதர்களின் சியோனிசம் என்ற இஸ்ரேல் ஆதிக்கவாதக் கொள்கை தங்கள் மேல் போட்டுவந்த அழுத்தங்களையும் அனர்த்தங்களையும் நினைவு கூறுகின்றார்கள். இந்நிலையில் மக்கள் ஒன்றுபட்டு வாழ முடியுமேயன்றிக் கொள்கைகள் ஒன்று படமுடியாது என்பதனை இலங்கைத் தமிழர்களும் இஸ்ரேலில் பலஸ்தீனியர்கள் என்ற இரு பகுதியினரும் உணரும் நிலை தொடர்-கின்றது.

இரண்டாம் உலகப்போருக்குப் பின்னால் யூத இனத்தவர் (இஸ்ரேலியர்) களாற் கட்டி எழுப்பப்பட்ட இளம் நாடு இஸ்ரேல். யூத இனத்தவர்கள் பலசந்தர்ப்பங்களிற் தமிழர்களுடன் ஒப்பிடப்படுபவர்கள். வரண்ட பிரதேசதில் வாழ்ந்து வளங்களை எல்லாம் ஒன்றுதிரட்டியும் தனித்துவத்தினைபேணியும் வருகின்ற விடாமுயற்சியாளர்கள். உலக அகதிகளாக முத்திரை குத்தப்பட்ட பொழுதிலும் தமக்கு ஒருநாடு வேண்டும் தமது சந்ததியினருக்கு ஒரு வரலாறு வேண்டும் என்று புதிதாக ஒரு நாட்டினை உருவாக்குவதற்காக உலகின் பலபாகங்களிலுமிருந்து இன்றைய இஸ்ரேலுக்கு வந்து குடியேறியவர்கள். தங்களுக்குள்ள பகைமையினையெல்லாம் மறந்த நிலையில் ஒன்றிணைந்து ஒருநாட்டினைக் கட்டியெழுப்பியவர்கள். புதிய நாடமைக்கும் முயற்சியின் பொழுது பல இயக்கங்களாகப் பிரிந்து போராடினாலும் அன்று பயங்கரவாதிகள் என்று பெயரெடுத்த பொழுதிலும் மற்றைய இயக்கங்களையெல்லாம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து ஒரு இயக்கமாக ஒற்றுமையாக நின்று தமது நாட்டை உருவாக்கியும் காப்பாற்றியும் வருபவர்கள்.

இன்றைய வெளியுலக அழுத்தங்களினால் புதிதாக உருவெடுக்கும் விடுதலை இயக்கங்களை ஆதரிக்க முடியாமையும் அமெரிக்காவின் பின்னால் நிற்கவேண்டியுள்ளமையும் காலத்தின் தேவை என்று கொள்ளலாம். இஸ்ரேல் ஒன்று இருப்பதாக அரபுலீக் நாடுகள் ஏற்றுக்கொள்ளவில்லை 1948ல் இஸ்ரேலின் மீது படையெடுத்து அப்பிரதேசத்தினை தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவதற்குத்தான் சூழவுள்ள அரேபியநாடுகள் முயன்றுபார்த்தன. பிரித்தானியாவால் முன் வைக்கப்பட்ட பலஸ்தீனத்திற்கான இரண்டு நாடு என்ற தீர்வு தங்களுக்குப் பாதிப்பானது என்று பலஸ்தீனிய அரேபியர்களும் சூழவுள்ள அரேபியநாடுகளும் ஒன்றிணைந்து அத்தகைய தீர்வினை எதிர்த்தன. 1947ல் ஐ.நா முன்வைத்த தீர்வும் அதன்பின்னர் பிரித்தானியர்களினால் 1948ல் கொடுக்கப்படவிருந்த சுதந்திரமும் பலஸ்தீனியர்களுக்கும் இஸ்ரேலியர்களுக்கும் ஒரு தீர்வாக அமையும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தவேளையில் இத்தகைய உபாயம் இஸ்ரேலுக்கச் சாதகமாகிவிடக்கூடும் என்று அரபுநாடுகள் எதிர்பார்த்தன.

1948ல் அரபுநாடுகள் இஸ்ரேலின் மீது படையெடுக்கத் திட்டமிட்டபொழுது அது இரண்டாவது சிலுவை யுத்தம் போலவோ மங்கோலியர்களின் படையெடுப்பால் நிகழ்ந்த படுகொலைகளுக்கு ஒப்பாகும் என அரேபியர்கள் எதிர்பார்த்தார்கள். இந்தப் போரில் எகிப்தும் ஜோர்தானும் மேற்கு நதிக்கரை காசா ஆகிய நிலப்பகுதிகளை தம்வசமாக்கிக் கொண்டிருந்தபோதிலும் கூட போரில் வென்ற இஸ்ரேல் 1948 மே மாதம் 14ந் திகதி தனது நாட்டை தனிநாடாகப் பிரகடனப்படுத்தியதுடன் பலஸ்தீனர்களின் பெரும்பாலான நிலங்கள் இஸ்ரேல் வசம் சென்றுவிட சுதந்திரத்திற்கு முன்னரே பலஸ்தீனர்கள் அகதிகளாக்கப்பட்டார்கள் அன்று பலஸ்தீனியர்கள் எதிர்பார்த்த சமாதானத்திற்குச் சாவுகிட்டியது.

இஸ்ரேலியர்கள் பெருமளவில் வந்து குடியேறுவதற்கு முன்னர் 18ம் நூற்றாண்டில் பரந்தும் அரேபியர்களுடன் இணைந்தும் யூதர்கள் வாழ்ந்து வந்தார்கள். உலகம் முழுவதும் யூத எதிர்ப்புத் தோற்றம் பெற தமக்கென நாடு வேண்டும் என்ற சிந்தனை உதயமாகத் தொடங்கியது. இஸ்ரேல் ஒரு நாளில் கட்டியெழுப்பப்பட்டதல்ல. மதத்தாலும் பொருளாதார செழிப்பாலும் அரசியல் சாணக்கியத்தாலும் உயர்ந்திருந்தமையினாலும் எதிரிகளைச் சம்பாதித்துக்கொண்ட யூத இனத்தவர்கள் ஒவ்வொரு நாடுகளின் தேசிய உணர்வுக்கும் தங்களைப் பலியாக்கிக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் அதனையும் மீறி அவர்களுடைய பலம் உலகெங்கும் இன்று பரந்துபட்டிருக்கின்றமையினைக் காணலாம்.

இஸ்ரேலை நோக்கி வந்த யூதர்கள் பெருமளவில் பணத்தை வாரியிறைப்பதன் மூலம் அரேபியர்களின் நிலங்களை வாங்கித் தம் வசப்படுத்திக் கொண்டார்கள் என்ற குற்றச் சாட்டுக்கு இலக்கானவர்கள் அவர்கள். 1881ம் ஆண்டு முதல் நிலம் வாங்குவதற்கும் குடியேறுவதற்கும் பிரித்தானியா கட்டுப்பாடுகளை விதிக்கத் தொடங்கியது. இது பிரித்தானியர்களை இஸ்ரேலியர்கள் நம்பாமைக்கும் அவர்களது தீர்வுத்திட்டத்தினை ஏற்றுக்கொள்ளாமைக்கும் காரணமாகிய அதேவேளை வறிய பலஸ்தீன அரேபியர்களோ நிலங்களை விற்பதனைத் தவிர வேறு வழி தெரியாத நிலையில் இருந்தார்கள். இதனைச் சாதகமாக்கி பலஸ்தீனம் (பலஸ்தீனத்தை) யூதர்களின் தாயகம் என்ற கோட்பாட்டினை முன்வைத்து இழந்த நிலங்களை மீட்கும் போராட்டமான ஒரு இயக்கத்தின் கீழ் தங்களை யூதர்கள் இணைத்துக் கொண்டிருந்தனர்.

ஆரேபியர்கள் தங்கள் முதாதையர்களின் நிலங்கை வலுக்கட்டாயமாகப் பிடித்திருந்தார்கள் என்றும் அதனையே யூதர்கள் மீட்பதில் தொடர்ந்தும் முனைப்புடன் செயற்படுகிறார்கள் என்றும் யூதர்கள் வாதிடுகின்றார்கள். அரேபியர்களது காணிகளை வாங்கி அவர்களை அகதிகளாக்கிவிட்டார்கள் என்ற குற்றச்சாட்டும் அரச பயங்கரவாதத்தால் அகதிகளாக்கப்பட்டார்கள் என்ற கருத்தும் முன்வைக்கப்பட்டிருந்தாலும் 1948ம் ஆண்டில் அரபிய முஸ்லிம்களின் போரால் பலஸ்தீனியர்கள் காஸாவை எகிப்தியரிடமும் மேற்குக் கரையினை ஜோர்தானிடமும் பறிகொடுத்து அகதிகளாக்கப்பட்டனர் என்பதுதான் முடிவாகியது. அந்தப் போரின் விளைவாக 8லட்சம் பேர் அகதிகளாக்கப்பட்டனர். அந்தத் தொகை இன்று 42 இலட்சமாக அதிகரித்து விட்டது. 1922ல் 11சதவீதமாக இருந்த யூதர்

*10ம் பக்கம் பார்க்க...*

# முகவர் உறவுகள் (Agency Relationships)

மகேன் சிங்கராஜா
- வீடு விற்பனைப் பிரதிநிதி -
mahen@thaiveedu.com



ஓர் வீடு விற்பனை முகவருடன், நீங்கள் இணைந்து செயற்படும் போது, அந்த முகவர் யாருக்காக பணி புரிகிறார் என்றும் அவர் சட்டபூர்வமாக யாருக்கு கடமைப்பட்டுள்ளார் என்பதனையும் நீங்கள் அறிந்திருத்தல் அவசியம். கனேடிய வீடு விற்பனை முகவர்கள் அனைவரும், முகவர் உறவுகளைப் பற்றி தமது வாடிக்கையாளர்களிடம் ஆரம்ப கட்டத்திலேயே தெரிவிக்க வேண்டியது அவசியம்.

வீட்டை வாங்கும் ஒருவர், வீடு விற்பனை முகவருடன் இருவகையான உறவுகளை ஏற்படுத்துகின்ற தெரிவுகள் உண்டு. வீடு விற்பனை செய்யும் நிறுவனம் என்ற வகையில் வீட்டை வாங்குபவருக்கு முடிந்தளவு சிறந்த சேவையை வழங்க வேண்டும். வீடு வாங்கும் முகவர் ஒப்பந்தம் (Buyer Agency Agreement) என்ற எழுத்து மூலமான ஒப்பந்தத்தின்படி வாங்குபவரின் முகவர் தன்மை ஏற்படுத்தப்படுகிறது. இந்த ஒப்பந்தம் வீடு விற்பனை செய்யும் நிறுவனம் வழங்கும் சேவைகளைப் பற்றி விளக்கம் தருகிறது. அத்துடன் வீடு விற்பனை செய்யும் முகவருக்கான சேவைக் கட்டணங்கள், வீட்டை வாங்குபவருக்கான கடமைகள் என்பனவும் அதில் விபரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கும்.

இந்த ஒப்பந்த ஒழுங்குமுறையின்படி, ஓர் குறிப்பிட்ட காலத்திற்கு, வீடு வாங்குபவர் வீடு விற்பனை நிறுவனத்துடன் இணைந்து செயலாற்ற வேண்டும். இதற்கு பிரதியுபகாரமாக, வீடு வாங்குபவர் வீடு விற்பனை நிறுவனத்துடன் நம்பிக்கையுடன் பகிர்ந்து கொண்ட விடயங்கள் அனைத்தும் இரகசியமாக பாதுகாக்கப்படும்.

### வீடு விற்பனை செய்பவருக்கு பின்வரும் பொறுப்புக்கள் உண்டு

- துறைசார் வல்லுனர் என்ற வகையில் அறிவுரை வழங்குதல்.
- வீடு வாங்குபவருக்கு ஏற்ற சிறந்த வகையான கொள்முதல் விலையை ஒழுங்கு செய்தல்.
- வீடு வாங்குபவர் சரியான முடிவை எடுப்பதற்கு அவருக்கு வேண்டிய தகவல்கள் அனைத்தையும் வழங்குதல்.

ஓர் வாடிக்கையாளர் என்ற வகையில் வீடு வாங்குபவர் நியாயமாகவும், நேர்மையாகவும் நடத்தப்பட வேண்டும் என எதிர்பார்க்க முடியும். இந்த விதமான உறவில் வீடு விற்பனை முகவர் ஒரு வீட்டை விற்பவரின் ஓர் உப முகவராக (Sub agent of seller) செயல்படுகிறார். எனவே அவர் வீட்டை விற்பவரின் சார்பில் சில கடமைகளைக் கொண்டுள்ளார். அதேசமயம் வீடு விற்பனை முகவர் அந்த குறிப்பிட்ட ஆதனம் பற்றி பின்வரும் தகவல்களை வீட்டை வாங்குபவருக்கு வழங்குவார் என வீட்டை வாங்குபவர் எதிர்பார்க்க முடியும்.

- வீடு பற்றிய அனைத்து தகவல்களையும் வழங்குதல்.
- சரியான விளக்கமளித்தல்.
- வாங்க வேண்டிய வீடு பற்றி அனைத்து கேள்விகளுக்கும் நேர்மையான பதிலை வழங்குதல்.

வீடு வாங்குபவருடன் ஏற்படுத்திய இந்த உறவின்படி, ஒரு வீட்டை மிகவும் சிறந்த விலையில் பெற்றுத் தருவதாக வீடு விற்பனை முகவர் அவருக்கு கூறக்கூடாது. ஏனெனில் அவ்வாறு செய்தால் அது வீட்டை விற்பவருடன், வீடு விற்பனை செய்பவர் ஏற்கனவே ஏற்படுத்தியுள்ற உப முகவர் என்ற உறவுக்கு முரண்பாடாக அமையும். அத்துடன் கனேடிய வீடு விற்பனை முகவர்களின் ஒன்றியத்தின் விதிமுறைகளுக்கு மாறாகவும் அமையும்.

### வீடு விற்பனை செய்பவர்களுக்கும் முகவர்களுக்கும் உள்ள உறவு.

ஓர் வீடு விற்பனை செய்யும் நிறுவனம் ஒரு சொத்தினை விற்பனை செய்பவருக்கு சிறந்த பயனை வழங்கக்கூடிய வகையில் செயற்பட வேண்டும். LISTING AGREEMENT என்ற எழுத்து மூலமான ஒப்பந்தத்தின் மூலம் ஒரு வீட்டை விற்பனை செய்பவரின் முகவர் தன்மை ஏற்படுத்தப்படுகிறது. இந்த ஒப்பந்தம் பின்வரும் விடயங்களுடன் தொடர்புடையது.

- வீடு விற்பனை நிறுவனம் வழங்கும் சேவைகளை விளக்குகிறது.
- வீடு விற்பனை முகவருக்கான சேவைக் கட்டணங்களை விபரமாகக் குறிப்பிடுகிறது.
- வீட்டை விற்பனை செய்பவரின் பொறுப்புக்கள் எவை என குறிப்பிடுகிறது.

வீட்டை விற்பனை செய்பவர், வீடு விற்பனை முகவரிடம் பகிர்ந்து கொண்ட விடயங்கள் எதுவும் வீட்டை வாங்குவதற்கு முயற்சிப்பவர்களுக்கோ அல்லது ஏனையவர்களுக்கோ தெரிவிக்கப்படக் கூடாது. அதேசமயம் வீட்டை வாங்குபவர் ஒரு வீட்டை கூடிய அளவு பணம் கொடுத்து வாங்குவதற்கு தயாராக இருந்தால் வீடு விற்பனை முகவர் அதனை வீடு விற்பவரிடம் தெரிவிக்க வேண்டும்.

வீடு வாங்கும் ஒருவருடன் உப முகவர் என்ற வகையில் இணைந்து செயற்படும் வீடு விற்பனை முகவர் வீட்டை விற்பனை செய்பவரின் நன்மையை முக்கியமானதாக கருத்தில் கொண்டே செயற்படுகிறார் என்பதனைக் கவனத்தில் கொள்ள வேண்டும். வீடு வாங்குபவருடன் இணைந்து அவரது முகவராக செயல்படும் வீடு விற்பனையாளர் வீட்டை வாங்குபவரின் நலனைக் கருத்தில் கொண்டு செயற்படும் அதே சமயம் LISTING AGENT என்ற வகையில் உள்ள சில விதிமுறைகளின்படி வீட்டை விற்பனை செய்பவராலும் பயன் பெறுகிறார்.

### ஒன்றுக்கு மேற்பட்டவர்களைப் பிரதிநிதித்துவம் செய்தல் (Multiple Representation)

சில சந்தர்ப்பங்களில் ஓர் வீடு விற்பனை நிறுவனம் வீடு வாங்குபவருக்கும் விற்பனையாளருக்கும் ஒரே சமயத்தில் முகவராக செயல்படலாம்.

*20ம் பக்கம் பார்க்க...*

# கௌரவம்



கே. எஸ். பாலச்சந்திரன்
ks@thaiveedu.com

பிறந்த நாட்டிலும், அடைக்கலம் தந்த நாட்டிலுமாக, பல காலமாக பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் எனக்கு ஏதாவது 'அலேர்ஜி' இருக்கிறதா என்று எனது குடும்ப டொக்டர் கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். ஒன்றே ஒன்றை மறக்காமல் அதுவும் உரத்த குரலில் சொல்வதாக இருக்கிறேன். இங்கே குறிப்பாக எமது சமூகத்தில் பொது நிகழ்வுகளில் 'கௌரவம்' என்ற பெயரில் நடக்கும் 'அகௌரவப்படுத்தல்' என்பதுதான் அது.

பிறந்த நாட்டில், அதுவும் நாம் வாழ்ந்த காலத்தில் ஒருவருக்கு பொன்னாடை போர்த்துதல், விருது வழங்கல் என்பது மிகுந்த உன்னதமான கௌரவம் என்று கருதப்பட்டது. இது ஏதோ பழம்பெருமை கூறும் கூற்றல்ல. சமூகத்தில் ஒருவரின் பணி, கணிக்கப்படும் அளவிற்கு, மதிக்கப்படும் அளவிற்கு, சரியாகச்சொன்னால் போற்றப்படும் அளவிற்கு கருதப்பட்டால் அவரை அந்த சமூகம் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கும் காலம் அது. வெறும் பட்டுத்துணியாக இருந்தாலும், போர்த்தப்படுவரின் தகுதியினால், போர்த்துபவரின் அருகதையினால் அது 'பொன்னால் ஆன ஆடை'யாகவே கருதப்படும் அளவிற்கு பெருமை பெற்றது.

விருதுகளும் அப்படியே. தான் வாழ்ந்த காலத்து தமிழ் இசைப்பிரியர்களின் நெஞ்சங்களில் தங்கிவிட்ட தவில்மேதை தட்சணாமூர்த்தி என்ற அந்த 'லயஞான குபேர பூபதி'க்கு அந்த விருது பொருந்தி வந்தது போல, எங்கள் இளமைக்காலத்தில் சில்லிடும் இரவுகளின் சீதளக்காற்றைக் கிழித்துக்கொண்டு ஒலித்த நெஞ்சைச்சிலிர்க்க வைக்கும் இசைநாடகப் பாடல்களுக்கு சொந்தமான எங்கள் 'நடிகமணி' வி.வி. வைரமுத்து அந்த விருதுக்கு பெருமை சேர்க்கவில்லையா?

இப்போதெல்லாம் யாருக்கு, எதற்கு என்று விவஸ்தையும் இல்லாமல், பொன்னாடையும், விருதுகளும் மலிந்துபோய் பொறுக்குபவர் பொறுக்கலாம், அள்ளுபவர் அள்ளலாம் என்ற நிலையில் கிடக்கிறது. விரக்தி என்றில்லை. வேதனையாக இருக்கிறது.

கொடுத்து கை சிவந்த கர்ணனைப்போல நடந்துகொள்ளும் ஆசையில் அலைமோதும் விழா நிர்வாகிகளுக்கு ஒரு பணிவான வேண்டுகோள். (கச்சேரிக்கும், உங்களுக்கும்) தாளம் போட்டவர்க்கும், ஒளி, ஒலியமைப்பில் உதவியவர்க்கும் (அது என்ன உதவியோ..!), மேடையை அலங்கரித்தவருக்கும், மேடையில் இருந்து அலங்கரித்தவர்க்கும், கோலம் போட்டவர்க்கும், கோஷம் போட்டவர்க்கும், இன்னும் இத்யாதி, இத்யாதி பணி செய்தவர்க்கும் கொடுக்கவேண்டிய தொகையை விட மேலதிகமாக எதுவும் செய்யவேண்டுமென்று உங்கள் நன்றிப்பெருக்கு உங்களைத் தூண்டினால், பொன்னாடை, விருதின் பெறுமதியை ஒரு வெள்ளை என்வலப்பில் (அல்லது ஏதாவது கலர் என்வலப்பாக இருக்கலாம். கறுப்பாக இருந்தால் நீங்கள் ஏதோ கவலையுடன் கொடுக்கிறீர்கள் என்று அவர்கள் நினைக்கலாம் என்ற நல்லெண்ணத்தில் சொன்னேன்) வைத்துக் கொடுத்து விடுங்களேன். அவர்களுக்கும் சந்தோசமாக இருக்கும்.

இனி இந்த மாலைச் சங்கதி. "மாலையில் நடக்கும் விழாக்கள் பற்றிய சங்கதிகளைத் தானே இவ்வளவு நேரமும் சொல்கிறீர்களே.. பிறகென்ன.. மாலைச்சங்கதி" என்று கேட்க நினைக்கிறீர்களா ?

நான் சொல்ல வந்தது – கழுத்தில் விழும் மாலைகள், விழாத மாலைகள், விழுந்தும் விழாத மாலைகள் பற்றியது.

"
சிலர் இருக்கிறார்கள்.
யாராவது மாலைபோட வந்தால்,
"உடுக்கை இழந்தவன் கைபோல" இவர்களது
கையும் தன்னிச்சையாக வந்து, கழுத்தில்
மாலை விழுந்து விடாமல், எப்படியோ தடுத்து
நிறுத்தி, போட்டவர் கையிலிருந்து (ஏறக்குறைய) பறித்து, மேசையில் அல்லது
பேச்சாளருக்குரிய பீடத்தில் போட்டு
விடுவார்கள். அத்தோடு மாலையின் பணி
முடிந்துவிடும். இனி அது குப்பைதான்..
"

பாவம், பெரிய பரிதாபம். மாலை கட்டுபவர்கள், எவ்வளவு பக்குவமாக சிவப்பென்றும், வெள்ளையென்றும், மஞ்சள் என்றும் பூப்பூவாக தெரிந்தெடுத்து ஒரு மாலையைக்கட்டி முடித்து என்ன நினைப்பார்கள். யாருடைய கழுத்தை அலங்கரிக்கப்போகிறதோ என்று தானே நினைப்பார்கள். அதில் தவறு ஒன்றுமில்லையே?

ஆனால் நடப்பதென்ன.. மாலைக்குரியவர்கள் சிலர் வராமல்போக, கட்டிய வாழைத் தடலுடன், அப்படியே கிடந்து.. பாரதிதாசன் வரிகளில் சொல்வதானால், "கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே.. இங்கு வேரில் பழுத்த பலா" என்ற ரீதியில் யாரும் சீந்தாமல் காய்ந்து, விழா மண்டபத்தின் பின் உள்ள குப்பைத்தொட்டியில் நேராக அடைக்கலம் புகும். இது கழுத்தில் விழாத மாலைகள்.

இனி சிலர் இருக்கிறார்கள். யாராவது மாலைபோட வந்தால், "உடுக்கை இழந்தவன் கைபோல" இவர்களது கையும் தன்னிச்சையாக வந்து, கழுத்தில் மாலை விழுந்து விடாமல், எப்படியோ தடுத்து நிறுத்தி, போட்டவர் கையிலிருந்து (ஏறக்குறைய) பறித்து, மேசையில் அல்லது பேச்சாளருக்குரிய பீடத்தில் போட்டு விடுவார்கள். அத்தோடு மாலையின் பணி முடிந்துவிடும். இனி அது குப்பைதான். இது தான் 'விழுந்தும் விழாத மாலை'. அப்படிச் செய்வதினால் அவர்கள் தங்கள் 'தன்னடக்கத்தை' காட்டுகிறார்களாம். மாலை, மரியாதை எல்லாம் அவர்களுக்கு ஒரு பொருட்டேயில்லையாம். எங்களை நம்பச் சொல்கிறார்கள்.

மகாகனம்' பொருந்திய திருவாளர். 'தன்னடக்கம்' அவர்களே, நீங்கள் எங்கே ஜீ.சி.ஈ படித்தீர்கள், எங்கேயெல்லாம் கலைமாணி, பெருமாணி, வெப்பமானி எல்லாம் படித்து முடித்தீர்கள், யார் யார் கோமான், சிகரம், சப்பறம் என்றெல்லாம் பட்டயம் தந்தார்கள் என்ற சங்கதிகளையெல்லாம் விலாவாரியாக முன்கூட்டியே, விழாக்காரருக்கும், நிகழ்ச்சி அறிவிப்பாள-ருக்கும் சொல்லி வைக்கத்தெரிந்த உங்க-ளுக்கு இந்த மாலை போட்டால் பிடிக்காது என்ற சங்கதியை ஏன் சொல்லமுடியாமல் போனது என்று அறியத்தருவீர்களா?

மாலை, பொன்னாடை, விருதுகளுக்கெல்லாம் நான் ஜென்மவிரோதியல்ல. அவற்றையெல்லாம் பந்தியில் பரிமாறுவதுபோல, அடுத்த இலைக்கு பருப்பு போடுங்கள் என்று கேட்பதுபோல, அவற்றுக்கான கௌரவத்தையே மலினப்படுத்துவதைத் தான் வெறுக்கிறேன்.

ஆனால் அப்படியே உங்களுக்கு கௌரவம் தரப்படுமிடத்து, அந்தக் கௌரவத்துக்கு கௌரவம் செய்யுங்கள். போட்ட மாலையையும், பொான்னாடையையும் உருவி எறியாத குறையாகச் செய்து, உங்களை கௌரவிக்க நினைத்தவர்களையும், கௌரவம் செய்தவர்களையும் அகௌரவப்படுத்தாதீர்கள்.

சிறுபிள்ளைகளுக்கும், இளைஞர்களுக்கும் நிகழ்ச்சி ஆதரவாளர் பெயர், விபரம் பொறித்த நினைவுப் பரிசில்களைக் கொடுங்கள். எவருக்கு என்றாலும் பிரயோசனமானதாகக் கொடுங்கள்.

சிலநேரங்களில் இவ்விழாக்களில் கூத்து ஒன்று நிகழ்த்துவார்கள். "வள்ளி திருமணம்". "சத்தியவான் சாவித்திரி" என்று நினைத்து விடாதீர்கள். கௌரவிப்பு வழக்கம்போல நடக்கும். அறிவிப்பாளர் சபையில் பார்வையை விட்டுத் துழாவி, யார் யாரையெல்லாமோ அழைப்பார். அவர்கள் மேடைக்கு வந்து கௌரவிக்க வேண்டியவர்களை இதுவரை அலசப்பட்ட சாதனங்களால் கௌரவித்து முடிப்பார்கள். அத்தோடு சங்கதி முடிந்ததென்று நினைத்து விடாதீர்கள். நன்றி மறப்பது நன்றன்று என்பதை மறந்தால் எப்படி? கௌரவிக்க வந்தவர்களை வேறு சிலர் வந்து கௌரவிப்பார்கள். பிறகு அவர்களை... சங்கிலித்தொடராக "கௌரவம்" என்ற நிகழ்வு தொடரும்.

இப்படியான ஒரு பொழுதில் அரங்கில் இருந்த நண்பர் ஒருவர் தான் வேகமாக அங்கிருந்து வெளியேறியதாகச் சொன்னார். ஏன் என்று கேட்டதிற்கு, தான் ஒருவர் தான் சபையில் கௌரவம் பெறவேண்டிய நிலையில் மிச்சமாக இருந்ததாகவும், போட்டோவிற்கு 'போஸ்' கொடுக்க பொருத்தமாக ஆடையணிந்து தயாராக வரவில்லை என்றதினால் அப்படிச் செய்தேன் என்று சிரிக்காமல் சொன்னார். எனக்கும் சிரிப்பு வரவில்லை.

மார்க் டுவைன் என்ற அமெரிக்க அங்கதச் சுவை எழுத்தாளர் (கிண்டல் எழுத்தாளர் என்று வைத்துக் கொள்வோமே) இந்தக் கௌரவச் (துரியோதனாதி கௌரவரைப் பற்றியதல்ல) சங்கதியைப் பற்றி இப்படிச் சொல்லியிருக்கிறார்.

"கௌரவத்திற்கான தகுதியிருந்தும் அது கிடைக்காமல் போனால் பரவாயில்லை. தகுதியில்லாமலே பெறும் கௌரவத்தை விட அது மேலானது"

It is better to deserve honors and not have them than to have them and not deserve them. ~ Mark Twain

■ ■ ■

*தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.*

*E-mail:thaiveedu@gmail.com*
*Fax: 416-849-0594*
*Tel: 416-646-3422*

# சுற்றயல் குருதிக்கலன் வியாதி (சுகுவி)
# PERIPHERAL VASCULAR DISEASE (PVD)



கந்தையா செந்தில்நாதன்
- Echo - Cardiogapher -
senthil@thaiveedu.com

## இதயம் மலர்கிறது - 3

இதயம் மலர்கிறது என்ற தொடர் கட்டுரைகளின் அடுத்த அம்சமாக சுற்றயல் குருதிக் கலன் வியாதியைப்பற்றி எழுதுவது சாலப் பொருந்தும் என நினைக்கின்றேன்.

நாங்கள் இங்கு கவனிக்கப்போவது இதயத்தில் இருந்து சுற்றயலிற்கு குருதியைக் கொண்டு செல்லும் நாடிகள் சுற்றயலில் இருந்து இதயத்திற்கு குருதியை கொண்டு வரும் நாளங்கள், நிணநீர்க்கலன்கள் என்பனவற்றையாகும்.

நன்கு கவனித்தால் இரு ஒரு மெதுவாக முன்னேறி வரும் குருதிச் சுற்றோட்ட நோய் என்று கூறலாம். குருதி விநியோகத்தைப் பெறும் பிரதான அங்கங்களாகிய மூளை, ஈரல், இதயம் போன்ற உறுப்புக்கள் போதிய அளவு குருதியைப் பெறாமல் பாதிக்கப் பட்டாலும் பொதுவாகக் கால்களும், பாதங்களுமே மிகவும் சாதாரணமாகப் பாதிக்கப் படுவதை அவதானிக்கக்கூடியதாக இருக் கின்றது. இதனால் போலும் சுற்றயல் குருதிக்கலன் வியாதியென்று இதற்குப் பெயரிட்டுள்ளார்கள்.

### எப்படி உருவாகின்றது.

இந்நோய் அநேகமாக குருதிக்குழாய் நாடியின் சுவர்கள் கடுமையாகித் தடிப்பதனால் ஏற்படுகின்றது. குருதிக்குழாய்கள் விரிந்து சுருங்கும் தன்மையை அதாவது மீள்தகவுத் தன்மையை இழந்து விடுவதுடன் குழாயின் உட்புறச் சுவரில் படியும் கொழுப்புப் பதார்த்தமும் மேற்கூறிய காரணிக்கு மெருகூட்டுவது போல் குழாயின் அடைப்பை மேலும் அதிகரிக்கச் செய்கின்றது. இந்நிகழ்வு எல்லாக் குருதிக் குழாய்களிலும் பரந்து பட்டுக் காணப்படலாம். பகுதியாக அடைபட்ட குழாய்களினூடாக குறிப்பிட்டளவு குருதியே அந்தந்த உறுப்புகளுக்கு பாய முடியும். குருதி விநியோகக் குறைவால் எல்லா அவையங்களுமே பாதிக்கப்படலாம்.

### காரணங்கள் என்ன?

வயது ஏற்றம் (55 வயது தாண்டியவர்கள்) ஆண்கள் கூடுதலாகப் பாதிக்கப்படுகிறார்கள்.

- மாதவிடாய் நின்றுவிட்ட பெண்களும் ஆண்கள் அளவு பாதிக்கப்படுகிறார்கள்.
- புகைப்பிடித்தல் - பீடி, சுருட்டு, சிகரட்டு, இரண்டாந்தரப் புகை
- கட்டுப்படாத நீரிழிவு நோய்
- பரம்பரை நோய் (கொலஸ்ரோல், கொழுப்புப் படிவு)
- இரத்தக் கொதிப்பு (உயர் இரத்த அழுத்தம்)

### எப்படி கட்டுப்படுத்தலாம்?

புகைத்தலை முற்று முழுதாகத் தவிர்த்தால் நீரிழிவு நோயைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கலாம்.
இரத்தக் கொதிப்பு, கொலஸ்ரோல் கொழுப்பு அதிகமாக உள்ளவர்கள் அவற்றைக் கட்டுப்பாட்டில் வைத்திருத்தல் வேண்டும்.
உடற்பயிற்சி,
உடற்பருமனைக் குறைத்தல்.

### வைத்தியர் எவ்வாறு நோயை அடையாளம் காணுவார்?

- குணங்குறிகள் மற்றும் உடல் நோய்கள் பற்றிய சரித்திரம் மூலம் அறிந்து கொள்ளலாம்.
- X கதிர் ஊடுபுகாத சாயம் ஒன்றினை நுண்ணிய குழாயினூடாக குருதிக்குழாயினுள் ஏற்றிய பின்பு குருதிக் குழாய்களை X கதிர்ப்படம் எடுப்பதன் மூலம் நாடிகள், நாளங்களில் உள்ள அடைப்பைக் கண்டுபிடிக்கலாம்.

காலிலும் கையிலும் இருந்து பெறப்படும் இரத்த அழுத்தங்களின் அளவீட்டின் கோட்டிற்கு மேலேயுள்ள அளவீடுகளை ஒன்றை ஒன்றினால் வகுத்தல் மூலம் பெறப்படும் அளவை ஒப்பிடுதல். காலில் பெறப்பட்ட இரத்த அழுத்தம் SL/DL (SL=Systolic blood pressure of leg DL=Diastolic blood pressure of leg)

கையில் பெறப்பட்ட இரத்த அழுத்தம் SH/DH(Systolic blood pressure of hand, DH=Diastolic blood pressure of hand)

ANKLE – BRACHIAL INDEX = SL/SH = ABI

ABI என்பது ஒரு விகிதாசாரதம். இதனை அட்டவணையில் உள்ள ABI பெறுமானங்களுடன் ஒப்பிட்டு பார்ப்பதன் மூலம் எவ்வளவு தூரம் உங்கள் நோய் வலுவடைந்துள்ளது என்பதை வைத்தியர் அறிந்து தெரிவிப்பார்.

- MRA (Magnetic Resonance Angiography) எனப்படும் காந்த சக்தியில் இயங்கும் உபகரணம் மூலம் அறிவார்கள்.
- ஓடும் மேடையில் ஓடவிட்டு குருதியோட்டத்தை கவனித்தல். (காலில் அடைப்புள்ளவர்கள் அதிக தூரம் ஓடமாட்டார்கள். காலில் பிடிப்பு ஏற்படும்.




- நாடி அடிக்கும் பொழுது குருதியானது பாய்ந்து செல்லும் பொழுது அதன் கனஅளவு ஒருவித அலை வடிவத்தை உருவாக்கும். இதை அளப்பதன் மூலம் காலிற்கு விநியோகிக்கப்படும் குருதியின் கனவளவு மாற்றத்தை அறிந்து கொள்ளலாம்.
- ULTRA SOUND மூலம் குருதியோயட்ட வேகத்தை அறிந்து அடைப்பு உள்ள பகுதியை அறிந்து கொள்ளுதல்.
- குருதியில் உள்ள கொழுப்பளவை அறிதல்.
- தொடையில் மேற்பகுதி இறையில் இருந்து பாதம் வரையுள்ள பகுதிகளினூடாக செல்லும் குருதிக் குழாய்களின் பகுதிகளை ஒவ்வொரு சிறு பகுதிகளாக DOPLER ULTRASOUND மூலம் பரிசோதித்து அடைப்பு ஏற்பட்டுள்ள பகுதிகளை அறிந்து கொள்ளுதல்.
- மேலும் பலவிதமான பரிசோதனைகள் உண்டு. அவற்றை மேற்கொண்டு தேவைப்படும் பட்சத்தில் வைத்தியசாலையில் செய்வார்கள்.

### வராமல் எப்படித் தடுக்கலாம்?

இலங்கையில் பீடி குடிப்பவர்களிடம் இந்நோய் அதிகமாகக் காணப்படுகின்றது. சிறிது தூரம் நடக்கும் பொழுதோ, துவிச்சக்கர வண்டியில் செல்லும் பொழுது காற்தசையில் பிடிப்பு ஏற்பட்டு தமது பயணத்தை சற்று நேரம் நிறுத்திய பின்பு தொடருவார்கள். பீடி, சுருட்டு, சிகரட் என்பன வற்றைத் தவிர்ப்பதன் மூலம் இவ்வாறு இடையிட்டு, இடையிட்டு வரும் தசைப்பிடிப்பை (Intermittent Claudication) தவிர்க்கலாம்.

- நீரிழிவு, இரத்தக் கொதிப்பு, குருதியில் அதிகொழுப்பு போன்ற நோய்களைக் கண்டறிந்து கட்டுப்பாட்டினுள் வைத்திருத்தல்.
- நோயற்றவர்கள் கூட அளவான இனிப்பு, கொழுப்பு, மாப்பொருள் கொண்ட உணவு வகைகளை அளவோடு உட்கொண்டு சமபல உணவுப் பழக்கத்தை நடைமுறையில் பின்பற்றுதல்.
- மதுபானம் அளவோடு பாவித்தல்.
- உடற்பருமனைக் குறைத்து உயரத்திற்கு ஏற்ப நிறையைப் பேணி வருதல்.
- உடற்பயிற்சி – நடத்தல், ஓடுதல், கயிறடித்தல்.

22ம் பக்கம் பார்க்க...









# FURNACE AIR FILTERS

# வெப்பமாக்கி குளிரூட்டிகளுக்குரிய காற்று வடிகட்டிகள்:



வேலா சுப்ரமணியம்
- Certified Home Inspector -
vela@thaiveedu.com


## வீடும் விடியலும் - 29

பொதுவாகக் கூறுவதானால் வீட்டுக்குரிய பராமரிப்பில் மிக முக்கிய இடம் வகிக்கும் காரணிகளில் ஒன்று காற்று வடிகட்டிகள். நிலக் கீழ் அறையில் பொருத்தப்பட்டிருக்கும் வெப்பமாக்கியுடன் (Furnace) இணைக்கப்பட்டிருக்கும் துருத்தி (Blower) காலநிலைக்கு ஏற்றவாறு சூடான அல்லது குளிரான காற்றை வீட்டின் பல பகுதிகளுக்கும் விநியோகிப்பதில் முக்கிய இடம் வகிக்கின்றது. குறிப்பாக கூறுவதானால் குளிர்காலத்தில் வீட்டில் இருக்கக்கூடிய குளிர்காற்றை உள் வாங்கி வெப்பமாக்கியூடாகச் செலுத்துவதன் மூலம் வெப்பமாக்கி அதன் பின்னர் வீட்டின் பல பகுதிகளுக்கும் விநியோகிப்பதன் மூலம் வீடு முழுவதையும் வெப்பமாக்குகின்றது. அதேபோல கோடை காலத்தில் வெப்பக் காற்றை உள்வாங்கி குளிரூட்டி ஊடாகச் செலுத்தி விநியோகிப்பதன்மூலம் வீடு முழுவதையும் குளிராக்குகின்றது. இத்தகைய தொழிற்பாட்டின் போது உள்வாங்கப்படும் காற்று வெப்பமாக்கப்படுவதற்கு அல்லது குளிராக்கப்படுவதற்கு முதல் வடிகட்டப்பட வேண்டும். எனவே குளிர்காலத்தில் மட்டுமல்ல கோடைக்காலத்திலும் இத்தகைய காற்று வடிகட்டிகளின் தொழிற்பாடு மிக அவசியமாக இருக்கின்றது.

வீட்டிற்குள் சாதாரணமாக கண்ணுக்குத் தெரியாத அளவில் தூசுப் படிமாணங்கள் நுண் (Micro) அளவில் இருக்கும். வீட்டில் இருக்கக்கூடிய Carpet, துணி, வீட்டுப் பிராணிகள், மரங்கள், பூக்களின் மகரந்தங்கள், பக்றீரியா, மோல்ட் எமது நாளாந்த செயற்பாடுகள் போன்ற பல காரணிகள் மூலம் வீட்டிற்குள் உள்ள வளிமண்டலம் தூசு நிறைந்த வளிமண்டலமாக மாற்றப்படுகிறது. இத்தகைய மாசு படிந்த காற்று சுத்திகரிக்கப்படாது துருத்தி (Blower) மூலமாக வீடுமுழுவதும் பரப்பப்படும் போது அத்தகைய மாசு படிந்த காற்றையே சுவாசிக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலைக்குத் தள்ளப்படுகிறோம். பல ஆராய்ச்சிகளின்படி சுவாசம் சம்பந்தமான பலவித நோய்களுக்கும் அத்துடன் ஒவ்வாமை (Allergy) சுவாசப் புற்றுநோய், தொய்வு போன்ற பல நோய்களுக்கும் வீட்டில் உள்ள இத்தகைய மாசுபடிந்த காற்றை திரும்பத் திரும்ப சுவாசிப்பதே காரணம் எனக் கூறப்-படுகின்றது.

எனவே இத்தகைய நோய்களில் இருந்து விடுபட்டு நோயற்றவர்களாக வாழவைக்கக்கூடிய காரணிகளில் முக்கியமாக விளங்கும் காற்று வடிகட்டிகளை கிரமமாக மாற்றுவதில் ஒவ்வொருவரும் கவனம் செலுத்த வேண்டியது மிக அவசியமாகும். பல வீட்டுரிமையாளர்கள் வீட்டில் இத்தகைய Filterஐ மாற்ற வேண்டும் என்பது பற்றி அறியாமலே பல ஆண்டுகாலம் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது துரதிஸ்டவசமானது. சிலருக்கு இத்தகைய Filterஐ எங்கு மாற்றுவது என்பது தெரியாமல் இருக்கின்றது. பலர் குளிர்காலம் தொடங்கும் போது மட்டும் மாற்றினால் போதும் எனத் தவறாக புரிந்துகொண்டிருக்கிறார்கள்.

மிக இலகுவாகச் செய்யக்கூடிய வீட்டுப் பராமரிப்பில் இதுவும் ஒன்று. பொதுவாகக் கூறுவதானால் 5-10 நிமிடத்தில் ஒரு Fillerஐ மாற்றிவிட முடியும். பொதுவாக எதுவித ஆயுதமும் பாவிக்காமல் மிக இலகுவாக மாற்றக்கூடிய விதத்தில் செங்குத்தாக வெப்பமாக்கியில் பொருத்தப்பட்டிருக்கும் துருத்திக்குப் பக்கத்தில் இதனை இழுத்து எடுக்கக்கூடிய விதத்தில் பொருத்தி இருப்பார்கள். (படம் 1ஐ பார்க்கவும்)

ஒருசில பழைய இயந்திரங்களில் மட்டும் வெப்பமாக்கியின் வெளிக்கதவைத் திறந்து, அதன் பின் உள்ளே இருக்கும் இத்தகைய வடிகட்டிகளை இழுத்து எடுத்து மாற்ற வேண்டி இருக்கும்.


படம் 1



படம் 2


படம் 3


படம் 4


படம் 5


படம் 6

### காற்று வடிகட்டிகளின் வகைகள்

பொதுவாக பாவனை அடிப்படையில் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

- Reusable – திரும்பத்திரும்ப பாவிக்கக் கூடியவை
- Disposable – மாற்றீடு செய்யப்படுபவை.

தொழிற்படும் விதத்தில் பலவகையான காற்று வடிகட்டிகள் சந்தைப்படுத்தப்படுகின்றன. அவைபற்றி சற்று விரிவாகப்பார்ப்போம்.

### Fiberglass Panel Filters

பொதுவாக ஒரு அங்குலத் தடிப்பில் இத்தகைய வடிகட்டிகள் ஆரம்பத்தில் கட்டிட அமைப்பாளர்களால் பொருத்தப்பட்டிருக்கும். Fiberglassல் செய்யப்பட்ட இவை மிக மலிவானவையும் செயற்றிறன் அற்றவையும் ஆகும். பெரிய அளவு கொண்ட துணிக்கைகளை மட்டும் தடுக்கக்கூடியவை. சுமார் 5%க்கு உட்பட்ட அளவு தூசு மட்டுமே இத்தகைய Filterஆல் தடுக்கப்படுகிறதென ஆராய்சிகள் கூறுகின்றன. எமது நாட்டு பன்னாடையை நினைவுக்கு கொண்டுவருபவை இவை. விலை $1 - 3 டொலர்கள். (படம் 2ஐ பார்க்கவும்)

### Washable 'Electrostatic" Filters

தூசுப் படிமங்களை கவர்ந்து இழுக்கக் கூடிய தன்மை கொண்ட இவை முதற் கூறப்பட்ட ரகத்தைவிடச் சிறந்தவை என்றாலும் 15-20% அழுக்குகள் மட்டுமே இத்தகைய வடிகட்டிகளால் தடுக்கப்படுகின்றன. திரும்பத் திரும்ப கழுவினாலும் 100% சுத்தமாகக் கழுவி விடுவதாக நாம் நினைத்தாலும் கண்ணுக்கு புலனாகாத நுண் அளவு கொண்ட படிமங்களை அகற்றுவது சுலபம் அல்ல. விலை $ 25-30 டொலர். (படம் 3ஐ பார்க்கவும்)

### Pleated/Pleated 'Allergy" Filters

பல மடிப்புக்களைக் கொண்ட இத்தகைய வடிகட்டிகள் செயற்தின் கூடியவை. விலைக்கேற்றவாறு பல தரங்களில் இவற்றைப் பெற்றுக்கொள்ள முடியும்.

ஒவ்வாமை தொய்வு போன்ற நோய்கள் உள்ளவர்களுக்காகச் சிறப்பாகத் தயாரிக்கப் பட்டவையும் உண்டு. சுமார் 35-50% செயற்றிறன் கொண்டவையாகக் கருதப்படுகின்றது. $ விலை 10-30 டொலர். (படம் 4ஐ பார்க்கவும்)

### Electronic Air Cleaners

ஒரு வகைக் காந்த சக்தி வளியில் உள்ள அழுக்குகளைக் கவர்ந்து இழுத்து உடனுக்குடன் எரித்து விடும் தன்மை கொண்டவையாகக் காணப்படுகின்றது. ஆரம்ப கால செலவு சற்று அதிகமாக இருந்தாலும் காலப்போக்கில் மிகப் பலன் அளிக்கக்கூடியவை. அதாவது ஆரம்பச் செலவு $700 – 800 டொலராக இருந்தாலும் Filter பகுதியைக் கழுவிக் கழுவிப் பாவிக்கலாம். சுகாதாரத்திற்குச் சிறந்தது. (படம் 5ஐ பார்க்கவும்)

### HEAP Filters (High Efficiency Particulate Air Filter)

மிகச்சக்திவாய்ந்த இத்தகை Filtersஐ சாதாரண வீடுகளில் பாவிப்பதில்லை. வைத்திய சாலை போன்ற வர்த்தக ஸ்தாபனங்களில் பாவிக்கப்படும். இதன் விலை $ 250 – 450 டொலர் வரை இருக்கும். (படம் 6ஐ பார்க்கவும்)

### சரியான Filterஐ தெரிவு செய்தல்

ஒவ்வாமை, அல்லது சூவசம் சம்பந்தமான நோய்கள் வீட்டில் யாருக்காவது இருந்தால் இதில் அதிக கவனம் செலுத்துதல் சாலச் சிறந்தது. செலவு சற்று அதிகமானாலும் Electronic Filterஐ போடுவதன் மூலம் தொடரும் மருத்துவச் செலவைக் குறைத்து நலமுடன் வாழலாம்.

அத்தகைய இடர்கள் இல்லாதவிடத்து Pleated Filter ஐ சகலரும் பாவிப்பது பல விதத்திலும் நன்மை தரக்கூடியதும் செலவு குறைந்ததும் ஆகும்.

### பராமரிப்பு

Pleated Filterஐ பாவிப்பவர்கள் 3 மாத்திற்கு ஒருமுறையாவது அவற்றை மாற்றி விடல் வேண்டும்.

Fiberglass Filter பாவிப்பவர்கள் மாதம் ஒருமுறை மாற்ற வேண்டும். பொதுவாகக் கூறுவதானால் உற்பத்தியாளர்களின் சிபாரிசினை பின்பற்றல் சாலச் சிறந்தது.

வீட்டில் நிர்மாண திருத்த வேலைகள் நடைபெறும் போது அடிக்கடி மாற்ற வேண்டிய தேவை இருக்கும்.

■ ■ ■

# சமாதானச் சூரியன்...

4ம் பக்கத் தொடர்ச்சி...

களின் சனத்தொகையானது இரண்டாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் 33சதவீத மாக உயர்ந்தது. 1947ல் இத்தகைய விகி-தாசாரம் மேலும் உயர்ந்து 55 சதவீதமான யூதர்களும் 45 சதவீதமான ஆரேபியர்களும் பலஸ்தீனத்தின் விதியை நிர்ணயிப்பவர்களா கினர். இதேபோன்ற நிலைமை இலங்கை யின் கிழக்கு மாகாணத்திலும் ஏற்படடிருக்-கின்றமையைக் காணமுடிகின்றது. இதுவே சமாதானத்துக்கான தடையாக அமையக் காரணமாகிறது.

இன்றைய இஸ்ரேலில் வாழும் 73 இலட்சம் யூதர்கள் 42 இலட்சம் பலஸ்தீனர்களுடன் இணைந்தால் தமது நிலைபாதிக்கப்படும் என்று யூதர்கள் எண்ணிக்கொண்டிருக்கின் றர்கள். இந்நிலையில் ஒரு நாடு என்பதன் கீழ் ஒரு தீர்வுத்திட்டமானது சாத்தியமானதொன்றாக இஸ்ரேலியர்கள் ஒருபோதும் நினைக்கப்பபோவதுமில்லை. அராபியர்களின் விகிதாசாரத்துக்கு ஏற்ப இஸ்ரேலியர்கள் தாங்கள் பிடித்த நிலங்களை விட்டுக் கொடுக்கப்போவதில்லை.

1948இல் போர் நிறுத்தம் ஏற்பட்டதன் பின் பாக 1949ல் பாலஸ்தீனர்களுக்கான நிலங் கள் மேற்குக் கரையிலும் காஸாப் பகுதி-யிலும் இருக்கும் வரையாக எல்லை வரை யறை செய்யப்பட்டிருந்தது. இந்த இரு பகுதி கள் தவிர முழுவதும் இஸ்ரேலியர்களின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தது. மேற்கு நதிப் பகுதியில் 26 சதவீதமான நிலம் 8 லட்சம் அகதிகளுக்கும் தஞ்சம் கொடுத்திருந்தது.

இஸ்ரேலியர்களின் வாதத்தின்படி அரேபியர்-களுக்கு பலஸ்தீன் என்ற பிரதேசம் இருக்க வில்லை என்றும் 17ம் 18ம் நூற்றாண்டில் எபிரேய யூத மூதாதையர் நாட்டில் (எரட்ஸ்-இஸ்ரேல்) ஒருலட்சம் மக்களே இருந்தனர் என்றும் அதில் 50ஆயிரம் பேர் அரேபியர் கள் என்றும் அவர்கள் பிரித்தானியாவின-தும் பெரிய நிலச்சுவாந்தர்களினதும் தொழி லாளிகளாகவும் கொண்டுவரப்பட்டவர்கள் என்றும் பலஸ்தீனர்ககள் அல்ல என்றும் கூறிக்கொண்டிருக்கின்றார்கள். இந்த நிலை யில் பலஸ்தீனர்களுக்கு நிலமே கொடுக்-கக்கூடாது என்ற வாதம் முன்வைக்கப்படு-கின்றது.

இதன் நடுவே சமாதானப் பேச்சுவார்த்தை கள் தோன்றுவதற்கான கட்டாயம் பாலஸ்தீ-னர்களினதும் அவர்களது அரேபிய லீக்கின-தும் வளர்ச்சியினால் வளர்த்தெடுக்கப்படு-கிறது என்றே கூறலாம். நவம்பர் மாதம் 15ம் திகதி 1988ல் அல்ஜீரியாவில் கூடிய பலஸ்தீனர்கள் தமது சுதந்திர நாடாக பலஸ்தீனத்தை நிர்ணயம் செய்திருந்தனர். இதனை அரபு லீக்கும் அங்கீகரித்திருந்தது.

1967ல் நடந்த ஆறு நாள் அரபு இஸ்ரேல் யுத்தத்தின் விளைவாக மேற்குக் கரை, காசா கோலான் குன்றுப் பகுதிகள் யாவும் இஸ்ரேலின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டிருந்தன. அதனால் காசாவிலும் மேற்குப் பகுதியிலும் இஸ்ரேலிய குடியேற்-றங்கள் அமைக்கும் முயற்சிகளை இஸ்ரேல் மேற்கொண்டிருந்தது.

இந்த ஆக்கிரமிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து யூத குடியிருப்பாளர்களை அகற்றுவதற்கும் சமதானத்தை ஏற்படுத்துவதற்கும் இஸ்ரே-லியர்களின் எதிர்ப்பு பிரதானமாக இருந்தமை சமாதானத்துக்கு இடையூறாக இருந்தது.

ஏற்கனவே இஸ்ரேல் ஆக்கிரமித்த பகுதி களில் இருந்த அரேபியாகளின் குடியிருப்-புக்கள் அழிக்கப்படவதும் யூதக்குடியிருப்பு களை ஏற்படுத்துவதும் அரசியல் பிரச்சினை யாக உருவெடுத்திருக்கின்றது. இலங்கை யில் காணப்படுவது போன்று தமிழ்ப்பகுதி-களில் ஏற்படுத்திய சிங்களக் குடியேற்றங்க-ளைப் பாதுகாக்க ஆயுதங்களும் இராணுவ மும் வழங்கப்படவது போன்ற நிலைமை தான் ஆக்கிரமிக்கப்பட்ட இஸ்ரேலிலும் இருந்தது.

அரசபயங்கரவாதத்தினை இஸ்ரேல் பயன்-படுத்துவதன் மூலமும் அரேபியர்களை அகதி களாக்கியும் கொன்று குவித்தும் வந்தது இதனைத் தற்காப்பு என்றும் கூறியது, மறு புறமாக ஆயுதமேந்திய பாட்டா இயக்கத்தி-னதும் ஹமாஸ் இயக்கத்தினதும் பாரிய எதிர்ப்பகள் இஸ்ரேலில் குண்டுவெடிப்புக்க-ளையும் கொலைகளையும் தொடரச் செய்தன இன்நிலை தொடர விடாமல் சமாதானம் தேவை என்பதனை உலக நாடுகள் வலி-யுறுத்தத் தொடங்கின.

இஸ்ரேல் என்ற ஒரு நாடு இருப்பதனை அரேபியாகள் ஏற்பதுமில்லை. அரேபியர்க-ளின் பாடப்புத்தத்தில் அப்படி ஒரு நாடு இருப்பதுமில்லை. என்ற நிலையில் தாங்க-ளாக ஒற்றுமைப்பட முடியாதசூழலில் இரு-பகுதியினரும் தமத கசப்புணர்வை வளர்த்த னர். எவ்வாறாயினும் இஸ்ரேலினை அரேபியர்கள் ஏற்றுக்கொள்ளாத நிலையே தொடர்ந்தது இந்நிலையில்தான் சமாதானத் தலையீடுகள் இஸ்ரேலை ஒரு நாடாக எற்றுக்கொள்ளுவதற்கு அரபுநாடுகள் இணக் கம் கொள்ளவைத்தன இவ்வித உடன்பாடு கொண்டுள்ளமை ஒன்றே முதலில் சமாதா-னத்திற்கு ஒரு வழியாக அமைந்திருந்தது.

இஸ்ரேலின் எதிரிகளாகவும் இஸ்ரேலை அழித்துவிடவும் கங்கனம் கட்டிக்கொண்டி-ருக்கும் ஈரானுக்கு இடைஞ்சலைக் கொடுப்-பதன் மூலம் சமாதானத்தினை ஏற்படுத்த-லாம் என்று மேற்கு நாடுகள் எண்ணுகின்-றன. ஈரான் அரபுநாடாக இல்லாத போதிலும் அமெரிக்காவின் எதிரியாக இருப்பது ஒன்றே இஸ்ரேலை அழிக்க ஈரான் முனைவதற்குக் காரணமாகியது. பலஸ்தீனத்துக்குப் பலவழி களில் உதவிய சதாம் ஹுசையினின் ஈராக்கிய அரசினை அமெரிக்கா அடியோடு களைந்துவிட்டிருந்தாலும் அராபிய எதிர்ப்பு ணர்வு இஸ்ரேலுக்கு எதிராக இருப்பதனைக் குறைப்பதற்குச் சமாதானம் ஒன்று தேவைப் படுகிறது.

சமாதானம் என்பது மேற்கு நாடுகளின் அரசியல் அகராதியில் காலம் கடத்தும் முயற்சியா என்று எண்ணவும் தோன்று கிறது. ஆயினும் கூட கால நிர்ப்பந்தங்களி-னால் இரண்டு பகுதியினரும் ஏற்றுக்கொள்-ளும் திட்டம் சமாதானத் திட்டமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

2005 செப்ரெம்பர் இருபத்தாறாம் திகதி ஜசீர் அரபாத் சைமன் பெரோஸ் இருவர-தும் சமாதான முயற்சி 38வருட இஸ்ரேலின் ஆக்கிரமிப்பைக் குறைத்திருந்த பொழுதி-லும் உடன்பாடு எட்டப்படாத போர் தொட-ரத்தான் செய்தது. உடன்பாடு எவ்விதம் சாத்தியமாகும் என்பது சமாதான வரை விலும் அதனை நடைமுறைப்படுத்தும் உறுதி யிலும் தங்கியிருக்கிறது. அமெரிக்காவின் ஒவ்வொரு அரசுகளும் மத்திய கிழக்கின் சமாதானத்தினை வலியுறுத்தி வருகின்றன. தொடர்ந்து அமெரிக்கா மேற்கொண்டுவந்த சமாதான முயற்சிகளில் 2008 ஜுன் மாதம் ஒரு திருப்புமுனையாக அமைகிறது. பல திருப்புமுனைகளை கொண்ட சமாதானப் பாதை தொடர்ந்து நீண்டுகொண்டேயிருக்-கிறது.

உலகின் கொந்தளிப்பாக இருக்கும் பிர-தேசங்களில் மத்திய கிழக்கும், தென்னா-சியாவும் முக்கியமாயுள்ளன. இரண்டு பிரதேசங்களிலும் ஏற்படுத்தப்படப்போகும் 'சமாதானம் பிரதேச உடன்பாட்டினை வலியு-றுத்துவதாக அமைய வேண்டும் சமாதானத் தை மேற்குலகுமே கொண்டுவரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்கள் சமாதா-னத்துக்காக எத்தகைய சகிப்புத் தன்மை-யினையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலை தொடரவேண்டும். இவ்விரு பகுதிகளிலும் அமெரிக்காவோ இந்தியா வோ ஏனைய அராபிய நாடுகளோ போருக் கான சாதக சூழலை ஏற்படுத்தாது ஒரு பகுதியினரை மற்றவருக்கெதிராகத் தூண்டிப் போர் நடத்தாது பார்த்துக்கொள்ள வேண்டி யதே சமாதான நடுவர்களுச் செய்யக்கூடிய உதவியாக அமையும்

# ‘Power of Sale’இல் வீடு வாங்குவது...?

ஒரு சமுதாயத்தின் முன்னேற்றம் என்பது ஒவ்வொரு தனி மனித முன்னேற்றங்களின் வெளிப்பாடே. இன்று நாம் அன்றாடம் தெருக்களில் காணும் வாகனங்கள் ஈறாக, சுமார் பத்து ஆண்டு இடைவெளி என்பது எமது பொருளாதார முன்னேற்றத்தில் ஓர் குறுகிய கால வளர்ச்சியே. தனி நபர் வளர்ச்சியின் அடிப்படைக் காரணிகளில் ஒன்றாக குறிப்பிடக் கூடியது வீட்டு விலை அதிகரிப்பும் வட்டி விகிதக் குறைப்பும். கடந்த காலங்களில் நாம் இவ் செயற்பாட்டால் அனுபவித்த சலுகைகள் இன்னும் வளர்ந்து செல்லும் என்பது பொருளியல் கணிப்பாளர்களின் கருத்து. அதன் நிமித்தம் குறைந்து செல்லும் வட்டி விகிதத்தினை சாதகமாக்கி நீங்களும் உங்கள் சொத்துக்களை பெருக்கிக் கொள்வதற்கு திட்டமிட்டுக் கொள்ளுங்கள்.

நாம் எமது அயராத உழைப்பின் அடையாளமாக பெற்றுக்கொண்ட சொத்துக்களை உரிய முறையில் அனுபவிப்பது மட்டுமன்றி காலத்துக்கு காலம் அவற்றினை பேணிப் பாதுகாக்கவும் வேண்டும். அந்தவகையில் கோடைக்கால வீட்டுப் பராமரிப்புப் பற்றிய சில தகவல்களுடன் நேயர்களின் கேள்விகளை பரிசீலிப்போம்.

CLEAN AND SEAL DECKS தொடர்ச்சியாக வெயில் இருக்கக்கூடிய மூன்று நாட்களை தெரிந்தெடுத்து, DECK நன்றாக காய்ந்த பின்னர் ‘DECK CLEANER” கொண்டு அரமிட்டு துப்பரவு செய்த பின்னர் மீண்டும் ஓர் நாள் நன்றாக காய்ந்த பின்னர் DECK SEALER பூசிக்கொள்ளலாம்.

வீட்டின் வெளிப்புற சுவர்கள் யன்னல்களை கழுவுதல், சாதாரண, தோட்டத்தில் பாவிக்கும் தண்ணீர் குழாயின் உதவியுடனேயே நீங்கள் இதனை செய்யலாம்.

யன்னல் ஓரங்கள் மற்றும் கதவோரங்களில் காணப்படும் இடைவெளிகளை அடைத்துக் கொள்ளுங்கள் (CAULKING)

WASHER / DRYER இவற்றின் சுற்றுப்புறங்கள் மற்றும் ‘DRYER VENT” பகுதி-




களில் காணப்படும் மாசுக்களை அகற்றுதல் மட்டுமன்றி வெளியேறும் வளி தடங்கலின்றி செல்வதற்கு வழி வகுத்துக்கொள்ளுங்கள்.

A/C. குளிரூட்டிகளை செப்பனிடுவதற்கும் பராமரிப்பதற்கும் கோடைக்காலமே உகந்தது. சுற்றுப்புறங்களில் காணப்படும் குப்பை கூழங்களை அகற்றி, புற்கள் மற்றும் தாவரங்கள் இடையூறு இன்றி பாதுகாத்தல் வேண்டும்.

ATTIK FAN வீட்டு CELING பகுதியில் காணப்படும் இக் காற்றகற்றிகள் (புதிதாக நிர்மாணிக்கப்படுகின்ற வீடுகளில், இரண்டாவது மாடி குளியல் அறைகளில் காணப்படும்) குறைந்த செலவில் வீட்டிலுள்ள சூடான காற்றினை அகற்றவல்லது. அவற்றை சுத்தம் செய்வதுடன் அதன் பயனை முற்றிலும் அனுபவிப்பதும் நல்லது.

தன்னிச்சையாக இயங்கும் விளக்குகள் மற்றும் தண்ணீர் வழங்கிகளை சரிபாருங்கள். வீடுகளில் Alarm System வைத்திருப்பவர்கள் அவற்றினை பரிசீலித்து பார்த்தல் வருமுன் காப்போன் முறையாகும். Smoke Detectors மற்றும் ‘Co” detectorsகளையும் சரிபாருங்கள்.

சீமெண்ட் தரைகளில் காணப்படும் வெடிப்புக்கள் மற்றும் கார்தரிப்பு இடங்களில் காணப்படும் பழுதுகளை சீர்திருத்தி அமைக்கலாம். பொதுவாக இவ்வாறான பகுதிகளை செப்பனிடுவதற்கு முன்னர் கூடிய வேகத்தில் தண்ணீரினை பாய்ச்சி துப்புரவு செய்தல் வேண்டும்.

குளியல் கிடங்குகள் வைத்திருப்பவர்கள் அவற்றினை உரிய முறையில் பேணுதல் நன்று.

புற்தரைகள்; ஒரு வீட்டின் அழகு என்பது சுற்றுப்புற அழகில் மிகவும் தங்கியிருக்கின்றது. களைகள் அகற்றி உரிய பசளைகள் இட்டு முறைப்படி வெட்டி புற்தரைகளை பாதுகாப்பதற்கு இதுவே உரிய சந்தர்ப்பம்.

மேலே தரப்பட்ட தகவல்கள் நிட்சயம் உதவும் என்கின்ற நம்பிக்கையில் உங்கள் கேள்விகளுக்கு செல்வோம்.



**கருணா கோபாலபிள்ளை**
- வீடு விற்பனை முகவர் -
karunagopal@thaiveedu.com

**மாடிப்படிகளில் ஏற இறங்க உதவிக்காக பொருத்தப்படும் கைபிடிகள் நான் வாங்கிய வீட்டில் இல்லை. அதுமட்டுமல்லாது அவ்வாறு இருந்ததற்கான அடையாளமும் இல்லை. இதனை எவ்வாறு சரிசெய்யலாம்.**

குமரன்.ஆ

படிகள் உள்ள ஒவ்வொரு இடங்களில் இவ் உதவி உபகரணங்கள் பொருத்தப்பட வேண்டியது நியதி. அதுமட்டுமல்லாது இவை சட்ட ரீதியானதும் கூட. பாதுகாப்பு கருதி நாம் வீடுகளில் வைத்திருக்கும் புகையறி கருவிகள், தீயணைப்பு சிலிண்டர்கள் மற்றும் இதர உபகரணங்கள் போன்று நீங்கள் கூறியதும் ஓர் அத்தியாவசிய இணைப்பே. இவற்றினை சீரமைத்துக் கொள்வதற்கு ஏற்படும் செலவு மிக குறைவானதே. நீங்களாகவே வேண்டுமானாலும் அவற்றினை வாங்கி பொருத்திக் கொள்ளலாம். Home Depot மற்றும் அதுபோன்ற கடைகளில் உதவிக்கு இருப்பவர்களிடம் விபரம் பெற்று செய்யுங்கள். (படிகளின் நீளம் தெரிந்திருந்தால் நன்று)

**நானும் எனது மனைவியும் இணைந்து வீடு வாங்கி இன்றுடன் மூன்று வருடங்கள். சில பல காரணங்**

*13ம் பக்கம் பார்க்க...*

# 'Power of Sale'இல் வீடு...

11ம் பக்கத் தொடர்ச்சி...

**களால் நான் (Bank Ruptey) வங்கு ரோத்துக்கு வந்துவிட்டேன். இதனால் நான் வீட்டை விட்டு வெளியேற்றப் பட வாய்ப்புள்ளதா?**

சுரேன்.கே

இக் கேள்வி நிட்சயம் ஓர் வழக்கறிஞருக்கு உரியதே. நான் அறிந்தவரை நீங்கள் குடியிருக்கும் வீட்டிலிருந்து (மாதாந்த கட்டுப்பணம் செலுத்தும் வரை) உங்களை வெளியேற்ற முடியாது. இருப்பினும் எதிர் காலத்தில் நீங்கள் அவ் வீட்டினை விற்கும் போது அவ்வீட்டில் மீதமிருக்கும் சொத்தில் ஒரு பகுதியினை உங்களுக்காக கடன் வழங்கியவர்கள் தகுந்த ஆதாரத்துடன் பெற்றுக்கொள்ள வாய்ப்புண்டு. இதுபற்றி மேலதிக தகவல்களுக்கு ஓர் வழக்கறிஞ்ஞரை நாடுதல் நன்று.

**'Power of Sale' இல் வீடு வாங்குவது பற்றிய ஓர் விளக்கம் தர முடியுமா? இது சார்பாக பலரிடம் பல்வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றது.**

சங்கர்.சி

நிட்சயமாக 'Power of Sale'இல் வீடு வாங்குவது எனும் போது பொதுவாகவே ஓர் கருத்து 'நாங்கள் நிகர லாபத்தில் வாங்குகின்றோம்" என்பதுதான். ஆனால் அது எவ்வளவு தூரம் உண்மையான கருத்து என்று பார்ப்போம்.

ஒரு வீடு 'Power of Sale'இல் சந்தைப் படுத்தப்படுவதற்கு முன்னர், அவ் வீடானது அந்நிலைக்கு வந்தமைக்கான காரணி- களை ஆராய வேண்டும். உதாரணமாக சட்டத்திற்கு புறம்பான நடவடிக்கைகள் நடந்த இடமாக இருக்கலாம். சுகாதாரத்திற்கு எதிரான விளைவுகள் ஏற்படுத்த வல்ல வீடாக இருக்கலாம். இவ்வாறு பல காரணங்களின் அடிப்படையிலும், சில வீட்டு உரிமையாளர்கள் 'Mortgage' செலுத்த முடியாமல் போவதாலும், இவ் வீடுகள் இம் முறை மூலம் சந்தைப்படுத்தப்படுகின்றது. சாதாரணமாக சந்தைப்படுத்தப்படும் வீட்டிற்கும் 'Power of Sale' முறை மூலம் விற்கப் படும் வீடுகளுக்கும் கொள்வனவு அடிப்படையில் பலத்த வேறுபாடுகள் உண்டு. இவ் வீடுகளை விற்கும் போது 'As is, where is' என்று கூறப்படும், நீங்கள் என்ன பார்க்கின் றீர்களோ அதனை அப்படியே பெற்றுக் கொள்கிறீர்கள். அவ்வீட்டில் அல்லது அவ் வீடு சார்ந்து மறைந்திருக்கும் அனைத்து சிக்கல்கள், பிரச்சினைகள் யாவும் கொள்வனவாளரைப் பொறுத்ததே. சாதாரணமாக பயன்படுத்தும் வீடு கொள்வனவுப் பத்திரத்தினை விடுத்து இதற்கென விற்பனையாளர்களால் உருவாக்கப்படும் பத்திரங்களையே அதிகம் பயன்படுத்துகிறோம். அதன் உள்நோக்கம், வீடு விற்பனை செய்பவர்கள் வாங்குபவர்களிடம் முழுப் பொறுப்பினையும் ஒப்படைக்கின்றார்கள். அதுமட்டுமன்றி வீடு கைமாறும் கடைசி நிமிடம் வரை அவ்வீடு கொள்வனவானது இடை நிறுத்தப்படும் சாத்தியக்கூறுகளும் உண்டு. இவ்வாறான இன்னும் பல சிக்கல் நிறைந்த வீட்டினை தெரிவு செய்யும் போது நடை முறை விலையினை நாம் ஏன் செலுத்த வேண்டும்? சற்று சிந்திப்போம்!!

**வீடு வாங்குவது என்பது தேவை, இப்போது அவ் அடிப்படைத் தேவை என்பது சற்று வளர்ந்து வீடு கட்டிக்கொள்வது என்று மாறிவருகின்றது. எனக்கும் அவ்வாறு செய்யலாம் என்று தோன்றுகின்றது. இதுபற்றிய உங்கள் கருத்து என்ன?**

கீர்த்திகா.சி

யாவும் அவரவர் தேவையையும் வசதியையும் பொறுத்ததே. சுமார் $700,000 தொடக்கம் $1 Million வரை வீடு சார்பாக செலவிட விரும்புகிறவர்களுக்கு இது ஓர் நல்ல முடிவு. இதற்கென தனியாக காணிக்கு செலவிடுகின்ற பணம் தவிர்த்து ஒரு சதுர அடி வீட்டினை கட்டிக்கொள்வதற்கு ஏற்படும் செலவு $120 - $150வரை ஆகுகின்றது. சுமார் 3000 சதுர அடி வீடு கட்டுவதற்கு $450,000 வரை ஆகலாம். இவை தவிர்த்து சற்று ஆடம்பரமாக அமைத்துக்கொள்ள விரும்புகிறவர்கள் சுமார் $150 தொடக்கம் $200 வரை சதுர அடிக்கு செலவிட்டு கொள்ளலாம். இதற்கான செயன்முறைகளை மேற்கொள்வதற்காக சில தொழில் நிறுவனங்கள் உண்டு. வீடு சார்துறையினரின் உதவியுடன் தரமான நிறுவனங்களை இனம்கண்டு அவர்களுடன் பொருந்திக் கொள்வதால் "அ" முதல் " ∴ " வரையான செயன்முறைகளை தரமாக பெற்றுக்கொள்ள முடியும்.

நன்றி நேயர்களே,
இதுவரை நாம் பார்த்த தரவுகளுடன் ஓர் மிக முக்கியமான தரவொன்றினையும் தந்து விடைபெறுகின்றேன்.

தற்செயலாக நான் அறிந்துகொண்ட வரையில் சுமார் 90%மான நம்மவர்கள், 'உயில்" எழுதி வைக்காமலே வாழ்ந்து வருகின் றார்கள். எமக்குப் பின் நாம் முயன்று சேர்த்தவை யாவும் யார், யார் பங்கிட்டுக் கொள்ளலாம் என்பதை மூன்றாமவர் தீர்மானிப்பதன் மூலம் எம்மை சார்ந்தவர்களை ஓர் இக்கட்டான நிலையில் விட்டுச் செல்கிறோம். தயவு செய்து உங்களுக்கு கிடைக்கும் முதல் சந்தர்ப்பத்திலேயே அதற்குரிய ஏற்பாடுகளை செய்துகொள்ளுங்கள்.

வாழ்க்கை வாழ்வதற்கே

■ ■ ■

## கோடைகால ஒன்றுகூடலும், பொதுக்கூட்டமும்

ஸ்கந்தவரோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கத்தின் (கனடாக்கிளை) கோடைகால ஒன்றுகூடலும், வருடாந்தப் பொதுக்கூட்டமும், எதிர்வரும் ஜுலைமாதம் 12ம் திகதி (July 12, 2008) சனிக்கிழமை காலை 10 மணி முதல் மாலை 6 மணிவரை மிடில்பீல்ட்/ஸ்ரீல்ஸ் (Middlefield/Steeles) சந்திப்பில் அமைந்துள்ள மிலிக்கென் பூங்காவில், A பகுதியில் (Milliken park – area A) வழமைபோல் சிறப்பாக நடைபெறும். சகல வயதினருக்குமுரிய விளையாட்டுப் போட்டிகளும், மற்றும் பல சுவையான நிகழ்ச்சிகளும் இடம்பெறுவதுடன் மதியபோசனமும் வழங்கப்படும்.

அனைத்துப் பழைய மாணவர்களும் தத்தம் குடும்பத்தோடு தவறாது கலந்துகொண்டு நிகழ்ச்சியைச் சிறப்பிக்கும் வண்ணம் அன்போடு அழைக்கப் படுகின்றனர்.

மேலும் தொடர்புகளுக்கு:
நடா G. நடராஜா (416) 616-8751
K. ரட்ணசிங்கம் (416) 496-1646
K. மகேந்திரலிங்கம் (647) 287-4611

# காசுமேலே காசுவரும் நேரமிது



பெரி
முத்துராமன்
- நிதித்துறை ஆலோசகர் -
muthuraman@thaiveedu.com

அமெரிக்காவில் வீட்டு விலைகள் விழுந்து வருவதைத் தொடர்ந்து அமெரிக்காவில் வட்டி விகிதங்கள் கடந்த சுமார் ஓராண்டாக குறையத் தலைப்பட்டது. அதன் எதிரொலி கனடாவிலும் வட்டி விகிதங்கள் குறையத் தொடங்கின. ஆனால் ஒரு மாதத்திற்குள் நிலைமை சற்று மாறத் தொடங்கியுள்ளதாகத் தெரிகின்றது. தொடர்ந்தும் கனேடிய மத்திய வங்கி வட்டி விகிதத்தை குறைக்கும் என்று எல்லோரும் எதிர்பார்த்திருந்த நேரத்தில் கனடிய மத்திய வங்கியான பாங்க் ஆப் கனடா வட்டி விகிதத்தை குறைக்கவில்லை. மாறாக ஏறிவரும் விலைவாசி கவலை தருவதாக அறிவித்தது. இதனால் வட்டி விகிதங்கள் இனி குறையாது என்பது உறுதியாகின்றது. உலகம் முழுவதும் விலைவாசி ஏறும் போதெல்லாம் விலைவாசியைக் கட்டுப்படுத்த மத்திய வங்கிகள் வட்டியை உயர்த்துவது வழக்கம்.

ஏறிவரும் எண்ணெய் மற்றும் உணவுப் பொருட்களின் விலைவாசி உயர்வு உலகம் முழுவதும் கவலையைத் தோற்றுவித்திருக்கின்றது. கனடாவும் இந்த நிலைக்கு விலக்கு அல்ல.

இந்தியாவின் தற்போதைய விலைவாசி உயர்வு 11சதவீதம். ருஷ்யாவில் 15சதவீதம். சீனாவில் 8சதவீதம். வியட்நாமில் 25சதவீதம். இப்படி சொல்லிக்கொண்டே போகலாம். கனடாவில் இன்னும் 3சதவீதத்தை விலைவாசி உயர்வு தாண்டியதாக அறிவிக்கப்படவில்லை. வட்டி விகிதங்களை கூட்டும் போது நடைமுறையில் மேலும் விலைவாசி உயர்வு அதிகரிக்கின்றது. வசதி குறைந்த மக்கள் மேலும் சிரமத்திற்கு ஆளாகின்றார்கள். ஆனாலும் மத்திய வங்கிகளிடம் தற்சமயம் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த இருக்கும் ஆயுதங்களில் ஒன்றாகக் கருதப்படுவது வட்டி விகித ஏற்றம் தான்.

விலைவாசி ஒருபுறம் ஏறுகையில், மறுபுறம் அமெரிக்கா போன்ற நாடுகளில் பல மக்கள் வேலை இழந்துகொண்டிருக்கின்றார்கள். அமெரிக்காவில் MITஇல் படித்துப் பட்டம் பெற்று வங்கியில் வேலை பார்த்த ஒருவர் தற்சமயம் வேலை இழந்து வேலை தேடிக்கொண்டிருப்பதாகச் செய்திகள் வெளியாகியுள்ளன. இவர் சட்டையில் ‘MIT பட்டதாரிக்கு வேலை தேவை” என்று குத்திக்கொண்டு வேலை தேடிக்கொண்டிருக்கிறாராம். MIT மிகவும் புகழ் பெற்ற கல்வி நிறுவனம். அங்கு படித்தவர்களை மற்றவர்கள் வேலைக்கு அமர்த்த விரும்புவது அதிகம். அத்தகையோருக்கே இத்தகைய நிலை என்றால் என்ன சொல்வது?

அமெரிக்க வீட்டுப் பிரச்சினை மேலும் மோசமடையுமென்றே கருதப்படுகின்றது. அமெரிக்க மத்திய வங்கியும் இனிமேல் வட்டி விகிதங்களைக் குறைக்காது என்றே தோன்றுகின்றது. ஐரோப்பிய நாடுகளிலும் இந்தியா போன்ற நாடுகளிலும் ஏற்கனவே வட்டி விகிதங்கள் உயர்த்தப்பட்டு விட்டன.

கனடாவின் வீட்டுக் கடன் நிலவரங்கள் அமெரிக்காவைப் போன்று மோசமாக இல்லை என்றாலும் வெகு கவனத்துடன் ஓராண்டாகக் கவனிக்கப்பட்டு வருகின்றது. கடன் சந்தையில் கடன்கள் பெறுவது சற்றே கடினமாக்கப்பட்டுள்ளது. இந்த நிலை இனிவரும் மாதங்களிலும் தொடரும் என்றே தோன்றுகின்றது.

டிரான்ஸ் யூனியன் மற்றும் எக்யு பாக்ஸ்



கடன் சரித நிறுவனங்களில் சுய கடன் சரிதத்தைக் கேட்டு விண்ணப்பிப்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதாம். இது வரவேற்கத்தக்க நிலை. உங்கள் கடன் சரிதத்தை நீங்கள் இதுவரை பார்த்தது இல்லை என்றால், பார்க்க இது நல்ல சமயம். ஆண்டுக்கு ஒருமுறை இந்நிறுவனங்களிடமிருந்து தங்களின் சுய கடன் சரிதத்தை இலவசமாகப் பெற முடியும். விபரங்களை இணையத்தில் பார்க்கலாம்.

உங்களின் கிரடிட்ஸ்கோர் 700க்கு மேல் இருந்தால் குறைந்த வட்டியில் வங்கியில் கடன் பெற வாய்ப்புக்கள் அதிகம். அதிகபட்ச கிரடிட்ஸ்கோர் 900 கிரடிட் ஸ்கோர் ஒன்று மட்டுமே கடனைப் பெற்றுத் தந்து விடாது. உங்களின் உத்தியோகத்தின் நிலையான தன்மையும் கடந்த ஓரிரு ஆண்டுகளாகவும் தற்சமயமும் இருந்து வரும் வருமானமும் உங்களின் கடன் தொகையை நிர்ணயிக்கும்.

இன்றைய பொருளாதார சூழ்நிலையில் கடன்களைக் குறைத்து சேமிப்பை அதிகரிக்க வேண்டும். மேலும் வேலையின் நிரந்தரத் தன்மையையும் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அடுத்த ஓரிரு ஆண்டுகளில் பொருளாதாரத்தில் எதிர்பாராத மாற்றங்களும் ஏமாற்றங்களும் கூட வரலாம். பொருளாதார மாற்றங்கள் வட அமெரிக்காவில் குடும்பங்களை உடனடியாகப் பாதிக்கின்றது. திட்டமிட்டு செயற்படுவோருக்கு எதிர்பாரா மாற்றங்களையும் சந்திக்கும் திறன் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

■ ■ ■

# குருதிக் கொடை

சிவாஜினி
பாலராஜன்
sivajini@thaiveedu.com



விஞ்ஞான வளர்ச்சி, மருத்துவத் துறையில் பலவிதமான புதுமைகளைச் செய்தும், பல ஆராய்ச்சிகள், செயற்திட்டங்களுக்கு வழி வகுத்தும் இருக்கிறது. இவ்வாறு வளர்ந்து வரும் விஞ்ஞானம் மூலம் பரிசோதனைக் குழாய் குழந்தை, முளையாக்கம் (cloning)... இப்படிப் பல்வேறு விதமான அதிசயங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. இருந்தபோதிலும் இந்த இரத்தத்தை செயற்கை முறையில் உருவாக்கும் முறையில் விஞ்ஞானிகள் இதுவரையில் வெற்றி காணவில்லை. அதே சமயம் முழுமையாக இரத்தத்துக்கு மாற்றீடான பொருளோ அல்லது செயற்கை இரத்தமோ இன்னும் கண்டுபிடிக்கப்படவும் இல்லை.

**எவ்வகையான நோயாளிகளுக்கு எவ்வளவு இரத்தம் தேவைப்படுகின்றது?**

| நோய் | தேவைப்படும் அலகு - யுனிற் |
|---|---|
| புற்று நோய் | 8 |
| இருதய அறுவைச் சிகிச்சை | 1 — 5 |
| வாகன விபத்து | அண்ணளவாக 50 |
| ஈரல் மாற்றீடு | 100 |
| மற்றைய உறுப்புகள் மாற்றீடு | 10 |
| மூளை அறுவைச் சிகிச்சை | 4 - 10 |
| இடுப்பு அல்லது முழங்கால் அறுவைச் சிகிச்சை | 2 - 4 |

## குருதி ஓர் அரிய நீர்மம்

கிட்டத்தட்ட ஒவ்வொரு விநாடியும் ஒருவரின் உயிர் காத்திட இரத்தம் தேவைப்படுகிறது. வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் போராடுகின்ற பலரை வாழவைக்க இரத்தம் தேவைப்படுகின்றது. அண்மையில் நடத்தப்பட்ட ஒரு கருத்துக் கணிப்பின்படி, ஓர் ஆண்டுக்கு கனடிய வைத்திய நிலையங்களுக்கு 900,000 இரத்த தானங்கள் தேவைப்படுகின்றன. கடந்த ஆண்டு மாத்திரம் இரத்தத் தேவை 3.3 விழுக்காடினால் அதிகரித்துள்ளது.

## இரத்த தானம்

இரத்த தானம் என்பது ஒருவர் தானாக விரும்பி தனது உடலில் உள்ள இரத்தத்தை எடுப்பதற்கு அனுமதி அளிப்பதாகும். இரத்த தானம் செய்பவர் அறிய வேண்டிய சங்கதிகள் வருமாறு:

- இரத்த தானம் செய்பவர் பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவராகவும் ஐம்பது கிலோவிற்கு மேற்பட்ட எடை உடையவராயும் இருக்க வேண்டும்.
- இரத்த தானம் வழங்குவதற்கு 48 மணித்தியாலங்களுக்குள் மது அருந்தி இருத்தல் கூடாது. புகை பிடிப்பவராயின் இரத்த தானம் வழங்கும் நாள் புகைத்தல் கூடாது. அத்துடன் இரத்தம் வழங்கிய பின்னும் மூன்று மணி நேரத்திற்கு புகைத்தல் நல்லதல்ல.
- தானம் வழங்கும் நாள் கிட்டத்தட்ட மூன்று மணி நேரத்திற்கு முன்னதாக ஒரு மாப்பொருள், புரதம், கொழுப்பு, தேவையான அளவு விற்றமின்கள் ஆகிய வற்றைக் கொண்ட நிறையுணவை உட்கொள்ள வேண்டும்.
- முழு இரத்த தானம் செய்யும் ஒருவர் ஆகக் குறைந்தது 56 நாட்களுக்கு ஒரு தடவையும், பிளாஸ்மா எனப்படும் குருதிப் பாய்மத்தை மட்டும் தானம் வழங்குவோர் மாதத்திற்கொரு தடவையும், குருதிச் சிறு தட்டுகளை தானம் செய்வோர் இரண்டு வாரங்களுக்கு ஒரு தடவையும் இரத்த தானம் செய்யலாம்.

## எவ்வாறான சந்தர்ப்பத்தில் இரத்தம் தானம் செய்ய முடியாது?

- குளிர் சுரம் இருந்தாலோ அல்லது பல் அடைத்தல், பல் பிடுங்குதல் போன்றவற்றை செய்திருந்தாலோ இரத்த தானம் செய்ய முடியாது.



- ஒரு வருடத்துள் இரத்தம் நீங்கள் பெற்றிருந்தால் இரத்த தானம் செய்ய முடியாது.
- பொதுவாக மூன்று வருடத்துள் மலேரியா நோய் வந்தவர்கள் அல்லது ஒரு வருடத்துள் மலேரியா இருக்கும் நாடுகளான இலங்கை இந்தியா போன்ற இடங்களுக்கு போயிருந்தால் இரத்தம் கொடுக்க முடியாது.
- ஒரு வருடத்திற்குள் மாரடைப்பு வந்தவராயின் இரத்த தானம் செய்ய முடியாது.
- பச்சை குத்தியவராயின் ஒரு வருடம் முடியுமுன் இரத்த தானம் செய்ய முடியாது.

## ஏன் இரத்த தானம் செய்ய வேண்டும்?

- ஒரு நோயாளிக்கு இரத்தம் தேவைப்படின் தானம் செய்யப்பட்ட இரத்தம் மட்டுமே பாவிக்க முடியும். ஏனெனில் இரத்தத்திற்கு மாற்றீடு ஏதும் இல்லை.
- மூன்றுக்கு ஒருவர் என்ற விகிதாசாரப்படி இரத்தத்தின் தேவை இருக்கிறது. ஆனால் தானம் பண்ணுவோர் முப்பத்து மூன்றுக்கு ஒன்று என்ற விகிதாசாரத்தில் உண்டு.
- மருத்துவ மனையின் செலவுகளின் பெரும்பாலான பகுதியை கட்டுப்படுத்தி, அந்தப் பணத்தினை மேலதிக தாதிகளையும் வைத்தியர்களையும் வேலைக் கமர்த்த பாவிக்கலாம்.

நமது உடலில் 5 முதல் 6 லிட்டர் வரை இரத்தம் ஓடுகிறது. இரத்த தானம் செய்யும் போது ஒரு அலகு (450 மி.லீ.) இரத்தமே எடுக்கப்படுகிறது.

இரத்த தானம் செய்வதற்கு முன் அத்துடன் எங்கள் இரத்தத்தில் உள்ள ஈமோகுளோபின் எனப்படும் இரும்புச் சத்தின் அளவை பரிசோதனை செய்வார்கள். இந்த ஈமோகுளோபின் 12.5g/dl என்ற அளவிற்கு குறையாமல் இருக்க வேண்டும். ஒரு கேள்விக் கொத்து தரப்படும். இதில் எங்கள் சொந்த விபரங்களுடன் சில மருத்துவக் கேள்விகளும் அடங்கியிருக்கும். உதாரணமாக உங்களுக்கு மலேரியா கடந்த மூன்று வருடங்களுக்குள் ஏற்பட்டதா அல்லது இலங்கை இந்தியா போன்ற நாடுகளுக்கு போயிருந்தீர்களா? ஒரு வருடத்துள் பச்சை குத்தினீர்களா? இப்படிப் பல கேள்விகள். இரத்த தானம் செய்வதற்கு அதிக பட்சம் அரை மணி நேரமே செலவாகும். இரத்த தானம் செய்த உடனேயே அல்லது சில நிமிடங்களிலேயே வழக்கமான பணிகளை செய்ய

18ம் பக்கம் பார்க்க...

# குருதிக் கொடை...

17ம் பக்கத் தொடர்ச்சி...

ஆரம்பித்துவிடலாம். இரத்த தானம் செய்து சுமார் 48 மணி நேரத்துக்குள்ளேயே புது இரத்தம் உற்பத்தியாகிவிடும்.

## இரத்த தான வகைகள்

### முழு இரத்த தானம் (whole blood donation)

வழமையாக இரத்த தானம் செய்பவர் ஒரு அலகு (450 மி.லீ.) இரத்தத்தை தானம் கொடுப்பார். இவ்வாறு இவர் கொடுக்கும் போது இவருக்கு தெரியாது, இந்த இரத்தம் யாருக்குப் போய் சேர்கிறது என்று. மேலும் இவ்வகையான தானத்தில் கிடைக்கும் இரத்தத்தில் ஒரு பகுதி முழுமையாகவே இரத்தம் தேவைப்படும் நோயாளிக்கு கொடுக்கப்படும். மறுபகுதியில் குருதிப் பாய்மமும், செங்குருதிச் சிறு துணிக்கை களும் பிரித்தெடுக்கப்பட்டு பாதுகாக்கப் படும். இம் முழு இரத்த தானத்தினால் சேகரிக்கப்படும் இரத்தம் பொதுவாக leuko-reduction என்னும் முறைக்கு உட்படுத்தப் பட்டு அதிலுள்ள வெண் குருதிச் சிறு துணிக்கைகள் அகற்றப்படும். ஏனெனில் இந்த வெண்குருதிச் சிறு துணிக்கைகளே பற்றீரியா, வைரஸ் போன்ற நுண்ணுயிரி-களை காவுவன.

### குருதியில் ஒரு கூறினைப் பிரித்தெடுத்தல் (Apheresis donation)

இந்த வகை தானத்தில் இரத்தம் தானம் செய்பவரிடம் இருந்து எடுக்கப் படும்போது, ஓர் இயந்திரத்தின் மூலம் தேவையான பாகங்கள் (செங்குருதிச் சிறு துணிக்கை, வெண்குருதிச் சிறு துணிக்கை, குருதிச் சிறுதட்டுகள், குருதிப் பாய்மம் போன்றவை) பிரித்தெடுக்கப்பட்டு பின்னர் மற்றைய குருதி மீண்டும் தானம் வழங்குபவரின் உடலினுள் செலுத்தப்படும். முழு இரத்த தானம் செய்வோருக்கு என்னென்ன கட்டுப்பாடுகள் உண்டோ அவை இவர்களுக்கும் பொருந்தும். அத்துடன் இவ்வகைத் தானம் செய்வோர் 36 மணித்தியாலங்களுக்கு அஸ்பிரின் எடுத்திருத்தல் கூடாது. ஏனெனில் அஸ்பிரின் குருதிச் சிறுதட்டுகளின் செயற்பாட்டை குறைத்து விடும். அத்துடன் இவ்வகையான இரத்த தானம் செய்வோர் 56 நாட்களுக்கு காத்திருக்கத் தேவையில்லை. சில வாரங்களின் பின்னேயே திரும்பவும் கொடுக்கலாம்.

செங்குருதிச் சிறுதுணிக்கைகள் பிராண வாயுவை உடலுறுப்புகளுக்கு விநியோகிக்கும் அதேவேளை, கரியமில வாயுவை அவ்வப் பகுதியிலிருந்து அகற்றுகின்றன. விபத்துக்கும், சத்திர சிகிச்சைக்கும் உள்ளாகுவோருக்கு செங்குருதிச் சிறு துணிக்கை தேவைப்படும். இவை 120 நாட்களுக்கொரு தடவை புதுப்பிக்கப் படுகின்றன.

செங்குருதிச் சிறு துணிக்கையின் பருமனின் மூன்றிலொரு பங்கு பருமனுடைய குருதிச் சிறு தட்டுகள் குருதி உறைவதற்கு உதவுகின்றன. இவை எலும்பு மச்சையில் உருவாக்கப்படுகின்றன. புற்று நோய் சிகிச்சைக்கு இது பெருமளவு தேவைப்படுகின்றது.

பிளாஸ்மா எனப்படும் புரதச் சத்து நிறைந்த குருதிப் பாய்மம் மற்றைய குருதிக் கூறுகளான செங்குருதிச் சிறுதுணிக்கை, சிறு தட்டுகள் என்பவை உடல் முழுவதும் கடத்தப்படுவதற்கு உதவுகின்றது.

### தனக்கு தேவையான இரத்தத்தை முன்னதாகவே கொடுத்து வைத்தல் (Autologous blood donation)

இது பொதுவாக ஒருவர் தனக்கு அறுவைச் சிகிச்சை நடப்பதற்கு சில வாரங்கள் அல்லது மாதங்கள் முன்னதாக தனது இரத்தத்தை இரத்த வங்கியில் அல்லது மருத்துவ மனையில் கொடுத்து வைத்தல் ஆகும். ஆனால் இவ்வகையாக செய்யும் போது இரத்தம் எடுத்தல், பரிசோதித்தல், பாதுகாத்தல் என்பவற்றிற்காக ஒரு சிறு தொகை பணம் செலுத்த வேண்டி இருக்கும். இருப்பினும் இம்முறையினால் ஒவ்வாமை போன்ற சுகயீனங்கள் தவிர்க்கப்படும்.

### நெறிப்படுத்தப்பட்ட தானம் (Directed donation)

இவ் வகையான தானம் குடும்பத்தவர், நண்பர்கள், உறவினர்கள் அல்லது குறிக்கப்பட்ட ஒருவருக்காகச் செய்யப்படும். ஆனால் இவ்வாறான தானத்தில் நோயாளிக்கு என்ன வகை இரத்தம் தேவையோ அந்த வகையே வழங்கப்பட வேண்டும்.

தானம் வழங்கப்பட்ட குருதியினை 13 வித மான பரிசோதனைகள் செய்த பின்னரே அந்தக் குருதி பாவிக்கப்படும். இதில் 11 விதமான பரிசோதனைகள் தொற்று நோய் களுக்குரியவை. இவ்வாறு தானம் செய்யப் படும் குருதி பலவிதமான நோய்களுக்குரிய பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்ட பின்னரே நோயாளிக்கு செலுத்தப்படும். அத்தகைய நோய்கள் பின் வருமாறு:

- Hepatitis B
- Hepatitis C
- Human Immunodeficiency Virus (HIV)
- Human T cell Lymphotropic virus (HTLV – virus linked to leukemia)
- Syphilis
- West Nile Virus
- Malaria
- Antibodies to red blood cells

இவ்வாறு பரிசோதிக்கும் போது இந்நோய் கள் எங்கள் குருதியில் இருக்குமாயின், அது தானம் வழங்குபவருக்கு தெரிவிக்கப் படும். இரத்த தானம் வழங்கியவருக்கு ஒரு அடையாள அட்டை வழங்கப்படும். அதில் தானம் வழங்கியவரின் பெயர் பிறந்த திகதி என்பவற்றுடன் குருதி வகையும் குறிப்பிடப் பட்டிருக்கும். அத்துடன் ஒவ்வொரு கொடை-யாளிக்கும் ஒரு அடையாள இலக்கம் வழங்கப்படும்.

கடையேழு வள்ளல்களின் கொடைப் பண்பை இலக்கியங்களில் படித்திருக்கிறோம். அவர்கள் தங்களது உடமைகளை பிறருக்கு கொடையாக வழங்கினார்கள். ஆனால் குருதி தானம் வழங்குவோர் தமது குருதி-யையே பிறருக்கு ஈந்து அவர்கள் நலம் வாழ உதவுகின்றனர்கள்.

■ ■ ■

# முகவர் உறவுகள்..

5ம் பக்கத் தொடர்ச்சி...

இது தொடர்பாக வீடு விற்பவரும், வீட்டை வாங்குபவரும் LISTING மற்றும் வீடு வாங்குபவருக்கான ஒப்பந்தங்களில் தமது ஒப்புதலை வழங்க வேண்டும்.

இவ்வகையான ஒப்பந்தத்தின் படி வீடு விற்பனை நிறுவனம் வீட்டை வாங்குபவர், விற்பனை செய்பவர் ஆகிய இருவருக்கும் சிறந்த பயன் ஏற்படக்கூடிய வகையில் செயற்பட வேண்டும்.

வெவ்வேறு வகையான முரண்பாடான நலன்களை எதிர்பார்ப்பவர்களான வீடு விற்பனையாளர், வீடு வாங்குபவர் ஆகிய இருவருக்கும் ஒரே சமயத்தில் சேவையாற்றுவதனால், ஏற்படக்கூடிய பிரச்சினைகளைத் தவிர்ப்பதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட பிரதி நிதித்துவ உறவுகள் தொடர்பாக எழுத்து மூலமான ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட வேண்டும்.

இதில் சம்பந்தப்பட்டுள்ளவர்களின் உரிமைகள் கடமைப்பாடுகள் என்பவற்றை இந்த ஒப்பந்தம் மிகவும் தெளிவாக விளக்குகிறது.

- உங்களது வீட்டை விற்பனை செய்வதற்குரிய பத்திரங்கள் யாவற்றையும் வைத்திருக்கிறீர்களா?
- உங்கள் வீட்டை விற்பனை செய்வதற்கு முன்னர் கீழே குறிப்பிடப்பட்டுள்ள பத்திரங்கள் அனைத்தையும் சேகரித்து வைக்கவும்.

**அடமானப் பத்திரங்கள்** - உங்களது அடமா னத்தை இடமாற்றுதல், செலுத்தி முடித்தல் என்பது தொடர்பாக உங்களுக்கு கடன் வழங்கும் அதிகாரியை நீங்கள் சந்திக்க விரும்பலாம். இவ்வாறு செய்வதன் மூலம் உங்களது அடுத்த அடமான ஒழுங்கு முறையை தொடர்பாக பேரம் பேச முடியும்.

**சொத்து நில அளவை** - நில அளவை தொடர்பான சரியான அளவீடு செய்வதைப் பாதிக்கக்கூடிய அளவிற்கு ஏதாவது மாற்றங்கள் ஏற்பட்டிருந்தால் அதனை நீங்கள் உங்களது முகவருக்கு அறிவிப்பது அவசியம்.

- வரி மதிப்பீட்டு பத்திரங்கள்
- Utility Bills
- வீடு சம்பந்தமான ஏனைய கோரல்கள்
- கணவன் / மனைவி பிரிவு ஒப்பந்தம் /நீதி மன்ற உத்தரவு
- உயில் (Will) பத்திரங்கள்
- Liens
- உங்களுக்கு எதிராக தீர்ப்புக்கள் தொடர்பாக செலுத்தப்படாத தொகை.
- செலுத்தப்படாத வரிகள்
- செலுத்தப்படாத Utilities
- Pending litigation
- Condominium வகையான வதிவிடத்தில் வாழ்பவராயின் அது தொடர்பான பத்திரங்கள்.
- வீட்டை பராமரித்தல் சரித்திரம் (திருத்த வேலைக்கான பற்றுச் சீட்டுக்களை வைத்திருத்தல்)
- உங்களது வீட்டை சந்தைப்படுத்த இலகு வாக்கக்கூடிய பொருட்களும் தகவலும்.
- உங்களது வீட்டுத் தோட்டம் பூத்துக் குலுங்கும் வகையிலான புகைப்படம் அல்லது ஒளியிழை நாடா அல்லது உங்களது வீட்டுத் தடாகம் திறந்து திறந்துவைக்கப்பட்டு அழகாக அமைதல்.
- உங்களது வீட்டை தயமுயர்த்த அல்லது மீள் புதுப்பிக்க நீங்கள் கற்பனை செய்திருந்த கருத்துக்கள்

■ ■ ■

## இம் மாதத்திற்குரிய முக்கிய குறிப்புக்கள்

யூலை மாதக் குறிப்புகள்

- ஸ்ரோபெரி பழம் (Strawberry) பறித்தல் இம் மாத நடுப்பகுதியுடன் நிறைவடைகின்றது. Strawberry பறிக்க நினைப்பவர்கள் ஜுலை 15இற்கு முன்னர் சென்று பறிக்கவும்.
- ஜுலை நடுப்பகுதியிலிருந்து செரி பழம் (Cherry) பறிக்கும் நாள் ஆரம்பிக்கின்றது. உங்கள் நாட்களை அதற்கேற்ப தயார்படுத்திக் கொள்ளுங்கள்.
- விளக்குகளின் நிழற்றிகளை (Lamp shades) சுத்தப்படுத்துவதுடன், ஒரு பக்கம் மட்டுமே பயன்படுத்தப்படுவதனால் நிறம் மங்கிப் போவதைத் தவிர்ப்பதற்காக அதனை வேறு பக்கங்களிற்கு திருப்பி விடுங்கள். நிழற்றிகள் பழுதடைந்து போயிருந்தால் அவற்றை அகற்றி விடுங்கள்.
- இருள் திரைகள் (Blinds) மற்றும் நிழற்றிகளை (Shades) கழுவிச் சுத்திகரியுங்கள்
- படுக்கை மெத்தைகளை சமனான பாவனையை உறுதிப்படுத்துமுகமாக மாற்றிப் போடுங்கள்.
- வீட்டினுள் வைத்திருக்கும் தாவரங்களை குளியலறை அல்லது சமையலறை கழுவும் தொட்டியிலிட்டு (Sink) அவற்றிலிருக்கும் தூசு போகும் படியாக கழுவுங்கள்.
- பழைய தீந்தைகள் (Paints), நச்சுப் பொருட்கள் என்பவற்றை உங்கள் வீட்டிலிருந்து அகற்றுங்கள்.
- நுளம்புத் தொல்லை காணப்பட்டால், சிட்டிரனெல்லா எண்ணெய் உள்ள மெழுகுதிரிகளை பாவியுங்கள்.
- குளிர்சாதனப் பெட்டியின் கதவுகள் இறுக்கமாக மூடப்பட்டுள்ளதா என்பதை சரிபாருங்கள்
- சமையலறை அலுமாரிகளின் கறைகளை நீக்குதல், தீந்தையிடல் (painting) ஆகியவற்றை கோடை காலத்தில் மேற்கொள்ளுங்கள். கோடை காலத்தின் பகற்பொழுதில் இவை, இலகுவில் காய்ந்து விடும்
- புகைபோக்கிகளை சரிபாருங்கள்
- உற்பத்தியாளரால் கூறப்பட்டபடி, கனலடுப்பையும் (oven), குளிர்சாதனப் பெட்டியையும் (Fridge) சுத்தமாக்கவும்.
- முன்னைய இதழில் கூறியபடி இம் மாதமும் உங்கள் தோட்டத்தின் செடிகளுக்கு அளவுக்கு அதிகமாக நீர் விட வேண்டாம். அளவிற்கதிகமான நீர் விடப்படும் போது மண்ணில் நீர் தேங்கி நிற்க வழி ஏற்படும்.

தொகுப்பு: மகேன் சிங்கராசா

# வாழ்க்கை சுவர்க்கமாவது இனிய இல்லமொன்றில்...

## Elagupplai (Mike) Srinathan B.Sc.

**Sales Representative**

**Dir: 416.276.1225 • Tel: 905.470.9800**

**Email: esrinathan@trebnet.com**




### Steeles/Birchmount



**$70,000**

Daisy Mart Store In A Nc Plaza; Low Rent Incl All; Low Franchise Fees; With Lotto 649; Business Last 15 Years.Ample Parking!
Good Solid Income;One Man Ops; Walking Cooler And Other Eqpt And Chattles List;

### Passmore/Markham



**$369,800**

Brookside 3 Bedrooom Brick House Backing On Park/School. Close To Ttc, Minutes To 401, Shopping, Temples, Mosque, Church, Hospital.
Fridge, Stove, Built-In Dishwasher, Washer, Dryer, Cac, All Elfs, All Window Coverings.

### Mccowan/Eglinton



**$169,900**

Immaculate 2 Bedrooms + Solarium, Bright Designer Decor, Unobstructed East View, Split Bedrooms With 2 Full Baths, Family Size Kitchen, Ensuite Laundry, One Parking And One Locker Included. Close To All Amenities. Walk To Transit!

### Birchmount/Ellesmere



**$245,000**

Immaculate Condo With Unobstructed South View! Steps To Shops, Schools & Transit! Designer Suite Per Builder, Great Floor Plan, 24 Hour Concierge, Super Building Amenities Including Sauna, Indoor Pool, Party Room, Virtual Golf, Card Room & Much More!!

### Steeles / Staines



**$699,998**

4Yrs New Upgd Home,Premium 50' Ravine Lot & W/O Bsmt.Approx 3841 Sq Ft,9'Ceiling On Main.Cathedral In Fam Rm,4.5 Baths,2nd Flr Laundry.Over $150K In Upgrades--Main Flr,Cherry Hwd,Crown Moulding,12 Pot Lites,6 3/4'Base,2 Cofferred Ceilings,2-Tier Deck

### Mccowan/Eglinton



**$409,000**

Beautiful Maintained Home, Approx 2100 Sqft, Upgraded Laminate Floor, Bright,Clean, Finished Basement With 2 Bdrm,Kitchen, & Washroom. Separate Entrance.

### Markham And Passmore



**$439,900**

Fridge, Stove, Washer, Dryer, Central Air Conditioner, Central Vacuum, All Electric Light Fixtures And All Window Coverings.

### Morningside/Staines



**$294,900**

Spacious 2 Yr. New Mattamy Built Freehold Townhouse With Sep. Ent. To Basement (In-Law Pot.),Large Living & Dining Rms., Family Size Eat-In Kitchen W/Door To Backyard. Huge Master Bedroom W/Walk-In Closet, Double Linen Closet, Detached Garage At Back Of House. Steps To Ttc, Schools & Park.

### Staines / Steeles



**$399,900**

Beautiful, Well Maintained Approx. 2100 Sqft Home With Close To Park, 2nd Floor Laundry, Master Bedroom With 4 Pcs Ensuite And W/I Closet, Marble Top On Both Washroom, Crown Moulding In Great Room And Dining Room, Double Garage, Access From Garage

### Ellesmere/Conlins



**$374,900**

Cac,Brdlm W/L,R/I Cvac,Alarm System,Elf's(Exclude Dr),Gb&E,Hwt(R), Garden Lights,Mirr Closet Doors,Gdr Opnr,Appliances(Neg),All Blind&Drapes (Excl.Drapes In Liv,Din&Staircase) University, Prvt& Sep. School, Easement Survey

### Bur Oak And 9th Line



**$474,900**

Brand New Home, Never Lived In! This House Is Appox. 3400 Sq Ft. Lots Of Upgrades: Hardwood Floors, Family Room And Living. Staircase Is Hardwood And Much More! Good Location: Close To School, Park, Go Train. Developing Area, A Quiet Place To Live.

### Markham Rd/Denison



**$420,000**

Very Well Maintained All Brick Link-Detached. Very Bright & Spacious Home In A Desirable Location W/East View. Enclosed Porch, No Sidewalk, Fully Fenced Large Backyard. W/Brand New Finished Basement. Bright & Large Eat-In Kitchen.

### 16th Ave & 9th Line



**$299,900**

Aspen Ridge Homes "Original Cornell "3 Bedrooms 2 Baths "Open Concept "Spacious & Bright "Natural Deco "Upgraded Kitchen Cabinet And Counter Top"Big Kitchen Walkout To Deck "Direct Access To Garage "3 Cars Driveway "Move-In Condition "Quiet Neighbourhood "Steps To All Amenities"

### Markham Rd./14th



**$354,900**

Very Bright Home With Beautiful Layout.Thousands $$ Spend On Upgrades In 2007 Such As New Hardwood Flooring And Paint On The Main Floor,New Carpets The Rest Of The House,New Paint And Concrete Seal In The Garage,New Asphalt On The The Driveway & New

### 9th Line/16th Ave



**$309,000**

*Approx One Year New Mattamy Townhouse In Upscale Cornell *End Unit * Bright & Spacious *Oak Staircase *Functional Layout *Bright Eat-In Kitchen W/Door To Large Back Garden *Mbr W/4Pc Ensuite *2 Parking Spaces.

### Kennedy / Highglen



**$1,380,000**

Exquisite Customized Home By Luminic; 9 Car Circular Interlock Driveway: 94.35 X 213 Ft Deep Lot; 18.5 Ft Cathedral Ceiling; Anderson (Rolls-Royce)Windows; Stone Face Fireplace; Cedar Closet In Bsmt; Sauna & Wet Bar In Bsmt.

### 171 Mill St



**$2,650,000**

A 20 Years Established Petro Canada Gas Station On Busy Main Street In Angus(Barrie). Totally Renovated In 3 Years Gas Station With 10 Pumps W/Canopy, 3 Double Wall Tanks. Sale : Gas 6 M/Year, Convenience Store $20,000/Week Owner's 3 Bedroom House On Premise

### Middlefield/Denison



**$349,000**

Demand Area Approximately 11 Years Old, Well Maintained, Large Enclosed Front Porch, Walkway To Denison, Walking Distance To (Transit, Temple, Mosque, Park & Schools), Generously Sized Bedrooms, Widened Driveway For 2 Cars.

### Markham/Steeles



**$305,000**

Absolutely Beautiful Townhouse With Quality Upgrades, Very Convenient Location, Near Ttc, Shopping & School. $$$ In Upgrades. Fully Fenced Backyard. No Maintenance Fee. Approx 6 Years New! Fridge, Stove, Washer, Dryer, All Existing Elf's, Window Coverings, Broadloom Where Laid, Central A/C. Finished Basement W/ Home Theatre Internal Wiring For 6.1, Hot Water Tank Owned

### Markham Rd/14th Ave



**$349,900**

Just Like A Model Home. Beautifully Decorated. Spotless Home, Absolutely Mint Condition.
Fridge, Stove, Washer, Dryer, All Elfs, Cvac, Gdo.

### Denison/Mccowan



**$295,000**

Well Maintained Home, 1100 Sq Ft, Hrdwood Liv & Din Rm, Cres Location, Walk To Plaza.
All Appl, All Elf's, All Window Coverings

### Denison/Middlefield



**$289,900**

Well Maintained Home 1100 Sq Ft Plus Fin Bsmt, Cres Location, Walk To Plaza.
All Appl, All Window Coverings, Gdo, All Elfs.

### Peter Robertson/Torbram



**$264,500**

Great Starter Home, Close To Park, Schools, Shopping Mall & Transportation. Long Driveway, Interlocking At The Front, Stamped Concrete At The Back.
Fridge, Stove, Washer, Dryer & Microwave, A/C, Cold Cellar, All Electric Light Fixtures & Window Coverings

RE/MAX
Realtron Realty Inc. Brokerage
Independently Owned and Operated
7800 Woodbine Ave., Penthouse, Markham, Ontario L3R 2N7

**"I Can Also Assist You With: Mortgage Financing, Home Inspection, Real Estate Lawyer"**

# சுற்றயல் குருதிக்கலன் வியாதி...

7ம் பக்கத் தொடர்ச்சி...

### சுற்றயல் குருதிக்குழாய் வியாதி கட்டுப்பாட்டில் இல்லாத பொழுது எத்தகைய விளைவு ஏற்படும்?

- காலில் உள்ள குழாய்களில் படிந்துள்ள கொழுப்புத் துணிக்கைகள் மிகச் சிறு துனிக்கைகளாக குருதியோட்டத்தில் விடு படலாம். இத்துணிக்கைகள் சுவாசப்பை யில் மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தலாம்.
- பாதிக்கப்பட்ட அவயத்தில் மிகுதியான வேதனை ஏற்படும்.
- வேதனை, நோவு என்பன நடமாட்டத்தைக் குறைத்து உடலின் வினைத்திறனைக் குறைத்துவிடும்.
- PVD நோய் உள்ளவர்கள் மூளைக் குருதிக் கலன் விபத்து நோய்க்கு ஆளா வதற்கு அதிக வாய்ப்புக்கள் உண்டு.
- சுற்றயல் பகுதிக்கு குருதி விநியோகம் குறைவாக இருப்பதனால் புண்கள் ஆறு வது மிகவும் தாமதப்படும். புண்கள் மாறாது தொடர்ந்து இருக்குமளவிற்கு PVD நோய் பாரியதாக இருந்தால் அவயவங்கள் (கால்கள்) இழக்கப்பட வேண்டி வரும்.

குருதிக்கலன் என்னும் பொழுது அது நாடி, நாளம் இரண்டையும் குறிப்பிடும். இவை இரண்டையும் விட நிணநீர்க்குருதிக் கலன் தொகுதி என்று ஒரு பகுதிக் குழாய்கள் உண்டு. கல இடைவெளிகளில் உள்ள நீரை இதயத்தை நோக்கி கொண்டு வரு வது இதன் தொழில். இக் கல இடை வெளிச் சாறில் பல உயிரியல் இரசாயனப் பதார்த்தங்கள் கரைந்திருக்கும். இதை நிணநீர் என்று கூறுவர். நிணநீர் இதயத்தை நோக்கி வரும் பாதையில் நிணநீர்க்கட்டி கள் உண்டு. இவற்றை நெறிக்கட்டிகள் என்று கூறுவர். கிருமிகளின் தாக்கத்தை இடைநிறுத்தும் காவலரண்கள் போல் தொழிற்படும் இவை கிருமிகளை அந்த இடங்களில் அழிக்க முயலும் பொழுது நெறிக்கட்டி வீங்குகின்றது. வீங்கிய நெறிக் கட்டிகள் கிருமித் தொற்றை வெளிக்காட்டு வதால் வைத்தியர்களுக்கு நோயை அறிந்து கொள்ள இலகுவாக இருக்கும். இத்தகைய நிணநீர்க் கால்வாய்கள் அடை படும் பொழுதோ, சத்திர சிகிச்சையின் போது அகற்றப்படும் பொழுதோ அத்துடன் சம்பந் தப்பட்ட உறுப்புக்கள் வீக்கமடையலாம்.

இதேபோல் நாளங்களும் அவற்றில் உள்ள வால்வுகள் செயலிழப்பதனால் புடைத்து, பாம்பு போல் சுருண்டு நெழிந்து சிலரின் கால்களில் இருப்பதை நீங்கள் கவனித் திருக்கலாம். VARICOSE VEINS என்று கூறப்படும் இந்நோயினால் கால்களில் எரிவு, வேதனை சில சமயங்களில் தேய்- பட்டு குருதிவடிதலும் ஏற்படும். உடற்பரு மன், பிரசவம், பாரிய அளவிலான மலச் சிக்கல், கால்களை அசையாது தொடர்ந்து நிற்றல் போன்றவை இந்நோயின் குணங் குறிகளை மேலும் அதிகரிக்கச் செய்யும்.

கால்கள் கனத்து, நிறம்மாறி, கரண வாயு வினால் அடிக்கடி பாதிக்கப்பட்டு, இருப்பது உங்கள் நாளத் தொகுதி சரிவர இயங்க வில்லை என்பதைக் காட்டுகின்றது.

நாளங்கள் வெளிப்புற நாளங்கள், உட்புற நாளங்கள் என்று வகைப்படுத்தலாம். மேலே கூறப்பட்ட VARICOSE VEINS என்ற நோய் வெளிப்புற நாளங்களில் தென்படும் பொழுது அவற்றை நாங்கள் பார்க்கக் கூடியதாக இருக்கின்றது.

நாளம் புடைத்தல் (VARICOSE VEINS) உணவுக் கால்வாயில் உள்ள களம் (Oesophagus) என்ற உறுப்பு, மற்றும் மலவாசல் பகுதி போன்ற இடங்களிலும் ஏற்படலாம்.

அதிக நேரம் சோம்பேறியாக அமர்ந்திருப்- பவர்கள், சத்திர சிகிச்சையின் பின்பு பல மணிநேரம் படுக்கையில் படுத்திருப்பவர் கள், நீண்ட தூரம் அமர்ந்திருந்து பயணிப் பவர்களின் கால்களின் நடுவேயுள்ள நாளங்- களில் இரத்தக் கட்டி உருவாகும் சந்தர்ப் பங்கள் கூடுதலாக இருக்கும். இதனால் ஒவ்வொரு 20 தொட்டு 30 நிமிட நேரத் திற்கு ஒருதடவை எழுந்து நின்று கை, கால்களை அசைப்பதன் மூலம் கட்டிப்படும் தன்மையை நன்றாகக் குறைத்துவிடலாம். சத்திரசிகிச்சையின் பின்பு உடற்பயிற்சி கொடுத்து, உடலை வருடிவிடுவதும் நல்லது. இவை படுக்கைப் புண் வராமலும், குருதிக் கட்டி உருவாகாமலும் தடை செய்யும்.

சில சமயங்களில் குளிர்காலங்களில் வெளி யில் செல்லும் பொழுது கைவிரல்களிற்கும், கால்விரல்களிற்கும் குருதியைப் பாய்ச்சும் சிறு நாடிகள் சுருக்கமடைவதாலோ அல்லது சுருங்கிச் சுருங்கி விரிவதனாலோ விரல் நுனிகளுக்கு இரத்த ஓட்டம் குறைந்து விரல்களில் நோவு ஏற்பட்டு வெளிறிக் காணப்படலாம். அநேகமாகப் பெண்களில் கூடுதலாக இது ஏற்படுகின்றது. இதனை Raynaud's Phenomenon என்று ஆங்கிலத் தில் குறிப்பிடுவர்.

### சிகிச்சை எப்படி அமையும்? (வைத்தியரினால் நிர்ணயிக்கப்படும்)

- குணங்குறிகளைக் கட்டுப்படுத்தல்.
- நோய் மேலும் வலுவடையாமல் குறைப் பதற்குரிய மருந்துகள், உணவுவகைகள் என்பனவற்றை உட்கொள்ளுதல்.
- உடற்பயிற்சி ஒழுங்காகச் செய்தல்.
- புகைப்பிடித்தலை தவிர்த்தல்
- நீரிழிவு, இரத்தக் கொதிப்பு, குருதி அதிகளவு கொழுப்பு உள்ளவர்கள் மிகவும் கரிசனையுடன் தமது நோயைக் கட்டுப்பாட்டில் வைத்திருத்தல்.
- குருதியுறையாமல் இருப்பதற்குரிய மருந் துகளாகிய அஸ்பிரின் போன்ற வில்லை களுடன், குருதிக்குழாய்களின் சுவர் களை இளக்கி வைத்திருக்கும் மருந்து களைப் பாவித்தல்.

### குருதிக்குழாய் சீர்திருத்தம் இதில் பலவகை உண்டு

- குருதிக் குழாய்களினுள் படிந்துள்ள கொழுப்பை சிறிய பலூன் மூலம் குருதிக் குழாய்களின் சுவர்களை நோக்கி அமுக்கி கொழுப்புகளை சுவருடன் சேர்த்து நசித்துவிடுதல்.
- குருதிக் குழாயினுள் படிந்துள்ள கொழுப்புக்களை, நுண்ணிய குழாயில் பொருந்திய சவரக்கத்தியால் சவரம் செய்து அகற்றி விடுதல்.
- லேசர் கதிர்வீச்சு மூலம் கொழுப்புகளைக் கரைத்து விடுதல்
- குருதிக்குழாய் அகட்டி (Stent) என்னும் சிறுகுழாயை அடைத்துள்ள பகுதியில் வைப்பதன் மூலம் குழாயைத் தூர்ந்து விடாமல் வைத்திருத்தல்.
- இதயத்தில் பக்கவழிச் சத்திரசிகிச்சை செய்வது போல, இங்கும் பக்கவழிச் சத்திர சிகிச்சையைச் செய்தல்.

■ ■ ■

*தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.*

*E-mail: thaiveedu@gmail.com*
*Fax: 416-849-0594*
*Tel: 416-646-3422*

# அழகிய பூஞ்செடிகள்



சந்திரசேகரி
segari@thaiveedu.com

நீடித்து வாழ்ந்து பூக்களைத்தருபவை நிலையான செடிகள் (Perennials) எனப் படம். பூந்தோட்டம் அமைப்பது இலேசான காரியமல்ல. அதுவும், குளிர்ப் பிரதேசங்க ளில் எப்படியான செடிகள், இலேசாக வளர்க்க முடியுமென்பதை மையமாகக் கொண்டு, நீங்களே தீர்மானத்தை எடுத்துக் கொள்ளவேண்டும். அடுத்து, நீடித்து வாழக் கூடிய, அழகான பூக்கள் தரும் செடிகள் உங்கள் மனதைக் கொள்ளை கொள்ளும் என்பதிலும் சிறிது சந்தேகம் இல்லை. அப்படியாயின், அவற்றைப்பற்றிய சில செடிகளை இங்கு பார்ப்போம்.



ஏற்ற வகையான தோட்டமுறைகள், நீங்கள் பயிரிடப்போகும் தக்காளி அல்லது பூசனி அல்லது செவ்வந்தி எதுவாயிருப்பினும் ஒரேமாதிரி இருக்கும். உண்மையாக எதனை நீங்கள் கவனிக்கவேண்டும் என்பதுதான் உங்களது மையமாக இருக்கவேண்டும்.

எப்படி உங்கள் தோட்டத்தை ஆயத்தம் செய்யவேண்டும்?, எப்படிச் செடிகளை ஒழுங்கு செய்யவேண்டும்?, செடிகள் வைத்தபின்னர் எப்படி அவற்றைப் பாதுகாக்கவேண்டும்?

இவற்றிற்கு நீங்கள் ஆயத்தம் என்றால், எந்தச் செடியையும் வளர்க்கமுடியும். இதன் பிரகாரமாக, இப்போது 'பெயோனி' Paeonia என்ற தாவரத்தை அறிமுகப் படுத்துகிறேன். Family Ranunculaceae (Paeniaceae, Peony Family) (Common Name : Paeonia) பெயோனி என்ற தாவரம்,

சாதாரணமாக பூக்களின் அமைப்பு, அழகிய நிறம், ஓரளவு கடினமான தன்மை போன்ற வற்றை மனதில் வைத்து எல்லோராலும் வரவேற்கக் கூடியதாக அமைகின்றது. 1957ம் ஆண்டு இந்தியானா பொதுச்சபை தமது இராஜ்யத்தின் பூவாக, சட்டத்தினைப் பிரகடனப்படுத்தி இருப்பதையும், இன்றும் இந்நிலை தொடர்ந்திருப்பதையும் நாம் காணுகின்றோம். சீனா. யப்பான் போன்ற நாடுகளில் அழகும் நறுமணமும் உள்ள



பெரிய பூக்களுக்காக, பல நூற்றாண்டு-களாக வளர்க்கப்பட்டு வரும் தாவரம் இது வாகும். இன்று, சுமாரான வெப்ப நிலை-களில் வளர்க்கப்படும், பல ஆண்டுகள் தொடர்ந்து உண்டாகக் கூடிய தாவரமாகக் காணப்படுகின்றது. அநேக பூந்தோட்டப் பெயோனிகள் Paeonia officinalis , Paeonia latiflora ஆகியவற்றின் கலப்பு இனங்களா கும். வெள்ளை, வெளிர்மஞ்சள், மஞ்சள், றோஸ். கடும்சிவப்பு போன்ற நிறங்களில் பூக்களைத் தரும் தாவரம் உள்ளன.

செடிகள் நான்கு பிரிவுகளாகத் தொகுக்கப் பட்டுள்ளன. தனித்துவமான பெயோனி, ஒரு வரிசையில் 5அல்லது 5க்கு மேற்பட்ட இதழ் களையுடையவை. யப்பானிய பெயோனி, நடுவே தொகுதியான மகரந்தகேசரங்களை-யும் சுற்றி பல வளையங்களில் இதழ் களையும் உடையவை. பாதி இரட்டிப்பான பெயோனி, அனேக வளையங்களில் இதழ் களையுடையவை. முழு இரட்டிப்பான பெயோனி, முழுமையான வளையங்களில் இதழ்களையுடையவை.

### பெயோனியை எப்படி வளர்க்கலாம்

இத்தாவரத்திற்கு ஈரமான கூடிய பசளை சார்ந்த இடம் முக்கியமாகிறது. சுமாரான அல்லது முழுமையான சூரியஒளி தேவை. ஆயத்தப்படுத்திய பாத்திகளில் 3அடி இடை வெளியில் 8-10 அங். ஆளத்தில் நடுவதற் குரிய குழியைத் தோண்டவேண்டும். கிழங்-குகளின் அரும்புகள் அதாவது கண்கள் ஏறக்குறைய 2 அங். நிலமட்டத்திற்கு கீழே நிற்குமாறு கிழங்குகளைப் பதிக்கவேண்டும். குறைவான பசளையுள்ள நிலமாயிருப்பின் ஒரு அடி அகலம் ஒரு அடி ஆழம் தோண்டிய குளிகளில் நல்ல பசளையினால் நிரப்பி கிழங்குகளைப் பதிக்கவும்.

இச்செடிகளுக்கு பசளை கட்டாயமாகத் தேவை. இரண்டு மேசைக் கரண்டி அளவு 5-10-5 பசளையானது ஒவ்வொரு செடியின் சுற்றுப்புறத்தினுள் இலை துளிர்காலத்திலும் இலைஉதிர்காலத்திலும் போடவேண்டும். இப்போது, செடிகள் நன்கு வளர்வதை அவதானிக்க முடியும். செடிகள் ஏறக்குறைய 2-4 அடி உயரத்தில் வளரும். உயரமான செடிகளுக்கு ஆதரவாகத் பாதுகாப்புத் தடிகள் ஊன்றுதல் வேண்டும். தாவரம் பூத்து அதனது பருவகாலத்தை முடிக்கும் போது கிழங்குகள் கூடுதலாக தண்டின் அடியே நெருக்கமாக தோன்றுவதைக் காணலாம். இலை உதிர் காலத்தில் இக் கிழங்குகளைக் கவனமாகப் பிரிக்கலாம். நிலத்திற்கு மிக அண்மையாக தண்டினை வெட்டிய பின்னர், வேர்களை கவனமாகக் கிண்டி, சிறிது இலேசாக மண்ணிலிருந்து வேறாக்கி நீரினால் கழுவ வேண்டும். ஒவ்வொரு பிரிவிலும் குறைந்தது 3-5 முளைகள் இருப்பதை அவதானிக்கலாம். வேறுபடுத்திய பிரிவுகளை வெவ்வேறான இடங்களில் நட்டுவிடலாம். இலை துளிர் காலத்தில் இவை முளை விட்டு வளர்கின்-றன. செழிப்பாக வளரும் செடிகள் கட்டா-யமாக ஏறக்குறைய 50 ஆண்டுகள் வளர் வதாக அறியப்படுகிறது.

போதிய இலைப்பசளை கிடைக்கின்றதும்

## - வீட்டுத் தோட்டம் - 6

முழுமையான சூரியவொளி கிடைக்கின்ற-துமான நிலமாக இருத்தால், பொதுவாக, பெயோனிச்செடி பல பருவங்களிலும் நன்கு வளரும். ஆனால் சில சமயங்களில், ஒரே இடத்தில் பல வருடங்கள் நிலைத்திருக்கும் செடியானது பசளைக் குறைவினால் கூடிய செழிப்பாக இல்லாதிருப்பதையும் அவதா-னிக்கின்றோம். இந்நிலை ஏற்படும்போது இலை உதிர்காலத்திலும் இலை துளிர் காலத்திலும் பசளை கூடுதலாகச் சேர்க்க வேண்டும். அதோடு மட்டுமல்லாமல், கூடுத லான முளைகளை வேறுபடுத்தி, ஏனைய இடங்களில் நட்டுவிடலாம். இத்தகைய வேலைகளைக் கூடுதலாக வெப்பகாலமுடி-வில் செய்யலாம்.

■ ■ ■

## Family Rutaceae கறிவேப்பிலை

(Botanical Name:Murraya koenigii) (Eng.Name : The Curry leaf Plant)



இலங்கை, தென்இந்தியா, தென்ஆசியாவின் மிகவெப்பமான காடுகளில் பரவலாகக் காணப்படும். 2 - 5 மீற்றர் உயரமாக வளரக்கூடியவை. நறுமணம் கொண்டது. இலைகள் தடித்தவை மூலிகையாக உபயோகிக்கப்படும், அநேகமான சமையலில் நறுமணப் பொருளாகப் பயன் படுத்தப்படும். இந்திய வம்சாவழியினர் இடம் பெயர்ந்த நாடுகளிலெல் லாம் சமையலில் இலைகளைப் பாவிப்பதை இன்று பார்க்கக்கூடியதாக இருக்கிறது. இதுமட்டுமல்ல. இலைகள் பல்வேறுபட்ட மருத்துவ உபயோகத்திற்கும் பயனுள்ளதாக இருக்கின்றது. வேர்ப்பட்டை, கனிகள் பயன் உள்ளவை. குருதிக் கோளாறுகள், வீஷக்கடி, வாந்தி வயிற்றுப் போக்கு, தோல்வீக்கம் போன்றவற்றைக் குணப்படுத்தும். இலைகள் மாட்டுப் பாலுடன் சேர்த்துக் காய்ச்சி, உபயோகிப்பதால், வெப்பத்தினால் உண்டான சொறி. கரப்பான் போன்ற தோல் வியாதிள் குணமாகும். இலைகளை, தேங்காய் எண்ணெய்யுடன் சேர்த்துக் காய்ச்சி தலைக்கு பூசுவதால் மயிர் நிறமாகவும் மென்னையாகவும் இருப்பது மட்டுமல்லாமல், தலைமயிர் உதிர்வதிலுமிருந்து தப்பமுடிகின் றது. குளிர் பிரதேசங்களில், சாடிகளில் வைத்து வீட்டினுள் ஒளி கிடைக்கக்கூடிய இடங்களில் வளர்ப்பார்கள்.

# இல்வாழ்வில் ஆர்வம் கூட்டும் மூலிகைகள்

இராஜசேகர் ஆத்தியப்பன்
rajasegar@thaiveedu.com



## மூலிகைகள் பற்றி முத்தான கேள்விகள்

**மூலிகை என்றால் என்ன?**
மருந்துகளாகப் பயன்படும் தாவரங்களுக்கு மூலிகை என்று பெயர்

**திரிகடுகு என்பது என்ன?**
மூன்று பொருட்கள் சேர்ந்த கலவையை ‘திரி” என்ற அடைமொழியுடன் அழைப்போம்.

திரிகடுகு - சுக்கு, மிளகு, திப்பிலி
திரிபலா - கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்
திரிமஞ்சள் - கறிமஞ்சள், மரமஞ்சள், கஸ்தூரி மஞ்சள்

**“பஞ்ச கந்தம்” என்பது என்ன?**
ஏலம், இலவங்கம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம் ஆகிய ஐந்து திரவியங்களும் சேர்ந்த கலவை ‘பஞ்ச கந்தம்” என்று அழைக்கப்படுகிறது.

சுக்கு, மிளகு, பெருங்காயம், திப்பிலி, வெங்காயம் ஆகிய ஐந்தும் சேர்ந்த சரக்கிற்கு ‘பஞ்சகாயம்” என்று பெயர்.

**எனது மகளுக்கு மூலிகையின் பெயரை வைக்க ஆசைப்படுகின்றேன். சில பெயர்களைத் தருவீர்களா?**
இந்த பட்டியலில் உங்களுக்குப் பிடித்தமான பெயரை தெரிவு செய்து கொள்ளுங்கள்

| | |
|---|---|
| கஞ்சா | - விஜயா |
| கடுக்காய் | - தேவி |
| சீந்தில் | - அமிர்தா |
| ஆற்றுத் தும்மட்டி | - இந்திராணி |
| தாமரை | - கமலா |
| பொன்னாங்கண்ணி | - சீதை |
| சம்பங்கி | - சுவர்ணா |
| சங்குப் பூ | - மாலினி |

இது தவிர, துளசி, அல்லி, செண்பகம், மனோரஞ்சிதம், மருதாணி, மல்லிகை, செம்பருத்தி, ரோஜா என்று எத்தனையோ அழகான பெயர்கள் உண்டு. என்னைக் கேட்டால் ‘பாரிஜாதம்” என்பது சிறந்த பெயர்.

**விலங்குகளின் பெயரிலும் மூலிகைகள் உண்டாமே?**

| | |
|---|---|
| ஆனை வணங்கி | - நெருஞ்சில் |
| பூனை வணங்கி | - குப்பை மேனி |
| நரி மிரட்டி | - கிலுகிலுப்பை |
| கருடன் கிழங்கு | - கொல்லன் கோவை |
| இருகுரங்கின் கை | - முசு முசுக்கை |
| ஈ எச்சக் கீரை | - புதினா |

எலிக்காதிலை, தேள்கொடுக்கு, கம்பளிப் பூச்சி செடி என்று பல உண்டு.

**‘சிறுகுறிஞ்சான்” மட்டும்தான் சர்க்கரை நோயைத் தடுக்கும் மூலிகையா?**
மா, எலுமிச்சை, முந்திரி, யூக்கலிடப்ஸ், நித்திய கல்யாணி, ஆழிவிதை, வெந்தயம், கோவைக்காய், கட்டுக்கொடி, வேம்பு, சீந்தில், சோற்றுக் கற்றாழை, பூண்டு, வெங்காயம், கருவாப்பட்டை, நெல்லி, கீழா நெல்லி, மஞ்சள், கரிசாலை, அவுரி, தும்மட்டி, முசுக் கொட்டை, நாவல், பாகற்காய், சிறியா நங்கை என்று பெரிய பட்டியலே உண்டு.

**‘தங்க சத்து” உள்ள மூலிகை எவை?**
கல்தாமரை, குப்பை மேனி, பொன்னாங் கண்ணி, செம்பருத்தி, சிவனார் வேம்பு, எலிக்காதிலை தும்பை, பிரதமத் தண்டு, கஞ்சா போன்றவை.

**‘சர்வரோக நிவாரணி” ஒன்று அறிய விருப்பம்?**
பத்து கீரைகள் சேர்ந்த ‘கலவைக்கீரை” ஒரு சர்வரோக நிவாரணி. மூக்கிரட்டை, நாயுருவி, நெருஞ்சில், கானாவாழை, சாறு வேளை, குப்பைமேனி, புண்ணாக்கு கீரை, குப்பைக் கீரை, தராக்கீரை இவைகளோடு வேறு இரண்டு கீரைகளைச் சேர்த்துக் கொள்ளலாம். உச்சி முதல் உள்ளங்கால் வரை சகல பிரச்சினைகளுக்கும் நல்லது.

‘கருஞ்சீரகம்” ஒரு சர்வரோக நிவாரணி. வல்லாரையும் அப்படித்தான். இதற்கு ஆங்கிலத்தில் ‘All Heal” என்று அடைமொழி உண்டு.

**நன்றாக சிறுநீர் கழிய உதவும் மூலிகை யாவை?**
கீழாநெல்லி, கொத்துமல்லி, சந்தனம், சீந்தில், நன்னாரி, நெருஞ்சில், நாவல், வெள்ளரி, வாழைத்தண்டு மற்றும் முள்ளங்கி.

**‘தாயைக் கொன்றான்” என்பது எதனைக் குறிக்கும்?**
வாழை

**‘எருக்கு” செடிக்கு வேறு பெயர் உண்டா?**
‘ஆள் மிரட்டி” என்றொரு பெயர் உண்டு.

**முடி நரைப்பதை தடுக்கும் மூலிகைகள் பற்றி சொல்ல முடியுமா?**
மணத்தக்காளி, கரிசாலை, பசலைக்கீரை, முருங்கை, கொத்துமல்லி, கறிவேப்பிலை, இஞ்சி, தேன், பேரீச்சை, பீர்க்கு, நாவல், பீட்ரூட், நெல்லி, சுண்டை, மற்றும் பனை வெல்லம்.

**நினைவாற்றல் அதிகரிக்க என்ன செய்யலாம்?**
வல்லாரை, கரிப்பான், வெண்தாமரை இதழ், செம்பருத்தி இவைகளை நிழலில் உலர்த்தி இடித்து தனித்தனியாக பொடி செய்ய வேண்டும். சம அளவாகக் கலந்து 5 கிராம் எடுத்து பாலுடன் காலை மாலை இரு வேளை என்று தொடர்ந்து எடுத்துவர மூளை வலுப்பெற்று நினைவாற்றலும் கூடும்.

வல்லாரை, விஷ்ணுகிரந்தி, மஞ்சள், கரிசாலை ஆகியவை நினைவாற்றலைப் பெருக்கும். சோம்பு மூளைக்கு சுறுசுறுப்பைத் தரும். நெல்லிக்கனி மூளை வளர்ச்சிக்கு உதவும். ஆரஞ்சு அறிவு மேம்பட உதவும். பாதாம், பேரீச்சை, அத்தி போன்றவை மூளைக்கு ஊட்டமளிக்கும். எல்லாவற்றையும் விட காலை உணவு (Breakfast) மற்றும் பயிற்சி முக்கியம்.

**இதயத்திற்கு நலமானது எது?**
நெல்லி, மாதுளை, சந்தனம், மல்லி, இலவங்கம், தாழம்பூ, அத்தி, செம்பருத்தி, குங்குமப்பூ, ஏலம், அகில், கோரைக்கிழங்கு, சடாமஞ்சில், கடுக்காய், தாமரை, நாரத்தை, பூண்டு, தேன், எள், மருதம்பட்டை.

**‘மஞ்சட்காமாலை” மோசமான நோயா?**
ஆம். பிரபல நடிகர் பாக்கியராஜின் முதல் மனைவி பிரவீணா இந்த நோயால்தான் இறந்து போனார். கீழாநெல்லி, பிரம்மதண்டு. கரிசாலை, மணத்தக்காளி போன்றவைகளில் ‘சோலோசொடின்” (Solosodine) என்ற மருந்துப் பொருள் உண்டு. இதன் வீரியம் காமாலைக் கிருமிகளை அழித்து கல்லீர-லைப் புதுப்பிக்கின்றது.

**குடியை நிறுத்த விரும்புகின்றேன். ஆனால் முடியவில்லை. இதற்கு வீட்டு வைத்தியம் ஏதாவது உண்டா**

## மருத்துவக் கேள்வி - பதில்

இரண்டு கப் தண்ணீரில் ஒரு கைப்பிடி ‘சோம்பு” போட்டு ஒரு கப் தண்ணீராகக் குறையும் வரை கொதிக்க வைத்து ஒரு கப் எடுத்துக் கொள்ளுங்கள். இரண்டையும் கலந்து நான்கு வேளை பருகுங்கள். இது இரத்தத்தில் உள்ள மதுசாரத்தை வெளியேற்றும்.

உலர் திராட்சை 10 கிராம், இலவங்கம் 6 கிராம் எடுத்து இடித்து 180 மிலி தண்ணீரில் போட்டு பாதியாக சுண்டக் காய்ச்சி வடிகட்டி காலை - மாலை உணவுக்கு முன் 5மிலி வீதம் குடித்துவர வேண்டும்.

பூண்டு, புதினா, கொத்துமல்லி, இலைகளை உணவில் தினசரி சேர்த்துக் கொள்ள வேண்டும். மனக்கட்டுப்பாட்டிற்கு சிறப்பான மூச்சுப் பயிற்சி ஒன்று உண்டு.

**இல்வாழ்வில் ஆர்வம் கூட்டி இனிமை சேர்க்கும் மூலிகைகள் பற்றி கூறுங்களேன்?**
ஆண்களின் வீரியத்தைப் பெருக்க அமுக்ரா, செம்பருத்தி, தண்ணீர் விட்டான், வெற்றிலை, சீந்தில், நெருஞ்சில், முருங்கை, வெண்டை, அதிவிடயம், பாதாம், நீர்முள்ளி, மதனகாமப்பூ, முந்திரி, பூனைக்காலிவிதை, பேரீச்சை, சாரப்பருப்பு, சாலாமிசிரி போன்றவை உதவும்.

**மனச்சோர்வு, பதட்டம், தூக்கமின்மை தீர மூலிகை மருந்து வேண்டும்.**
வல்லாரை, அமுக்ரா, தண்ணீர் விட்டான் இவைகளை உலர்த்தி இடித்து பாலில் கலந்து காலை, மாலை தொடர்ந்து பருகிவந்தால் மன நோய்கள் மாறும்.

**Herbal Shampoo மூலிகை குளியல் பொடி எப்படி தயாரிப்பது?**
சிகைக்காய் 1 கிலோ, கடலைப்பருப்பு 250 கிராம், பூவந்திக் கொட்டை 100 கிராம், வெந்தயம் 100 கிராம், பயறு 100 கிராம், உலர்ந்த எலுமிச்சை (அ) ஆரஞ்சுத் தோல் 50 கிராம் கலந்து அரைத்து வைத்தால் வாசனை மிக்க பளபளப்பைத் தரும் மூலிகை ஷாம்பூ தயார்.

**உடல் தேற என்ன வழி?**
அமுக்ரா கிழங்கை பாலில் வேகவைத்து வெயிலில் உலர்த்தி பொடியாக்கி தினமும் ஒருவேளை 10கிராம் அளவு நல்லெண்ணெயுடன் சேர்த்து சாப்பிட்டு வந்தால் இளைத்த உடல் தேறும்.

பாலும், தேனும் கலந்து இருவேளை தினமும் குடித்து வந்தாலும் உடல் தேறும்.

**வெளுத்த மயிரை கருக்க வைக்க முடியுமா?**
‘சிவகரந்தை” எனும் மூலிகையைப் பூ பூப்பதற்கு முன் பிடுங்கி நிழலில் உல வைத்து இடித்து சலித்து வைத்துக் கொள்ள வேண்டும். இதைப்போன்று கரிசாலைப் பொடியும் எடுத்து இரண்டையும் சமமாகக் கலந்து 2 கிராம் அளவு காலை மாலை தேன் அல்லது நெய்யுடன் 48 நாட்கள் சாப்பிட வெளுத்த மயிர் கருக்கும்.

**மாலைக்கண் நோய் தீர மூலிகை சிகிச்சை என்ன?**
அவுரியை எடுத்து பால்விட்டு அரைத்து நெல்லிக்காய் அளவு சாப்பிட்டு உடன் பால்குடிக்க வேண்டும். தினமும் காலை வெறும் வயிற்றில் தொடர்ந்து மூன்று நாள் இப்படி செய்யது உப்பில்லாமல் உணவு உட்கொண்டால் குணமாகும். இத்துடன் கண்களுக்கு வில்வ இலைச் சாற்றை விடலாம்.

**வெண்புள்ளி மறைய மருந்து உண்டா?**
முற்றிய பூவரசன் பட்டையை உலர்த்திப் பொடியாக்கி அவுரி இலைச் சாற்றில் கலந்து பூச வெண்புள்ளிகள் மறையும்.

**ஆடாதொடை எதற்கு உதவும்?**
ஆடாதொடையும் ஐந்து மிளகும் பாடாத தொண்டையையும் பாடவைக்கும்” சளி, ஆஸ்துமா, இரத்தக் கொதிப்பு, காமாலை போன்ற நோய்களைத் தீர்க்கும்.

**எனக்கு வியர்வை நாற்றம் அதிகம். இதனைத் தீர்க்கும் மூலிகை உண்டா?**
ஆவாரைப் பூவை நிழலில் உலர்த்திப் பொடி செய்து தேனீர் போன்று காலை மாலை பருகி வந்தால் கற்றாழை நாற்றம், உடல் வரட்சி, சலரோகம் போன்றவை நீங்கி பொன்னிறமான தோற்றம் பெறலாம். அதி மூத்திரம், உட்சூடு குறையும்.

**மார்பு காம்பில் வெடிப்பு நீங்க வழியென்ன?**
ஆமணக்கு எண்ணெய் தடவி வர சுகமாகும்.

**பாத வெடிப்புக்கு என்ன மூலிகை உதவும்?**
சிவனார் வேம்பு

**உடல் பருமன் குறைய எளிய முறை என்ன?**
இலந்தை இலைகளைப் பறித்து வந்து நன்கு அரைத்து அரிசி கழுவிய நீரில் கொதிக்க வைத்து அருந்த வேண்டும். ஊளைத் சதை குறைந்து விடும்.

**புழுவெட்டு (Alopacia) நீங்கி மயிர் முளைக்க என்ன வழி?**
ஊமத்தைப் பிஞ்சு ஒன்றை உமிழ்நீருடன் அரைத்து சொட்டை விழுந்த இடத்தில் தேய்த்து வந்தால் புதிய மயிர் வளரும்.

**இதய நோயாளிக்கு ஏற்ற உணவு எது?**
‘காளான்” மிகச்சிறந்த உணவு.


0 % இலும்
Bad Credit இலும் கூடிய வட்டி வீதத்தில் வீடு வாங்குவது
உங்களை நீங்களே அழிப்பதற்கு சமமானது
digi Media Creations
RE/MAX
Remax Vision Realty Inc.
1-2210 Markham Rd., Scarborough, ON, M1B 5V6
invis
CEYLINGO FINANCIAL GROUP.
416.430.0111
2929 Lawrence ave east, suite 203
Scarborough, ON M1P 2S8
Siva Ratnasingam
Mortgage Consultant
416.430.0111
2005, 2006 Diamond award winner
No. 1 Invis Mortgage agent in Canada
Karuna Gopalapillai
Real Estate Broker
416.430.0111


வீடு, வியாபாரம் வாங்க, விற்க..
20 வருடங்களாக இத்துறையில் முன்னணியில்.....
அனுபவம்! அறிவு! திறமை! பொறுமை!
THE CHAIRMAN'S CLUB
NATIONAL Award Winner 2003 - 2007
Top 1% in Canada
KARU'S ROYAL TEAM
Top 10 TEAM in CANADA
Karu Kandiah FRI. CRES,
Real Estate Broker.
Bus: 416-284-4751(24 Hrs)
Toll Free: 1-888-766-4456
ROYAL LEPAGE
Connect Realty, Brokerage
INDEPENDENTLY OWNED AND OPERATED
Real Estate துறையில்
ஈடுபட்டு வெற்றி காண விரும்புகிறீர்களா?
அழையுங்கள்..... 416-284-5555
Bayview/Major Mackenzie
3 Bedrooms, 3 Washrooms
Spacious, Open Concept, Bright Family Home In Desirable Richmond Hill Area. Hardwood On Main Floors
$1,700 For Lease
Passmore/Markham
3 Bedrooms, 2 Washrooms
Brookside 3 Bedrooom Brick House Backing On Park/School. Close To Ttc, Minutes To 40
$369,800
Neilson/Mclevin
3+1 Bedrooms, 4 Washrooms
Detached Home In A Quiet Neighbourhood, Close To Public & Catholic Schools, Ttc And Shopping
$319,000
Markham/Steeles
4 Bedrooms, 2 Washrooms
Excellent Location! 4 Bedroom Home, Less Than Four Years Old. Close To School, Ttc, Shopping
$420,000
Bayly/Monarch
3 Bedrooms, 3 Washrooms
Brand New Feehold Townhouse Never Been Lived In. Sundial-Frankling Model. Approx, 1580 Sq Ft
$259,900
Woodbine/Cosburn
4+1 Bedrooms, 3 Washrooms
Attention Renovators & Builders Amazing Opportunity! Ravine Property On Quiet Cresent. Great Street
$389,000
Mavis/Steeles
4+1 Bedrooms, 3 Washrooms
Attention Serious Buyers! Check Out This Beauty In The Brampton-Mississauga Border! 9' Ceiling, California Shutters
$449,900
Bayly/Monarch
3 Bedrooms, 3 Washrooms
Brand New Freehold Townhouse, Never Been Lived In! Sundial-Jackson Model 1620 Sq Ft, Very Practical Layout
$259,900
Mavis/Dundas
3+1 Bedrooms, 4 Washrooms
Fabulous Detached Central Mississauga Home. Freshly Painted, Bright Modern Kitchen With Backsplash
$424,900
Morningside/Finch
3 Bedrooms, 2 Washrooms
Laurier Built Freehold Townhouse. Practical Layout, Brand New Paint Throughout Great Buy For 1st Time Buyers
$279,900
9th Line/14th Ave
4 Bedrooms, 3 Washrooms
Excellent Box Grove Neighbourhood! 2712 Sq Ft! Less Than 1 Year New Arista Home! Dble Dr Entry
$549,900
Birchmount/Finch
3 Bedrooms, 3 Washrooms
Well Maintained Semi, Fantastic Location. Many Upgrades ,Hardwood Floors. New Paint.
$289,900
Neilson & Mclevin
3 Bedrooms, 3 Washrooms
Fernbrook Freehold Townhouse Move-In Condition, Parquet & Ceramic Floors On Main Level Close To 401, Ttc, Shopping
$299,900
Mccowan/Hwy 401
1+1 Bedrooms, 1 Washroom
Well Maintained, Bright & Spacious Condo With Sunfilled East View Exposure, Convenient Location
$175,800
Finch/Birchmount
1+1 Bedrooms, 1 Washroom
Well Kept Unit. Priced For Quick Sale. 24 Hr Security Gaurd, Close To School, Shopping, Steps To 24 Ttc.
$145,000
9th Line/Hwy 7
4 Bedrooms, 3 Washrooms
Beautiful & Gorgeous! 2 Years New Detached Home In Grand Cornell* Built By H&Rd
$469,900
Brimley/Finch
4+1 Bedrooms, 2 Washrooms
Condo Townhouse Close To School, Ttc, Shops And Park
$244,900
Neilson/Mclevin
2 Bedrooms, 2 Washrooms
Well Maintained, Spacious, Bright, Corner Suite W/2 Baths. Approx. 1235 Sqft. Priced To Sell Fast
$164,900
Mccowan/Ellesmere
2 Bedrooms, 2 Washrooms
Enjoy Luxury Condo Living In This Unit! Close To Scaborough Town Centre, Go, Rt & Ttc, Great Schools
$254,900
Don Mills/Eglinton
2 Bedrooms, 1 Washroom
Well Maintained Unit ,Newly Re-Finished Parquet Floor , Newly Renovated Washroom, Close To Dvp, Shopping
$124,900
ROYAL LEPAGE
Connect Realty, Brokerage
Dir: 416-284-5555
BUS: 416-284-4751(24 HRS)
TOLL FREE: 1-888-766-4456

# கோடை காலம்

செந்தூரன் புனிதவேல்
senrhuran@thaiveedu.com

ஆடி மாதம் பிறந்துவிட்டால் உத்தியோக பூர்வமாக கனடாவில் கோடைக்காலம் பிரகடனப்படுத்தப்பட்டுவிடும். கோடையுடன் கூடவே வருவது நீச்சல் உடை, புல்லை வெட்டுதல், வீட்டிற்கு பின்னால் பாபிகியூ செய்தல், கல்யாண வீடுகள் இப்படி பலப்பல சம்பிரதாயங்கள் ஆகும்.

நீச்சல் உடையுடன் பீச்சுக்கு போவதிலும் பாபிகியூ செய்வதிலும் விபத்துக்கள் விளைவது சர்வசாதாரணமாகிவிட்டது. பீச்சுக்கு போகும் வழியில் பீச்சில் குளிக்கும் வேளையில், பின்வீடு திரும்புகையில் இப்படி எல்லா நிலையிலும் விபத்துகள் சர்வசாதாரணமாக இடம்பெறுகிறது. இவற்றில் மதுபானம் ஒரு முக்கிய இடம் வகிப்பதை யாவரும் அறிவோம்.

அடுத்ததாக பாபகியூ ஒரு ஆரோக்கியமான பொழுதுபோக்காக இருப்பதுடன் வீட்டுப் பெண்களுக்கு சமையலில் இருந்து ஓய்வு கொடுத்துவிட்டு ஆண்கள் சமையலில் தமது கைவரிசையை காட்ட முன்வருவதை காணலாம். இங்கும் ஒரு முக்கிய விடயத்தை கவனிக்க வேண்டும். வீட்டில் சமையல் செய்பவர் மது அருந்தி விட்டு சமைத்தால் அன்றைய சாப்பாடு எப்படி இருக்கும், எனவேதான் பாபகியூ செய்பவர் மது அருந்தாமல் இருப்பது நல்லது. அருந்துவதானால் அளவோடு அருந்த வேண்டும்.

### விபத்துக்களை தவிர்ப்பதற்கு சில அறிவுரைகள்

மூடியை திறந்துவிட்டு பாபகியூ நெருப்பை ஏற்றுங்கள். அல்லாவிடில் மேலதிகமான எரிவாயு நிரம்பி கிளைமோர் வெடிகுண்டு வெடிப்பது போல் வீட்டில் வெடித்து பெரும் நஷ்டத்தை ஏற்படுத்திவிடும்.

பாபகியூக்கள் நிலத்திரைப்படம் போன்று வந்தவர்களுக்கு மட்டுமே உரியது. எனவே குழந்தைகளை பாபகியூ அடுப்பிற்கு அருகில் விட வேண்டாம். அவர்கள் கவனயீனமாக ஏதாவது செய்து அனர்த்தங்களை ஏற்படுத்தலாம்.

எரிவாயுவை திறந்தவுடனேயே அதை பற்றவைத்துவிடுவதவசியம். சில சமயங்களில் கவனத்தை வேறு விடயங்களில் செலுத்துவதால் பெரும் தீ விபத்து ஏற்பட்டுவிடலாம். பல சந்தர்ப்பங்களில் பாபகியூவை ஏற்றிய பின்பு அதனை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்க மிக அவதானமாக இழுத்து செல்ல வேண்டாம். ஒரு இடத்தில் பற்றவைத்தால் அங்கேயே முழு சமையலையும் முடித்து விடுங்கள். பல விபத்துக்கள் எரியும் அடுப்பை இடம்மாற்றும் வேளையில் தான் இடம்பெறுகிறது.

பாபகியூ உங்கள் வாகனம் போன்ற ஒரு பொறி அல்லது இயந்திரம். அதை செய்தவர்கள் அதன் பராமரிப்புக்கான பல வேலைப்பாடுகளை தந்திருப்பார்கள் அதன்படி அதனை பராமரித்தால் தான் அது நீண்டகாலத்திற்கு விபத்துகள் ஏற்படாமல் செயற்படும்.

தவறியும் ஒரு தீ ஏற்பட்டால் அருகில் உள்ளவர்களை உடனே விலகி நிற்கச் சொல்லிவிட்டு தீயணைக்கும் படையினருக்கு (911) அறிவியுங்கள். நீங்கள் ஒருபோதும் சுயமாக அணைக்க முற்பட வேண்டாம்.

### பாபகியூவை எங்கு வைப்பது?

பாபகியூக்கள் வெளியிடத்தில் சமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. எனவே வீட்டிற்கு வெளியே தான் இவற்றை பாவிக்க வேண்டும்.

அனேகமான இடங்களில் பல்கனியில் பாபகியூ செய்வது தவிர்க்கப்பட்டுள்ளது. இதற்கு காரணம் அது கட்டிடத்துடன் ஒட்டியுள்ளதாலும் எரிவாயு தப்பும் வேளையில் அங்கு எளிதாக தீவிபத்து ஏற்படலாம் என்பதாலும்.

மேலே கூறிய காரணத்துக்காகத்தான் பாபகியூக்கள் குறைந்தபட்சம் கட்டிடத்திலிருந்து பத்து அடிக்கு அப்பால் வைத்து சமையலை செய்ய வேண்டும்.

பாபகியூக்கள் பாவிக்காத வேளைகளில் மூடிவைப்பதவசியம். இது பழுதடைவதையும் துருபிடிப்பதையும் தவிர்த்து நீண்டநாட்கள் பழுதடையாது உபயோகிக்க உதவும்.



### எரிவாயுக்கலப் பராமரிப்பு

எக்காரணம் கொண்டும் கட்டிடத்திற்கு உள் எரிவாயுக்கலத்தை பாவிக்காதவேளைகளில் வீட்டினுள் வைக்கக் கூடாது. உதாரணத்திற்கு வீட்டினுள் ஒரு தீ விபத்து ஏற்படும் வேளையில் எரிவாயுக்கலம் வெடித்து பெரும் சேதத்தை விளைவிக்கும்.

கலத்தில் துருப்பிடித்திருந்தால் அல்லது சிறிய நெளிவுகள் இருப்பின் அவற்றை பாவிப்பதை தவிர்த்துக் கொள்ளுங்கள்.

பாவித்து முடிந்தவுடன் பாபகியூவில் உள்ள எரிவாயு குழாயை அடைப்பதுடன் எரிவாயு கொள்கலனையும் அடைத்து வைக்கவும். இது இரட்டிப்பு அரனை தருவதாயிருக்கும். எரிவாயுக்கலனை நிரப்பும் வேளைகளில் முற்றாக நிரப்ப வேண்டாம். அதாவது வாயுக்கலன் 22 இறாத்தல் கொள்ளுமானால் 18 அல்லது 19 இறாத்தல் வாயு வரை மட்டும் நிரப்புங்கள். இப்படிச் செய்வதால் உள்ளே உள்ள எரிவாயு உஷ்ணமடையும் வேளைகளில் விரிவடைய இடம் தரும்.

கொள்கலன்களை உங்கள் வாகனத்தில் கொண்டு செல்லும் வேளையில் வாகனத்தின் உள்ளே வைக்காமல் பின்னால் வைப்பதுடன் அதனை முழுமையாக மூடாமல் கயிற்றால் கட்டிவிடுங்கள். இப்படி செய்தால் ஏதாவது எரிவாயு வெளியேறும் பட்சத்தில் அது தீப்பற்றாமல் வெளியே தப்பிவிட உதவியாயிருக்கும்.

எப்போதும் CGA, CSA அல்லது ULC யினால் சிபாரிசு செய்த பாபகியூக்களையும், உபகரணங்களையும் பாவியுங்கள்.

கொள்கலன்கள் பத்துவருடத்திற்கு ஒரு முறை மீள் பரிசோதனை செய்து கொள்ளுங்கள். நேரகாலத்தில் ஏதவது எரிவாயு வெளியேறுவது தெரிந்தால் உடனே தக்க பாதுகாப்பினை பெறலாம். இதற்கு நல்ல சவக்காரத் தண்ணியை குழாய், குழாய் பொருத்துமிடம், கலத்தில் உள்ள பொருத்துகளில் எல்லாம் தடவினால் ஏதும் எரிவாயு வெளியேறினால் எளிதாக கண்டு விடலாம்.

இந்த கோடைக்காலத்தில் உங்கள் சமையலை சிறப்பாக செய்து அனுபவியுங்கள்.

■ ■ ■

# மீண்டும் வருவது Nortel?


மாறன் செல்லையா
- நிதி திட்டமிடல் ஆலோசகர் -
maran@thaiveedu.com




இந்த கட்டுரைத் தொடரை ஆரம்பித்த நாள் தொடக்கம் Nortel நிறுவனத்தைப் பற்றி பலமுறை தொட்டு எழுதியிருந்தும் முழுமையாக எதுவும் எழுத சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இந்த முதலீடு என்ற வகையில் எம்மக்களில் பலருக்கும் தெரிந்த பெயர் Nortel ஆகும். பல தமிழ் மக்கள் 2001 அளவில் வீட்டை அடமாணம் வைத்துக்கூட Nortel போன்ற முதலீடுகளை செய்துள்ளார்கள் அந்த நிறுவனத்தில் ஒரு காலகட்டத்தில் தமிழில் உரையாடக்கூடிய அளவிற்கு கூடிய எண்ணிக்கையில் தமிழர்கள் வேலை செய்து வந்திருக்கிறார்கள். ஆனால் 2001ல் பங்குச் சந்தை வீழ்ச்சியடைந்ததோடு எல்லாம் தலைகீழாக மாறிவிட்டது.

ஆனால், அண்மைக்காலமாக பலமாற்றங்களையும் புதிய அனுகுமுறையையும் கைக்கொண்டு பழைய நிலைக்கு நிறுவனத்தைக் கொண்டு வர முயற்சிக்கிறார் புதிய நிறைவேற்று இயக்குனர் Mike Zafirovski அவர்கள். கடந்த வாரம் நடத்தப்பட்ட வருடாந்த முதலீட்டு ஆய்வாளர்கள் மகாநாட்டைத் தொடர்ந்து முதலீட்டாளர்கள் Nortel பங்குகளை (NT/TSX) விலையை 25%ஆல் உயர்த்தி இருக்கிறார்கள். இது ஒரு முழு நாளில் ஒரு எட்டு மணித்தியாலங்கள் நடந்த நிகழ்ச்சியாகும். இந்த நிகழ்வில் பல விடயங்களை அவர்கள் தெளிவு படுத்தியிருக்கிறார்கள்.

இந்த மகாநாட்டில் 2011ம் ஆண்டு வரை Nortel நிறுவனத்தில் எதிர்காலத்திட்டங்களை தெளிவுபடுத்தியதும் கடந்த காலத்தை விட தற்போது Nortel நிறுவனம் நன்றாக நடத்தப்பட்டு வருவதாகும். ஆனால் முதலீட்டாளர்கள் இன்னும் எதிர்பார்க்கிறார்கள்.

2011ல் எதிர்பார்க்கப்படும் வளர்ச்சி Enterprise Solution என்ற பிரிவில் இருந்து கிடைக்க இருக்கிறது. 60 million இலாபத்தை 2007ல் தந்த இந்தப் பிரிவு 2011ல் 675 million இனைத் தர இருக்கிறது.

ஆனால் கடந்த நாலுவருட வளர்ச்சியைப் பார்க்கும் போது இன்னும் நாலு வருடத்தில் இந்த பத்துமடங்கு வளர்ச்சி Nortel தர முடியுமா என்ற கேள்வி எழுகிறது. Nortel Bay Networks என்ற நிறுவனத்தை வாங்கியதிலிருந்து அதனுடைய அந்த பங்கு (Market Share) வீழ்ச்சியடைந்து வந்துள்ளது. அதனால் லாபமீட்டலும் வீழ்ச்சியடைந்து வந்துள்ளது.

ஆனால் Chief Strategy officer George Riedl என்பவர் Nortel காட்டும் முக்கிய வித்தியாசம் afficient designs என்றார். அதாவது போட்டி, நிறுவனமான செயவின் உற்பத்திகள் மிகவும் கூடிய சக்தியைக் குடிக்கும் என்பதாகும். அவர் மேலும் கூறுகையில் Nortel உற்பத்திசெய்யும் கருவிகள் கடந்த பத்து ஆண்டுகளில் பல கட்டமைப்பு மாற்றங்களைக் கண்டுள்ளன. இந்தக் கருவிகள் பொருத்தப்பட்டவுடன் எவர் கண்ணும் படுவதில்லை. ஆனால் அமெரிக்காவில் மட்டும் இந்தக் கருவிகள் 100 Billion Kilo மின் சக்தியை இக்கருவிகள் பயன்படுத்தும். அதிகரித்து வரும் மின்சார விலைகளினால் 2011 அளவில் இந்த கருவிகள் 10 to 15 Billion Dollar வரையிலான மின் சக்தியை உபயோகப்படுத்தும்.

ஆகவே இந்த கருவிகளை மின்சக்தி உபயோகத்திறன் மிகவும் முக்கியமானது. 5000w கருவியானது 2500w கருவியை விட இருமடங்கு சக்தியை பாவிக்கின்றது. அந்த இருமடங்கு சக்தி உபயோகத்தில் பெரும் பகுதி வெப்பமாக வெளியிடப்படும். அதனால் குளிர்சாதனக் கருவிகளின் உபயோகத்தினாலும் மின் சக்தி விரயம் செய்யப்படும்.

இந்த வகையான விளம்பர உத்தியை Nortel கொண்டுவருகிறது. இது பற்றி தற்போது மத்தியஸ்தம் சொல்ல எனக்கு முடியாவிடினும் இது ஒரு முக்கியமான வித்தியாசமான தந்திரமாகும்.

உதாரணமாக பல வருடங்களாக Advanced Micro devices(AMD/NYSE) Intelக்குப் பின்னாக மிகத்தூரத்தில் இரண்டாவதாக வந்து கொண்டிருந்தது. இந்த இரு நிறுவனங்களும் கணனிகளின் இதயமான CPUவை தயாரிப்பவை ஆகும். AMDஇன் உற்பத்திகள் Intelஇன் உற்பத்திகள் போலவே இருந்த போதும் 10-20 % மலிவாகவும் சந்தையில் 10% தான் AMDயின் உற்பத்திகள் விற்பனையாகின. ஆனால் 2004/5 இல் AMD புதிய Dual Core தொழில்நுட்பத்தினைப் பாவித்து மலிவான, வேகமான, குறைந்தளவு மின்சக்தியைப் பாவிக்கும் CPUக்களை செய்தார்கள். இதனால் AMD கள் விற்பனை சந்தையில் 20%ம் பிடித்தது. அதனுடைய பங்குகளின் விலை ஒன்பது மாதத்தில் 170%ஆல் உயர்ந்தது.

அமெரிக்க எழுத்தாளர் Mark Twein ஒரு முறை சரித்திரம் மீண்டும் நடப்பது இல்லை. ஆனால் அது எதிரொலிக்கும். (History doesent repeat it self but its shyme) என்றார். அவர் இதைச் சொன்ன போது தொழில்நுட்ப நிறுவனங்களில் முதலிடுவது பற்றி சிந்தித்து இருக்க மாட்டார். ஆனால், Nortel தனது போட்டி நிறுவனங்களில் இருந்து தன்னை தனிமைப்படுத்த தொடங்கியுள்ளது. சக்தியின் நுகர்ச்சி என்பதை மிகச் சிறந்த விவேகமான விற்பனைத் தந்திரம். இது AMDக்கு வேலை செய்துள்ளது. Nortelக்கும் வேலை செய்யாது என்று இல்லை.

கடந்த மாதம் எண்ணெய் விலைபற்றி எழுதும் போது இந்த மாதம் இந்தக் கட்டுரையை எழுதுவேன் என நினைத்திருக்கவில்லை. ஆனால் சக்தியில் நுகர்வு என்பது எண்ணைய் விலை மட்டுமல்லாது நிலக்கரி, யூரேனியம் இவற்றால் வரும் மின்சக்தி என்பதும் அடங்கும். தற்போது Nortel போன்ற வித்தியாசமான துறையைச் சேர்ந்த நிறுவனங்களும் சக்தியைப் பற்றி பேசத் தொடங்கியிருப்பது இதன் முக்கியத்துவத்தைக் காட்டுகின்றது.

Nortelஇன் பங்கும் 25 % உயர்ந்து முதலீட்டாளர்கள் மத்தியில் இந்த சக்தி சேமிப்புக்கு இருக்கும் தெரிவையும் அதனால் வரும் ஆதாயங்களையும் அதனால் Nortelஇன் வாடிக்கையாளர்கள் Nortel கருவிகளை வாங்குவதன் மூலம் பணத்தை மீதப்படுத்தும் அதேவேளை Nortelஇன் வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை கூடும். அதனால் Nortelம் பணம் பண்ணும் என நினைக்கிறார்கள்.
நீங்களும் Nortel பங்குகளின் விலைமீது ஒரு கண் வைத்திருங்கள்.

■ ■ ■

# பள்ளிக்குப் போகுமுன்...



மஞ்சுளா ராஜலிங்கம்
manju@thaiveedu.com

குழந்தைகள் பாலர் வகுப்புக்குப் போகத் தொடங்கி விட்டார்களோ இல்லையோ, அவர்களைப் பெற்றவர்களும், அவர்களைப் பராமரிக்கும் குழந்தைக் காப்பாளரும், தம்முள் கேட்டுக் கொள்ளும் முதல் கேள்வி, நம் குழந்தைகள் பள்ளிக்கூட வாழ்க்கைக்கு மன, உடல், பயிற்சி ரீதியாகத் தயாராகி விட்டார்களா என்பதுதான். தம்மால் இவ்விடயத்தில் எவ்வாறு உதவ முடியும் என்ற கேள்வியும் சதா எழத்தான் செய்யும். நீங்கள் வீட்டில் இருப்பவராயிருக்கலாம், குழந்தைகளின் தாத்தா, பாட்டியாயிருக்கலாம், நீங்கள் ஒரு குழந்தைக் காப்பாளராக இருக்கலாம், அல்லது ஒரு வேலைக்குப் போகும் பெற்றோராக இருக்கலாம், பின்வருவனவற்றை வாழ்க்கையில் கொஞ்சம் பின்பற்றிக் கொண்டால், குழந்தைகளை முதல் நாள் பாலர் வகுப்பிற்குத் தயார் செய்து கொள்ளலாம். ஏற்கெனவே நீங்களும், குழந்தைகளும், சேர்ந்தாற்போல இதற்கான ஏற்பாட்டை உங்கள் மனம் அறியாமலே பின்பற்றிக் கொண்டிருக்கலாம். குழந்தைகளை விளையாட்டிலும், அனுதின அலுவல்களில் ஊக்கப் படுத்தியும், அவர்கள் நாளுக்கு நாள் காட்டும் ஆர்வத்தின் அளவைக் கண்டு நீங்களே வியந்து போவீர்கள்.

## எழுத்து

தயவுசெய்து குழந்தைகளுக்குப் புத்தகங்களை வாசியுங்கள்! வாசியுங்கள்!! வாசியுங்கள்!!! உரக்க வாசிப்பது குழந்தைகளின் மனதில் பலவற்றை நினைவில் தக்க வைக்கும் (வசனநடை, வாசிக்கும் ஏற்றத் இறக்கம் குரல் இயக்கங்கள், வசனம் தொடங்க வேண்டிய வரி போன்றவை).

அடிக்கடி வாசிகசாலைகளுக்குக் குழந்தைகளைக் கூட்டிச் சென்று, வாசிக்க வையுங்கள்! ஒரு கதை சொல்பவரின் குழுவில் இருக்க விடுங்கள்! பொம்மைப் பேச்சுக்கள் போன்ற நிகழ்ச்சிகளை இரசிக்க விடுங்கள்!

குழந்தைகளின் பெயரின் சக்தியை மங்கிப் போகச் செய்து விடாதீர்கள். குழந்தைகள் தமது பெயரை, ஒரு பெரிய சுவரொட்டி மட்டையில், கொட்டை எழுத்துக்களில் தமது பெயர்கள் அழகாக எழுதப் பட்டிருந்தால் ரசிக்கும். தன் பெயரின் எழுத்துக் கூட்டல் என்னவென்று நினைவில் வைத்திருக்கும். எழுத்துக்களை முதன்முதலில் படிப்பிக்கும் போது, குழந்தைகள் தம் பெயரை முதலில் எப்படி தாமாகவே எழுதுவது என்பதைச் சொல்லிக் கொடுங்கள்.

பிள்ளையின் பெயர் எந்த எழுத்தில் ஆரம்பிக்கின்றதோ, அதே பெயரில் உருவாகும் பலவித சொற்களையும் சொல்லிக் கொடுங்கள். உதாரணத்திற்கு, குழந்தையின் ஆங்கில எழுத்து R என்ற எழுத்தில் ஆரம்பித்தால், மேலும் பல சொற்றொடர்கள் அதிலேயே உள்ளதே! (rain, rice, rock போன்றவை).

குழந்தைகளுக்கு முதல் எழுத்துப் பெரியதாகவும் (upper case) மற்றைய தொடர் எழுத்துக்கள் சிறியதாகவும் (lower case) எழுதப்படல் வேண்டும் என்பதை கற்றுக் கொடுங்கள். இவ்வெழுத்துக்களை, அரிசி, முகத்தில் பூசும் shaving cream, மணல், களிமண்ணில் எழுத்துக்கள் போல் செய்வது, puddings, finger paint, glitter crayons, big sidewalk chalk போன்றவற்றின் உதவியைக் கொண்டு எழுதுமாறு ஊக்குவியுங்கள்!

பிள்ளையைச் சுற்றி, எழுதுவதற்கு எத்தனையோ விடயங்கள் கண்முன்னால் இருக்கின்றன. விளையாட்டுப் பொருட்கள், உணவகங்கள், கடைகள், காலை ஆகாரங்கள் (cereals). வீடுகள், வீதிகள், கடைகள், இவற்றில் எழுத்துக்கா பஞ்சம்? ஒரு எழுத்தைக் கண்டுகொண்டு, "கண்டுபிடித்து விட்டேன்" என்று அந்த எழுத்தின் உச்சரிப்பைக் கொண்டு குழந்தையையும் அப்படியான விளையாட்டுக்குள் கொண்டு செல்ல விளையுங்கள்! குழந்தையின் இரசனையைப் பொறுத்துத்தான் குழந்தை இதில் ஆர்வம் காட்டும்.

குளிர்சாதனப் பெட்டியின் மேல், காந்த அமைப்புக்கள் பொருத்திய எழுத்துக்களை குழந்தைக்கு எட்டும்படி வைத்து, அவற்றிலிருந்து எழுத்துக்களையும், சொற்களையும் அடையாளம் காணச் செய்யவும், உருவாக்கவும் சொல்லலாம்.

நீங்கள் எழுதும் மளிகைப்பொருளின் பட்டியல், காசோலையில் எழுதும் முறை, கடிதங்கள் எழுதுதல் போன்றவற்றைக் குழந்தைகளின் கவனிப்பில் செய்யுங்கள்! அவர்களுக்கும் ஒரு துண்டுக் காகிதத்தையும், எழுதுகோலையும் கொடுத்து, அவர்கள் மனதில் உள்ள பட்டியலை எழுதச் சொல்லுங்கள் (உங்களால் அந்த எழுத்துக் கோர்வையைப் படிக்க முடியாவிட்டால் பரவாயில்லை, ஏனெனில் எழுத்துக்களை அடையாளம் காண்பதுதான் இந்த வயதில் முக்கியம், குழந்தைகள் தான் என்னென்னத்தையோ கிறுக்குமே?).

ஒரு பெட்டியைச் செய்து அதனுள் குழந்தைகள் பாவிப்பதற்கு வசதியாக, விதவிதமான எழுதும் பொருட்கள், அழகிய நிறக் காகிதங்கள், புத்தகங்கள் போன்றவற்றைப் போட்டு வையுங்கள். இது குழந்தைகளின் எழுத்தாக்கத்தை ஊக்குவிக்கும்.

பாலர் பாடல்களைப் பாடுங்கள்! அவற்றை நடியுங்கள்! அவற்றை வாசியுங்கள்!

விடுகதை, கயிறு தாண்டி குதிக்கும் விளையாட்டு (skipping), விரல் மடித்துப் பாவிக்கும் விளையாட்டுக்கள் போன்றவற்றைச் சம்பந்தப்படுத்திப் பாடும் பாலர் பாடல்களை அதிகம் பாடுங்கள்!

குழந்தையின் பெயருடன் சம்பந்தப்பட்டு வரும் ஒத்த எழுத்துக்களுடைய சொற்களை உருவாக்கிக் காட்டுங்கள ' (குழந்தையின் பெயர் mathy என்றால், அப்புறம் sathy, pathy, vathy என்று இப்படி பலவற்றையும் உருவாக்கலாம்).

## கணக்கு

குழந்தையின் கவனத்தை, இலக்கங்கள், நிறங்கள், வடிவங்களின் இலக்குகளுக்குத் திருப்புங்கள்! இவற்றை கடைகளில், குறியீட்டுக்களில் அடையாளம் காணும்படி குழந்தையை உற்சாகப் படுத்துங்கள்!

சின்னச்சின்ன சமையலறை வேலைகளில் உதவக் கேளுங்கள். மாவைப் பாத்திரத்தில் அடைப்பது, தண்ணீர் விட்டுத் தருவது, அளப்பது, ஊற்றுவது, சேர்ப்பது இப்படி ஏதாவது ஒன்றைச் செய்யவிடலாம்.

ஒரு வேலையைச் செய்யும்போது, எப்படி இனம், தரம் பிரித்து வகைப்படுத்துவது என்று கற்றுத் தாருங்கள். இதில் துவைத் துலர்ந்த உடைகளைத் தரம் பிரிப்பது, பல நிறமுடைய விளையாட்டுக் கட்டைகளுடன் விளையாடுதல், விளையாட்டுப் பொருட்களை தரம் பிரித்தல், M&M போன்ற இனிப்பு வகையறாவைச் சாப்பிடும்போது, அவற்றை நிறம்வாரியாகத் தரம் பிரித்தல் போன்றவையைச் செய்ய ஊக்குவிக்கலாம்!

கணக்கு அறிவைப் பெருக்குவதற்கு, ஒன்றிலிருந்து ஐந்துவரை எழுதிய இவ்விரண்டு சீட்டுக்களை (ஒவ்வொரு எண்ணிலும் இரண்டு முறை) வைத்து கூட்டல் முறையினைப் பயிலச் செய்யுங்கள். எண்ணிக்கையை ஒன்றுடன் ஒன்று பொருந்தச் செய்தல், வீட்டைச் சுற்றியுள்ள, அல்லது வீட்டிலுள்ள பொருட்களில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதிலுள்ள எண்ணிக்கைக்கேற்ப அந்த இலக்கங்களைப் பக்கத்தில் வைப்பது, நினைவாற்றலைப் பெருக்கும் எண்ணிக்கை விளையாட்டுக்களை விளையாடுவது போன்றவற்றில் உங்கள் குழந்தையின் சிந்தனையைத் திசை திருப்புங்கள். இதே விளையாட்டை நிற, வடிவ வாரியாகவும் படிப்பதில் ஈடுபடுத்தலாம்.

எண்ணுவதற்கு வீட்டிற்குள்ளேயே எத்தனையோ பொருட்கள் இருக்கின்றன (புத்தகங்கள், பேனாக்கள், காலணிகள், விளையாட்டுப் பொருட்கள், உடைகள்). எண்ணும் போது, அவற்றை ஒதுக்கிவிட்டு எண்ணுமாற் போல் குழந்தையை ஊக்குவியுங்கள். மற்றும் தாயக்கட்டையை உருட்டி விளையாடும் விளையாட்டு, சீட்டுத் துருப்பு விளையாட்டு என்பவற்றை விளையாட ஊக்குவித்தலும் நலம்.

குழந்தையின் கலையார்வத் திறனை ஊக்குவிக்கும் முகமாய், நிறப் பேனாக்கள், crayons, markers, பென்சில்கள் போன்றவற்றைக் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுங்கள்.

மணிகள், முத்துக்கள் போன்றவற்றில் அணிகலன்கள் செய்யக் கற்றுக் கொடுங்கள்.

விளையாட்டுக் களியை வாங்கி, அவற்றில் விதவிதமான உருவங்கள் (பொம்மை, சட்டி, புத்தகம், தட்டு) செய்யச் சொல்லிக் கொடுங்கள்.

சின்னத் தூக்கியால், எப்படி கண்ணுக்கு நுண்ணிய பொருட்களைக் கவ்வியெடுப்பது என்று காட்டிக் கொடுங்கள்.

puzzle துண்டுகளை எப்படிப் பொருத்துவது என்று காட்டிக் கொடுங்கள்.

விளையாட்டுக் கட்டைகளை விதவிதமாகப் பொருத்தி உருவங்கள் அமைக்கும் விதங்களை சொல்லிக் கொடுங்கள்.

நல்ல பிரகாசமான நிறங்களுடைய பேனாக்களைப் பயன்படுத்தி எப்படி உருவங்கள் வரைவது அல்லது பிம்பங்கள்வரைவது என்று கற்றுக் கொடுங்கள்.

வண்ணக் காகிதங்களைப் பிரித்து, கோந்து கொண்டு ஒட்டி பலவித உருவங்களையும், பொருட்களையும் செய்யும் விதங்களைக் காட்டிக் கொடுங்கள்.

கத்தரிக்கோலைக் கொண்டு, நேராக வெட்டுவது, நெளிநெளியாக வெட்டுவது, வளைத்து வெட்டுவது போன்ற வித்தைகள் செய்வது எப்படி என்ற இரகசியத்தைக் கற்றுக் கொடுங்கள்.



### பொதுவில் மற்றவருடன் பழகும் வகையும், தன்னம்பிக்கையும்!

விளையாடும் மற்றும் பேசும் குழந்தைகளுடன் பழகும் வாய்ப்பை உங்கள் குழந்தைக்கு உருவாக்கிக் கொடுங்கள்.

பகிர்ந்துணர்வையும், சந்தர்ப்பம் அளிக்கும் முறையையும் சொல்லித்தரல் வேண்டும்.

சின்னச்சின்ன வேலைகளைச் செய்யக் கொடுப்பதன் மூலம், "நான் ஒரு வேலையை முடித்து விட்டேன்" என்ற தன்னம்பிக்கையும், ஒரு பொறுப்புணர்ச்சியும் மனதில் உருவாகும்.

இப்பொழுதே எதையும் சொல்லிக் கொடுக்கத் தொடங்கியிருந்தால், பள்ளிக்கூடம் போகும் தருவாயில், குழந்தை இவற்றிற்கு மிகவும் பழக்கப் பட்டிருக்கும்.

தன்னம்பிக்கையுடன் பேசுவது எப்படி, உணர்வுகளை வெளிப்படுத்துவது எப்படி என்று சொல்லிக் கொடுங்கள்.

மற்றவர்கள் பேசும்போது, எப்படி அமைதியாக, தன் முறை வரும்வரை, பேசாமல் இருப்பது என்று கற்றுக் கொடுத்தல் அவசியம் (பேசிக் கொண்டிருப்பவரின் கண்களைப் பார்த்துக் கொண்டிருத்தல் அவசியம்).

### அவசர நேரங்களில்...

குழந்தைகள் வாய்மூலமாக தம் வீட்டு முகவரித் தகவல்களை சொல்லும்படி கற்றுக் கொடுங்கள் (தாய் தந்தையரின் பெயர், வீட்டு விலாசம், தொலைபேசி இலக்கம்).

நடக்கும்போது, தெருவைவிட்டு விலகி, நடைபாதையில் நடக்கும் வழக்கத்தைப் பழக்குவதோடு, தெருவில் போகும்போது, குழந்தைகள் இருபக்கமும் அவதானிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துங்கள்.

குழந்தைகள் தாமே தம் ஆடைகளை முடிந்து கொள்ள, பொத்தான்களைப் பொருத்திக் கொள்ள, snap மற்றும் zip பண்ணிக் கொள்ளக் கற்றிருக்க வேண்டும். நல்ல சுகாதாரப் பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொடுங்கள் (கைகளை அடிக்கடி கழுவுதல், தும்மும்போது மூக்கை அல்லது இருமும் போது, வாயைக் கையினால் பொத்திக் கொள்ளல், பற்களைத் துலக்குதல், தலையை வாருதல் போன்றன).

விளையாட்டுப் பொருட்களுடன் விளையாடியபின், அவற்றை உரிய இடத்தில் வைத்தல், தம்மைச் சுகாதாரமாகச் சுத்தமாக்கிக் கொள்ளல் போன்றவற்றை வழக்கமாகச் செய்யும்படி பழக்குங்கள். ■ ■ ■

# சிறிய வர்த்தகங்களும் புதிய தொழில்நுட்பங்களும்

ராகுலன்
- Accountant -
ragulan@thaiveedu.com



தக்கன பிழைத்தல் என்ற Darwin தத்துவத்திற்கேற்ப போட்டி என்பது எல்லா இடங்களிலும் இருக்கிறது. இந்த விதிக்கு சிறிய வர்த்தக முயற்சிகள் விலக்காக இருக்க முடியாது. இந்த போட்டியில் முன்னுக்கு வருவதானால் இருக்கக் கூடிய எல்லா வழிகளையும் பாவிப்பது முக்கியமானது.

தற்போது இருக்கக் கூடிய நவீன தொழில்நுட்பங்களைப் பாவித்து புதிய வாடிக்கையாளர்களைப் பெற்றுக்கொள்வது ஒரு சாத்தியமான வேலையே. தற்போது இணையத்தள வலையை, நன்கு உபயோகிக்கக் கூடிய புதுமையை, அரவணைக்கக் கூடிய திறமைசாலிகளுக்கு இணையத் தளத்தில் புதிய கதவுகளை திறக்கக் கூடியதாக இருக்கும்.

ஆனால் சரியாக திட்டமிடப்பட்ட இலக்குகளுடன் சரியான சந்தர்ப்பத்தில் பாவிக்கப்படாவிட்டால் ஒரு இணையத்தள சந்தைப்படுத்துதல் Spam என்ற வாடிக்கையாளர்களால் வெறுக்கப்படும் வகையைச் சேர்ந்துவிடும். எந்த வர்த்தகர்களுக்கும் ஒரு வெற்றிகரமான வழிமுறை என்னவெனில் உங்கள் சந்தையை அடையாளம் கண்டு இலக்குகளை அறிந்து கொள்ள வேண்டும். இது எந்தவொரு வர்த்தகத்திலும் சிறியதோ பெரியதோ சந்தை நிலவர ஆய்வு முக்கியமானதாகும்.

உங்கள் வாடிக்கையாளர்கள் வரையறைகளை நீங்கள் அறிந்து கொள்ளாவிட்டால் ஒரு மிகக் கூடியளவு பர்வையாளர்களுக்கு செய்தியை கொண்டு செல்லுவதன் மூலம் உங்கள் பணத்தையும் முயற்சிகளையும் விரயம் செய்வீர்கள்.

கடந்த காலத்தில் ஒரு சந்தை ஆய்வை செய்வதற்கு சிறிய வர்த்தகர்களுக்கு முடியாது. ஆனால் தற்போது இருக்கும் தொழில்நுட்பம் அதை மாற்றியுள்ளது. இந்த தொழில்நுட்பங்களால் சந்தை ஆய்வை மலிவாகச் செய்ய முடிகிறது. இணையத்தளத்தில் சிறிய வர்த்தகர்கள் பாவிக்கக் கூடிய ஏராளமான தகவல்கள் இருக்கின்றன. ஒரு mouseஇன் clickஇல் ஆயிரக்கணக்கான பத்திரிகைகள், செய்திகள், புள்ளிவிபரங்கள், சமுதாய விபரங்கள் சம்பந்தப்பட்ட சங்கங்களின் விபரங்கள், போட்டியாளர்கள் தகவல்கள் என்பனவற்றை செலவில்லாது பெற முடிகிறது.

ஆனாலும் Google தகவல்கள் தவறான திசையிலேயே செலுத்தக் கூடியதாகவும் அமைந்துவிடும். கிடைக்கும் தகவல்களின் தராதரத்தை சரியாக அறிந்து கொள்ளும் தகமை இருக்க வேண்டும். இதற்கு புதிய வழியிலான இணையத்தளத்துடன் பழைய வழியான நூலகங்களையும் இணைத்துக் கொள்ள வேண்டும்.

உங்களுக்கு கிடைக்கும் தகவல்களை வகைப்படுத்தி எவர் கூடுதலாக எப்படி செலவழிக்கிறார்கள். எதில் ஆர்வம் காட்டுகிறார்கள் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். இதற்கு பல சிக்கலான கருவிகள் இருந்த போதும் இலகுவாக Micro soft Excelஇல் இதைச் செய்ய முடியும்.

இவற்றுடன் உங்களுக்காக ஒரு இணையத்தள இடம் (Website)ஐ அமைத்துக் கொள்ள வேண்டும். இதனால் உங்கள் சேவைகளை விற்பதுடன் பெறுமதி சேர்க்கப்பட்ட சேவைகளாக உதாரணத்திற்கு சில நினைவூட்டல்களை இணையத்தள இடத்தில் வழங்கலாம். இதனால் உங்கள் வாடிக்கையாளர்கள் மீது உங்களுக்கு இருக்கும் அக்கறையை உங்கள் புதிய வாடிக்கையாளர்களுக்கு நீங்கள் தெரியப் படுத்துகிறீர்கள். இது இணையத்தளம் தந்த முக்கிய மாற்றமாகும். இணையத் தளம் ஒரு அகலமான பார்வையாளர்களிடம் தகவல்களை தள்ளும் அதே நேரத்தில் உங்களின் வாடிக்கையாளர்களை உங்களிடமே வைத்திருக்கக் கூடிய வாய்ப்பும் இருக்கிறது. அத்துடன் இது உங்கள் வாடிக்கையாளர் மத்தியில் நீங்கள் மிகப் பெரிய ஆள் என்ற கற்பனையை உருவாக்கும்.

நீங்கள் உங்களை ஒரு விற்பன்னர் போல நடத்திக் கொள்ள வேண்டும். உங்கள் இணையத் தளத்தில் Blogஇல் ஆலோசனைகள் வழங்குவதுடன் மற்றவர்களால் Blog இலும் நீங்கள் குறிப்புகளை வழங்கலாம். இதன் மூலம் நீங்கள் உங்கள் (Brand) வியாபாரக் குறிபற்றிய அறிவை மக்கள் மத்தியில் ஏற்படுத்திக் கொள்ளலாம். நீங்கள் இந்தக் கருவிகளை பாவிப்பதனால் யார் அதைப் படிக்கிறார்கள் என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

உள்ளூர் ரீதியிலோ உலகளாவிய ரீதியிலோ வாடிக்கையாளர்களைக் கவர உதவும். இந்த தொழில் நுட்பங்கள் தற்போது சிறிய வர்த்தகர்களிற்கு அமைய மிக இலகுவாகிவிட்டது. இந்த தொழில் நுட்பங்களினால் facebook, youtube, online communities, e-news letter போன்றவை மூலமும் உங்கள் வாடிக்கையாளர்களைக் கவர்ந்து கொள்ளலாம்.

எமது சமுதாயத்தின் மத்தியில் இந்த வியாபாரப் போட்டி காரணமாக சிலர் தகாத வழிகளில் ஈடுபட்டு பல மனக் கசப்பான சந்தர்ப்பங்கள் இருப்பதைப் பார்த்திருக்கின்றோம். ஆனால் உண்மையில் இந்த தொழில்நுட்பங்களைப் பாவிப்பதன் மூலம் தகாத வழிமுறைகளைத தவிர்த்து எமது வர்த்தக சூழலில் ஒரு ஆரோக்கியமான நிலையில் கனடாவில் மற்றைய சமூகத்தினரும் மதிக்கும் வகையில் நமதுமக்களான வாடிக்கையாளர்களுக்கும் மற்றைய சமூகத்தினருக்கும் சிறப்பான சேவையை நமது வர்த்தகர்கள் வழங்க முடியும்.

■ ■ ■

# காவியின் பின்னால்

குமார் புனிதவேல் பக்கம்

kpunithavel@thaiveedu.com

ஒரு இராத்திரியில் சாந்தி கண் விழித்து அறை முகட்டைப் பார்க்காமல் பார்த்தால் அவள் மூச்சு மார்பை மெல்ல உயர்த்தி இறக்கிக் கொண்டிருந்தது. இரவு விளக்கில் அந்த அறையில் ஒதுக்குப்புறமாக ஒரு மூலையில் நித்திரையுடன் போராடிக்கொண்டு விழித்திருந்தான் அவன்.

சாந்தியின் காதில் இனிமையான குரலில் சுப்பிரபாதம் பாடுவது போன்ற இசை கலந்த வார்த்தையில் அழைப்புக் கேட்டது. அடிவானத்தில் ஆதவன் அடையும் நேரம் வந்துவிட்டது. நீயும் ஓய்வு கொள்ளும் நேரம் வந்துவிட்டது என்று அக்குரல் கூறியது. சாந்தி ஏக்கப் பெருமூச்சொன்றை விட்டாள். யாருக்குத்தான் பயண முடிவு மகிழ்ச்சியைத் தரும். உற்சாகத்தைத் தரும் அந்த இனிமை யான குரல் உற்சாகத்துடன் வேதனையை யும் சேர்த்தே தந்தது. முகட்டைப் பார்த்து படுத்திருந்த சாந்தி உதட்டை சற்று சலிப் புடன் விரித்து ஒரு பெருமூச்சை விட்டால். சாந்தி சாந்தமாக மீளாத் துயரில் படுத்து விட்டாள்.

அவ்வேளை காவி உடுத்த ஒரு இளம் சாமியார் அறைக்குள் வந்தார். சாந்தி அசையாமல் அப்படியே இருந்தாள். இருந்துகொண்டிருந்தவனும் அசையாதே இருந்தான். சாமியார் ஆறு அடி உயரமிருக்கும். சென்னிற மேனியில் கருநிறத் தாடி அழகாகத்தான் இருந்தது. சாந்தியின் அருகில் இருந்த சாமியார் மெதுவாக அவள் கையைத் தொட்டுப் பார்த்தார். சில்லென்று குளிர்ந்தது. மெதுவாக தன் கையை நெஞ்சில் வைத்துப் பார்த்தார். அங்கு அசைவு ஏதும் இருக்கவில்லை. சாமியார் உள்ளத்து இரகசியம் போல் அவள் இதயமும் அசைவற்று இருந்தது.

வேதனையோடு தலையைக் குனிந்தார். சாமியார் அவர் கண்கள் ஊற்றெடுத்து இரண்டு சொட்டுக் கண்ணீரைக் கொட்டியது. அவர் உதடுகள் துடித்தன. அது காயத்திரி மந்திரமும் அல்லது மித்துரு ஜெய மந்திர மும் அல்ல. நமச்சிவாயம் அல்ல. நாராயணனுமல்ல. மௌன மந்திரமே அங்கு நிலவியது.

மெதுவாக சாந்தியின் இரு கைகளையும் தூக்கி அவள் மார்பில் குறுக்காக வைத்தார் சாமியார். மெதுவாகத் திரும்பி கதிரையில் இருந்த வேளை, கருணையுடன் நோக்கி ‘உனது மனைவி நீண்ட துயில்கொண்டு விட்டால் வா இருவரும் இறைவனை வேண்டு வோம்’ என்று மென்மையாக அழைத்தார்.

வேதனையுடன் களைத்துப்போயிருந்த கணவன் தலையைத் தூக்கி சாமியாரைப் பார்த்தான். பின் மகுடி கேட்ட நாகம்போல் மயக்க நிலையில் கூப்பிய கரத்துடன் சாந்தியின் கட்டிலுக்கு வந்து சாமியார் பக்கத்தில் நின்றான். கண்களில் இருந்து நீர் தொடர்ந்து படிந்த வண்ணம் இருந்தது. அவன் சுயநினைவில்லா நிலையில் அதில் கூப்பிய கரத்துடன் எனக்கு ஏன் இப்படி என்ற பெருங்கேள்வி அலை நெஞ்சில் மோத இறைஞ்சி நின்றான்.

அருகில் இருந்த சாமியார் வேதனையின் எல்லையில் கலைப்பின் உச்சியில் நின்ற கணவன் தோளில் அன்பாக அணைத்து வா..... நீ கொஞ்சம் ஆறிவிட்டு வா என்று திரைக்கப்பால் இருந்த வெறும் கட்டிலில் அவனை படுக்க விட்டார்.

ஏன் செய்கிறோம். என்ற நினைவில்லாமல் சாமியினை தொடர்ந்த கணவன் கட்டிலில் அப்படியே சாய்ந்து தானும் முகட்டைப் பார்க் கப் படுத்தான். அவன் கண்ணுக்கு முகடு தெரியவில்லை. தெரிந்தது எல்லாம் சூ ஆணியத்தால் அழுது களைத்த பிள்ளையை அணைக்கும் தாயைப் போல் நித்திரை அவனை அணைத்துக்கொண்டது.

கணவன் மனைவி இருவருக்கும் நடுவில் சிலை போல நின்று காவி போட்ட துறவி பார்த்தார். அவர் நெஞ்சில் பெரும் பாறையை வைத்தது போல் ஓர் அமுக்கம். கலங்கிய கண்கள் மீளாத் துயரில் உள்ள சாந்தியையும் பின் மீளாத் துயரில் ஓய்ந்து படுத்துள்ள அவள் கணவனையும் நோக்கி யது அப்படி அவனொரு மணித்தியாலத் திற்கு மேல் நின்றிருப்பான். கனவு இல்லாத் துயிலில் சாந்தியும் எதிர்கால ஏக்கக் கணவனுடன் கணவனும் துயின்றுகொண்டிருந்தாள்.

சாமியார் மெதுவாக இறைவன் சன்னிதானத் திற்கு போவது போல் அவளருகில் வந்து பக்தியுடன் நின்றார். அவளின் விறைத்துப் போன கையை தூக்கி தன் இதழ்களில் வைத்து முத்தமிட்டுக்கொண்டு அவள் அழகு வதனத்தைப் பார்த்தார். அவர் குரல் இரவைப் போல் அமைதியாகவும் இரும்பைப் போல் உறுதியாகவும் ஒலித்தது. ‘ஐயோ சாந்தி’ என் ஆன்மாவின் ராணியே, என் வார்த்தையைக் கேட்டுவிட்டுப் போ. பேசுவதற்கு இப்போதுதான் சந்தர்ப்பம் கிடைத்தது. மரணம் எனது வாயைத் திறந்து உள்ளத்தின் ஆழத்தில் பதுங்கிக் கிடந்த இரகசியத்தை வெளிக்கொண்டுவர முடிந்தது. வேதனை என்நாவிற்கு உயிர்கொடுத்து என் வேதனையை வெல்லவைக்கிறது. என் ஆன்மாவின் அழுகையை கேள்! தூயவளே, இளமையின் வேகத்தில் நீ திரும்பும்வரை காத்திருந்தேன். மறைந்திருந்து உன் அழகைப்பார்த்து ரசித்திருந்தேன். இறைவன் சேவையில் வாழ்க்கையை அர்ப்பணித்து காவி உடுத்தவன் கதையைக் கேள். நீ இறைவன் அடியை சேர்ந்த பின்பு வெட்க மின்றி கூவி அழைப்பவனை திரும்பிப்பார். எனது காதலின் ஆழத்தை அதை மறைப்பதனால் நிரூபித்துவிட்டேன்.

காவிக்குள் மறைந்திருந்த அந்தரங்கத்தை வெளியில் காட்டிவிட்டுத் துறவி தனது இதயத்துக் காதலை அதை மறைத்து வைத்த வேதனையை, உள்ளத்து ஏக்கத்தை எல்லாம் கூட்டி அவள் நெற்றியில் நீண்ட முத்தத்தைக் கொடுத்தார். உடனே பின் வாங்கி ஒதுக்குப்புறத்தில் இருந்த கதிரை யில் விழுந்து குனிந்து முகத்தை தன்கை யில் புதைத்து அழுதார்.

‘இறைவா என்னை மன்னித்துவிடு’ என் இயலாமையைப் பொறுத்துக்கொள். என்னுள் பொதித்து வைத்த உனக்குத் தெரிந்த இரகசியத்தை இதற்கு மேல் என்னால் மறைத்துவைக்க முடியவில்லை. என்னை மன்னித்து வேதனையைத் தாங்கும் சக்தியை எனக்குத் தா?

தலையைத் தூக்காது விடியும்வரை மௌன ஓலமிட்டார் துறவி. சூரியன் உதிக்கும் வேளை அவள் மரணத் திரைக்குள் மறைந்து விட்டாள். அவன் மதத்திரைக்குள் ஒளிந்து விட்டான்.

■ ■ ■

# எதிர்க் குரல்கள்



தேவகாந்தன்
devakanthan@thaiveedu.com

கால காலத்துக்குமான உண்மையென்று எதுவுமில்லையெனச் சொல்லப்படுகிறது. அதை இப்படி நான் புரிந்துகொண்டிருக்கிறேன்: சாசுவத உண்மைகள்மீது தீவிரமாக எழுப்பப்பட்ட சந்தேகத்தில், அவை தம்மை வெளியுலகின் நியாயத்துக்கு தகதம் இருத்தலை நெகிழ்வித்து, மாற்றி வந்திருக்கின்றன என்பதுதான் அது. அதன் பரிமாணத்தின் மாற்றங்கள் ஓர் எதிர்வின் விளைவாகவே சாத்தியமாக இருந்திருக்கின்றன.

கலகக் குரல்கள் இடைநிலையில் தரிப்புக்கொண்டுவிடா. அவை தம் ஆகக்கூடிய உச்சத்தை அடைந்து நின்றே குரல் எடுக்கும். அதை அடைவதுவரை அவை ஓய்வதுமில்லை.

ஒவ்வொரு கட்ட சமூக காலத்திலும் அவை வெவ்வேறு தளங்களிலிருந்து வந்திருக்கும். ஆனாலும் தீவிரங்கள் ஒரே மாதிரியே இருந்திருக்கின்றன. அவ்வக்கால சமூகம் வேறு எந்த மாதிரியில் வந்தாலும் அக்குரல்களை கவனத்தில் எடுத்துக்கொண்டிராது. ஒரு காலகட்டத்தின் கலகக் குரல் நிச்சயமாகவே தத்துவப் பின்புலமற்றது. அது தன் கலகத்தை நியாயப்படுத்தும் தர்க்கத்தை மட்டுமே சொல்லும். பின்- நவீனத்துவம் தனக்கான அமைப்பு விதிகளைச் சொல்லாமை இங்கிருந்தே புரிந்துகொள்ளப்படவேண்டும். மாற்றை அது எப்போதும் சொல்லாது. கலகக் குரலின் மூர்க்கத்தில்தான் சமூகங்கள் நகர்ந்திருக்கின்றன. சாசுவத உண்மைகள் காலத்துகுத் தகவாய் மாறி வந்தமைதான் மனு நாகரிகத்தின் வரலாறு. மாறி வந்தன என்று சொல்கிற சுலபத்தில் அவை மாறிவரவில்லையென்பதையும் நாம் கவனத்தில் எடுக்க வேண்டும். பெரும் போராட்டங்கள், உயிர்த் தியாகங்கள், ரத்தச் சொரிவுகள், வாழ்வு அர்ப்பணங்கள் இல்லாமல் எதுவும் நடந்ததில்லையென்பதை சரித்திரம் சொல்லி நிற்கிறது.

இலக்கிய உலகின் கலகக் குரல்களெல்லாமேகூட இந்த நியதியில் வைத்துப் பார்க்கப்படவேண்டியவைதான். தமிழ்ச் சூழலில் இலக்கியத்திலே முதல் கலகக் குரல் எழுந்த இடம் வனம். அதைச் சித்தர் குரலாய்க் காலம் பதிவுசெய்து வைத்திருக்கிறது. மேலை நாடுகளில் விசித்திரமான இடங்களிலெல்லாம் கலகக் குரல்கள் ஒலித்திருக்கின்றன. குறிப்பாக பிரான்ஸில் avant-guardeகளும் surrialist களும் மலசல கூடங்களுக்கு அண்மையில் தம் படைப்பு, கருத்து பரிமாற்றங்களைச் செய்யும் மேடைகளை அமைத்து வந்திருக்கிறார்கள். மஹாராஷ்டிரத்தில் 1969இல் தலித் இலக்கியம் என்ற சொல்லாடல் பாவனை பெறமுன்பு, பொது மலசல கூடங்களுக்கு அருகே எதிப்பிலக்கிய வெளிப்படுத்துகைகள் நடைபெற்றிருக்கின்றன. இத்தகைய பின்புலத்தில் கடந்த காலங்களில் நடைபெற்ற இரண்டு நிகழ்ச்சிகளைப் பார்க்க நினைக்கின்றேன்.

ஒரு காலை நேர சென்னை கடற்கரை-மயிலை பறக்கும் ரயில் தடத்தில் இயங்கிய ரயிலில் ‘மூன்றாவது அறை நண்பனின் காதல் கதை’ என்ற அஜயன் பாலாவின் சிறிய சிறுகதைத் தொகுப்பொன்று வெளியிடப்பட்டிருக்கிறது. ரயில் இப்போதெல்லாம் இலக்கியவாதிகளின் கவனத்தைக் கவர்ந்த அம்சமாகியிருப்பது ஏனென்று தெரியவில்லை. ரயிலின் நீட்சியும், ஒரே தாள கதியில் இயங்கும் அதன் இயக்கத்தை இடையிடை ஊடறுத்துச் சிதைக்கும் லய பேதமும் ஒரு சுவையை எற்படுத்தியிருக்கலமோ? சில மாதங்களின் முன் ஓடும் ரயிலில் பயணிகளூக்கு மத்தியில் ஒரு கவிஞர் கூட்டம் கவியரங்கொன்றை நடத்தியிருக்கிறது. அதற்கு முன்னால் கோணங்கி போன்றவர்கள் இலக்கியச் சந்திப்புக்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். ஆகவே இது பெரிய அதிசயமில்லை. அங்கு நூல் வெளியீடு செய்யப்பட்ட விதம்தான் புதுமையானது-அதீதமானது. புத்தக வெளியீடு , ஓடும் ரயிலில் இருந்து வெளியிடுபவரால் வெளியே வீசி எறிவதன் மூலம் நடத்தப்பட்டிருக்கிறது. இதில் கலந்துகொண்டவர்களும் தமிழ் இலக்கியப் பரப்பில் முகம் தெரிந்த இலக்கியவாதிகளே. குறிப்பாக ‘புதுப் புனல்’ ஆசிரியர் சி.மோகன், ‘வெளி’ ரங்கராஜன் போன்றோர்.

இன்னொரு நிகழ்வு, பிரமிளின் கவிதைகள் பற்றிய கருத்தரங்கு. இது மதுக் கடை ஒன்றின் barஇல் நடந்திருக்கிறது. குடிப்பதற்கு வந்த பலரில் ஆச்சரியங்களை விளைவித்துக்கொண்டு இந்த அரங்கு நடந்து முடிந்த பின்னால் சண்டையும் நடந்திருக்கிறது. ‘பல்லோடு உதடு பறந்து சிதறுண்டு / சில்லென்று செந்நீர் தெறித்து / நிலம் சிவந்து / மல்லொன்று நேர்ந்து..’ என்று நம்மூர் மஹாகவி பாடியது அப்போது எனக்கு ஞாபகம் வந்தது. இதில் கலந்துகொண்டவர்களும் சாரு நிவேதிதா, விக்ரமாதித்யன் போன்ற இலக்கியவாதிகளே.

இவையெல்லாம் உள் கொதிது எழும் உணர்வு உச்சமடைகிற வேளைகளிலேயே நடக்கின்றன என்பதுதான் நிஜம். இவை ஒரு சமூகத்தின் கலகக் குரல்கள். இவையே நியாயமில்லைத்தான். ஆனால் இவை சமூகத்தை மாற்றும் அவசியத்தை வற்புறுத்துவன. இன்னும் இவை மாற்றவும் செய்யும். ஓரளவேனும்.

‘தலித் அழகியல் என்ற சொற்றொடரும், தலித் கலகப் பண்பாடு என்ற சொற்றொடரும் ஒரே அர்த்தம் பெறும் சொற்றொடர்கள் என்ற அதிரடிக் கருத்தும் இக் கருத்தரங்கில் தெரிவிக்கப்பட்டது’ என்று வேறு ஒரு கருத்தரங்கு பற்றி எஸ். சுவாமிநாதன் என்பவர் கணையாழியில் எழுதியிருக்கிறார்.

இது ஆரம்பம்தான். இனிவரும் காலங்கள் மிக்க கடுமையானதாக இருக்கப்போகின்றன. தலித் குரல்களோ, அமைப்பாகிவிட்ட குடும்பம், பெண்ணடிமை, மரபு போன்றவற்றுக்கு எதிரான குரல்களோ விழிக்கிறவர்களூடையதாய் இருப்பதால் மிகக் கடூரமாகத்தான் இருக்கும். சுகனும் ஷோபாசக்தியும் தொகுத்த ‘கறுப்பு’ நூல் வெளியீடு அ.மார்க்ஸ் தலைமையில் நடந்தது. தொகுப்புப்பற்றி ராஜேந்திரன் என்ற இளைஞர் சாரத்துடன் மேடை வந்து பேசினார். இந்த நண்பர் நிறப்பிரிகை நடத்திய ஷோபாசக்தியின் ‘கொரில்லா’ நாவல் விமர்சனக் கூட்டத்திலும் இம்மாதிரியே வந்து உரை நிகழ்த்தினார். செய்யட்டுமேன். எவ்வளவு காலம்தான் சொல்லிக்கொண்டே இருப்பது? இந்த அதீத நடைமுறைகளெல்லாம் உள்ளெழும் நெருப்பின் ஓசைகள்.சமூகம் மாறியாக வேண்டும். வேறுவழி இல்லை.

■ ■ ■

*தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.*

***E-mail:thaiveedu@gmail.com***
***Fax: 416-849-0594***
***Tel: 416-646-3422***

# வீடு வாங்குதல்... எப்படி ஆரம்பிப்பது?



மங்கா அருணாசலம்
- வீடு விற்பனைப் பிரதிநிதி -

## நான் வீடு வாங்குவதற்குத் தயாராக உள்ளேனா என்பது எனக்கு எப்படித் தெரியும்?

சில கேள்விகளை, உங்களை நீங்களே கேட்பதன் மூலம் அறிந்து கொள்ளலாம்.

- எனக்கு நிலையான வரும்படி (நிரந்தர மான ஒரு வேலை) உள்ளதா?
- எனது வழமையான, மாதாந்தக் கட்டணங்கள் ஒழுங்காக கட்டப் படுகின்றதா?
- என்னிடம் நீண்டகாலக் கட்டணங்கள் போன்றவை (உதாரணத்திற்கு, வாகனக் கடன்கள்) சில உள்ளனவா?
- என்னிடம் முதலீட்டுத் தொகை பற்றிய சேமிப்பு ஏதும் உண்டா?
- என்னிடம் மாதாந்தம் கட்டக்கூடிய ஈட்டுக் கடன் தொகை, மற்றும் இதர செலவு களைச் சமாளிக்கக் கூடிய பணப்புழக்கம் உண்டா?

இவற்றில் உள்ள கேள்விகளுக்குப் பெரும்பாலும், உங்கள் பதில் “ஆம்” என்று இருப்பின், நீங்கள் ஒரு வீடு வாங்கத் தயாராகி விட்டீர்கள் என்று கருத்தில் கொள்ளலாம்.

## வீடு வாங்குதல்...? எப்படி ஆரம்பிப்பது?

உங்கள் நிலையைச் சற்றுச் சிந்திப்பதன் மூலம் ஆரம்பியுங்கள். மாதாந்த ஈட்டுக் கடன் தொகையில் எவ்வளவை உங்களால் சமாளிக்க முடியும்? (உங்கள் வீட்டு முகவரால் இதற்குப் பதிலளிக்க முடியும்) எவ்வளவு இடவசதி தேவை? எந்த நகரங்களில் உங்களுக்கு வீடு வாங்க விருப்பம்?

## வாடகைவீடும் சொந்த வீடும்

இரண்டையும் ஒப்பிடுவது சமமாகாது. வாடகை கொடுப்பதன் மூலம், சில மாதாந்தக் கட்டணங்களைப் பற்றி அறவே கவலைப்படத் தேவையில்லை. ஆனால் இது உங்கள் சொந்தச் சேமிப்பாக இருக் காது. அத்துடன் வீட்டின் வாடகை ஏறுவதை உங்களால் தடுக்கவும் முடியாது. வீட்டுச் சொந்தக்காரரின் இஷ்டம் போல் மட்டுமே நீங்கள் அந்த இடத்தில் வாழலாம். விரும்பி யது போல், வீட்டை அலங்கரிக்கவும் உங்களுக்கு உரிமையில்லை.

வீட்டைச் சொந்தம் கொண்டாடுவதில் பல வித நன்மைகள் உண்டு. வீட்டின் மாதாந்த ஈட்டுக்கடன் கட்டும்போது, அது உங்களுக்குரிய சேமிப்பாக மாறி, ஒரு முதலீடாகப் பிரதி பலிக்கின்றது. பாதுகாப்பு, சுதந்திரம், நிலையான ஓரிடம் என்பதுடன் அவை ஒரு நன்மையான நகர்வும் கூட.

## ஈட்டுக் கடனின் அளவை கடன் கொடுக்கும் வங்கிகள் எப்படி தீர்மானிக்கும்?

உங்கள் GDS/TDS போன்றவற்றை வங்கி தீர்மானிக்கும். GDS என்பது, உங்கள் வருடாந்த உழைப்பும், அதனுள்ளிருந்து வீட்டுக்கும் மற்றும் இதர செலவினங்களிற்கும் செலவிடப்படும் தொகையின் கணக்கீடு. மாணவர் கல்விக் கடன்கள், வாகனக் கடன்கள், பிள்ளைக் காப்புறுதி போன்றவை நீண்ட கால மாதாந்தக் கடன்களாகக் கொள்ளப்படும். வங்கிக்கடன் கணிப்பின்படி, உங்கள் உழைப்பின் 30 சதவிகிதமானது தானும், உங்கள் ஈட்டுக்கடனைக் கட்டப் போதுமானமாக இருக்க வேண்டும். அல்லது உங்கள் TDS அளவானது, உங்கள் உழைப்பில் 40 சதவிகிதத்தைத் தாண்டக் கூடாது (இதில் வருடாந்த வீட்டுவரி, வீட்டை வெப்பமேற்றும் செலவினங்கள், 50 சதவிகித வீட்டுப் பராமரிப்புச் செலவினங் கள் போன்றவை அடங்கும்). அத்துடன், வீட்டின் அடமான முதலீட்டுத் தொகை, பத்திரமாற்றுச் செலவினங்கள், உங்கள் கடனட்டைகளின் வரலாறு போன்றவையும், உங்களுக்குரிய மேலதிக ஈட்டுக் கடன் தொகையைக் கொடுக்கும்போது, வங்கிகளால் ஆராயப்படும்.

## தேடலைத் தொடங்கும் முன், வீட்டின் தேவையின் அளவைத் தீர்மானிப்பது?

உங்கள் முழுக் குடும்பத்திற்கும் தேவை யான அளவிலும், பரிமாணத்திலும் ஒரு வீடு இருக்க வேண்டும். ஒரு வீட்டைத் தேடும்முன், இடம், வீட்டின் பரிமாணம், இவற்றை நிரையிடுங்கள். பள்ளிக்கூடத்திற் கருகில் வீடு அமைய வேண்டுமா? வேலைக்கருகில்? பஸ் தரிப்பிடத்திற்கு வசதியாக? இவ்வாறு தேவைகளைப் பட்டிய லிடுங்கள். ஒரு பட்டியலானது, தேவையின் கட்டாயத்தைப் பொறுத்தது, ஆனால், மற்ற எண்ணமானது தேவை தான், ஆனால் கட்டாயத் தேவையாகாது.

## வீட்டைக் கண்டு பிடித்தலும் கருத்தில் கொள்ள வேண்டிய மற்றைய விடயங்களும்

உங்கள் நாளாந்த வாழ்க்கையை வசதி யாகக் கொண்டுபோகக் கூடிய இடமாகத் தேர்ந்தெடுங்கள். பள்ளிக்கூடங்களைக் கருத்தில் கொண்டு பலர், தங்கள் வீடு களைத் தேர்ந்தெடுப்பது வழக்கம். கடைகள் மற்றும் பொதுப்போக்குவரத்து வசதிகள் அருகிலிருக்க வேண்டுமா? சமூகக் கழகங்கள், நூல் நிலையங்களுக்கருகில் வீடு அமைதல் உங்களுக்கு முக்கியமா? அல்லது நிம்மதியும், தனிமையும் நிறைந்த ஒரு இடம் உங்களுக்கு வேண்டுமா? இவ்வாறு இடங்கள் கண்களில் தென்படும்போது, உங்கள் வீட்டு முகவரிடம் பேசுங்கள். அவர்களுக்கு இதைப்பற்றி ஒரு நல்ல தெளிவான படம் மனதில் இருக்கும். நீங்கள் வாழப்போகும் இடம் சௌகரியமாக இருக்கும் படியான எண்ணம் உங்கள் மனதில் இருக்க வேண்டும்.

## பள்ளிக்கூட அமைப்புக்களை கண்டறிதல்

நகரசபை, பள்ளிக்கூட நிர்வாகசபை அல்லது சாதாரண பாடசாலைகளைத் தொடர்பு கொள்வதன் மூலம் அந்தத் தகவல்களை நீங்கள் பெறலாம். உங்கள் முகவருக்கு நிச்சயம் இதைப்பற்றிய விளக்கங்கள் கூடுதலாக இருக்கலாம்.

## சமூகப்பணி நிலையங்களைக் கண்டறிதல்

Chamber of Commerceஐத் தொடர்பு கொண்டு, எளிய நகர வரைபடம், அதற் குரிய தகவல் சாதனங்கள், மற்றும் இதர உபதகவல்களைப் பெற்றிடுங்கள் அல்லது உங்கள் வீட்டு முகவரிடம் பேசுங்கள். உள்ளூர் புத்தகசாலைக்கும் ஒருமுறை போய் வாருங்கள். அவர்களால் இயன்ற வரை உங்கள் கேள்விகளுக்குப் பதிலளிக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் மிகவும் அதிகமாக இருக்கும்.

40ம் பக்கம் பார்க்க...


Buying or Refinancing Your Home?
With access to more than 50 Lenders,
I will find you the RIGHTMORTGAGE®
Some of our lenders...
TD Canada Trust
Scotia Express Service
NATIONAL BANK OF CANADA
HSBC
ING DIRECT
...and many more!
There are definite opportunities to SAVE Money with your upcoming Mortgage renewal. Don't Procrastinate!
Check out our rates and you will find the lowest discounted rates anywhere in Canada
Our Free services:
Pre - Approvals with in 24 hours....
• 1st 2nd 3rd Mortgages
• Home Refinancing
• Down payment programs
• Renewals & Switches
• Debt Consolidations
• Home Equity Loans
• Construction Mortgages
Contact the RIGHTBROKER™ today and find out how to win up to
$100,000.00
I am available online, by phone, even in your own home or in the office making the approval process hassle free for you.
Vathany Vaseekaran
Mortgage Specialist
(with 13 yrs Lending Experience)
Direct: (416) 931-3133
Fax: (416) 293-7686,
Toll Free: 1-866-764-7297
MORTGAGE ALLIANCE
RIGHTBROKER=RIGHTMORTGAGE
Corporate office: 200, 2005 Sheppard Ave. E.
Toronto ON M2J 5B4 Toll Free: 1-877-366-3487
Email@vvaseekaran@mortgagealliance.com • website: www.mortgagealliance.ca/vathanyvaseekaran


தென்னகத்து புல்வாங்குழலில்
எங்கள் ஊர் காற்று
இசையரங்கம் மேடையில்
இசைப்பேரொளி
உன்னிகிருஷ்ணன்
20 ஆவது
இசைக்கு
ஏது எல்லை
இசைப்பிரவாகத்தில் ஓர் புதிய பரிமாணம்
AUGUST 10 2008
மாலை 6.30
SIR JOHN MCDONALD AUDITORIUM
2300 Pharmacy Avenue
(Pharmacy & Finch)
www.isaiyarangam.com
நுழைவுச் சீட்டுக்களுக்கு:
மாக்கம் வீடியோ, டெயிலிறீடஸ்,
பிரியாஸ், ஞானம்ஸ் ஸ்ருடியோ
தொடர்புகட்கு: 647-999-3353
905-201-2209 / 647-296-4760

# வீடு வாங்குதல்...

38ம் பக்கத் தொடர்ச்சி...

### எந்தப் பகுதியில், என்ன விலையில் எனற தகவலைச் சேகரித்தல்

உங்கள் முகவரால் இதற்குப் பதில் சொல்ல முடியும். அவரால், வீடுகள் விற்கப்படும் சராசரி விலையை, ஒரு பகுதியைப் பொறுத்துச் சொல்ல முடியும். அத்துடன் கணணியில் இதற்கான தகவலைப் பெற உங்கள் முகவருக்குப் பலவித வழிகள் உண்டு.

### வீட்டு வரியைப் பற்றிய தகவலைப் பெறுதல்

விற்கப்படும் வீட்டுப் பட்டியல் தகவலில், கடந்த வருடத்திற்கான வீட்டுவரித் தொகை குறிப்பிடப்பட்டிருக்கும். வரியின் தொகை வருடாவருடம் மாறலாம் எனினும், இது ஒரு மத்திமத் தொகையென ஓரளவு கணித்துக் கொள்ளலாம்.

### ஒரு பழைய வீட்டின் பெறுமதி புது வீட்டின் விலையை விட அதிகமா

இதற்கு ஒரு தீர்மானமான பதில் கிடையாது. ஒவ்வொரு வீடும் ஒரு தனித்தன்மையைக் கொண்டிருக்கும். மிகவும் பரந்த மக்கள்வாழ் பகுதிகளில் இம்மாதிரி வீடுகள் பல காலம் முன்பிருந்தே ஒரு நிலையான தடத்தைக் கொண்டிருக்கும். ஆனாலும், பழைய வீடுகளை வாங்க நினைப்பவர்கள், அதில் திருத்த வேலைகளைச் செய்வதற்குத் தயாராக இருக்க வேண்டும். தற்போதைய வீடுகள் புதிய பரிணாமத்தில், பல புதிய யுக்திகளைக் கொண்டு கட்டப் படுவதால், அவற்றைப் பராமரிப்பது சற்று இலகுவாக இருக்கும். சற்று சக்தியைச் சேமிக்கக் கூடியதாக இருக்கும். புதிய வீடுகளை வாங்குபவர்கள், சில காலத்திற்கு இம்மாதிரி திருத்த வேலைகள் செய்வதைப் பற்றிக் கவலைப் படாமல் இருக்க முடியும். அவ்வளவே.

### வீட்டைப் பார்வையிடும்போது, கருத்தில் கொள்ள வேண்டிய, கவனம் செலுத்த வேண்டியவை

உங்கள் குறைந்தளவு முக்கியத்துவத்தைக் கருத்தில் கொள்ளும்போது, இவற்றையும் மனதில் பதிய வையுங்கள்.

- இப்போது நான் வாங்கப்போகும் வீடு, இப்போது வாழும் நிலை, பின்னாளில் வாழப்போகும் நிலைமைக்கு, இங்குள்ள அறைகள் போதுமானதாக இருக்குமா?
- தேவையான அளவில் படுக்கையறைகள், குளியலறைகள் இருக்கின்றனவா?
- வீட்டு அமைப்பு திருப்தியாய் உள்ளதா?
- வீட்டு அத்தியாவசிய உபகரணங்கள் ஒழுங்காக வேலை செய்கின்றனவா?
- முன், பின் வளவுகளின் அளவுகள் போதுமானதாய் உள்ளதா?
- வீட்டின் தரையமைப்பு பிடித்திருக்கின்றதா?
- எனது தளபாடங்களை வைக்கப் போதுமான இடவசதி உள்ளதா?
- சேமிப்பு அறைகள் அல்லது இடங்கள் போதுமானதாய் உள்ளதா?
- எதையாவது மாற்ற அல்லது திருத்த வேண்டிய அவசியம் இப்பொழுது உள்ளதா?

இவ்வளவு கேள்விகளையும், ஒவ்வொரு வீட்டையும் பார்க்கும்போது, மனதில் நிறைய நேரம் எடுத்து, கேட்டுக் கொள்ளுங்கள். உங்கள் முகவரிடம் இவற்றைப் பற்றிப் பிரஸ்தாபித்து அவரின் எண்ணத்தையும், அறிவுரையையும் கூட கேட்டுக் கொள்ளுங்கள்.

# விரைவில் முழுமையான ஒலிபரப்பு ஆரம்பமாகும்

**NewMarket** முதல் **Buffalo** வரையும்

**Kitchener** முதல் **Cobourg** வரையும்

துல்லியமாக வானலையிலும் இணையம் மூலம் உலகெங்கிலும்

# உதயமாகிறது

TAMILSTAR

No Limits

## 168 மணி நேர தமிழ் வானொலி

வாரம் 168 மணி நேரமும் தமிழ் ஒலிக்கிறது

**சிரிக்க, சிந்திக்க, சினக்க....**



885 Progress ave., Suite 316,
Scarborough, ON M1H 3G3

**Tel: 416.438.STAR (7827)**

Fax: 416.438.7855
www.tamilstar.fm
info@tamilstar.fm

# முகவரி காட்டும் முகவர்களாய் நாங்கள், வீடு வாங்க விற்க அழையுங்கள்



HOMELIFE
HIGHER STANDARDS



**HomeLife/Future Realty Inc., Brokerage***
262 Markham Road, Scarborough, Ontario M1J 3C5
**Bus.: 416.264.0101  Fax : 416.261.1519**
*Independently Owned and Operated, REALTOR
Not Intended to Solicit Currently Listed Properties or Buyers Under Contract.

**www.realhouse.ca**

## Thamil Suberamaniam (Selvan)
Sales Representative
**Direct : 416.358.6200**
Email : thamilrealtor@gmail.com

## Mugunthan Nadarajah
Sales Representative
**Direct : 416.276.8025**
Email : homelifemugunthan@gmail.com

### McCowan & Finch


**$429,900**
**4+2 Bedrooms, 4 Washroom**
Very Demand Location!!...
New Roof, Basement
Finished With 2 Bedrooms,
Kitchen, Living & Washroom..
Close To School, Shopping,
5 Mint. Walk To Ttc.

### Kennedy & Finch


**$264,900**
**3+1 Bedrooms, 3 Washroom**
Totally Renovated Condo Town House
** Close To Finch And Kennedy **
Over 60K Spent On All Hardwood Flooring*
Brand New Furnace**Pot Lights,
Finished Basement, Excellent Corner Unit
* New Garage Door*
*Close To School, Park, Shopping & Ttc.

### 14th & 9th Line


**$498,900**
**4 Bedrooms, 3 Washroom**
Brand New Oxward Build
Home In Very Demand Area. .
Hardwood Throughout Main Flr.
9' Ceiling, Circular Oak Staircase,
Close To School,
Hospital & Highway 407.

### Hwy 7 & 9th Line



**$499,900**
**4 Bedrooms, 3 Washroom**
Corner Detached Home In
Demand Location!!...
Tastefully Painted, Front Exterior With Stone,
Upgraded Light Fixtures,
Upgraded Kitchen Cabinets,
Well Kept Home...***

### Sandalwood & Dixie


**$379,900**
**3 Bedrooms, 3 Washroom**
Childsafe Cresent,
Great Neighbourhood,
Very Clean & Bright,Big Deck,
Cold Room,
Front House Exterior With Stone..
Close To Brampton, New Hospital,
Schools, Park & Hwy 410.

### Brisdale & Sandalwood


**$381,900**
**4 Bedroom, 3 Washroom**
Hardwood Floors. Tastefully
Decorated Thru-Out,
Many Upgrades, Very Nice Light Fixtures.
You Must See This Beauty. Fenced Backyard.
Lots Of Pot Lights.
Upgraded Kitchen Cabinet.

### Chinguacousy N Of Sandalwood



**$389,900**
**4 Bedrooms, 3 Washroom**
Gorgeous 2 Yrs New Detached Home
On Premium Corner Lot In Very Demand Area.
Main Floor With Stunning
Hardwood Floor & Oak Staircase.
Absolutely Beautiful Kitchen
With One Of The Best Layouts.

### Conlins & Ellesmere


**$432,000**
**4+1 Bedrooms, 4 Washroom**
Fully Renovated With New Carpet,
Paint, Granite Counter Top,
Jacuzzi And Much More.
Huge Deck At The Back.
Close To TTC, Schools
And University Very Good Opportunity.

### McCowan & Steeles


**$339,900**
**3 Bedrooms, 2 Washroom**
Very Good Location
This 2-Story Detached House
With New Windows, New Roof,
Finished Bsmt With Rec.Room
And Laminated Floor,
Totally A Nice Family Home

### உங்களுடையது
**அழையுங்கள்**

Apex Creations - 416-297-0707

**Make the Right Move, at the Right Time, with the Right Professional**

# எண்ணைவிலை: யாருக்கு இலாபம்?

ஏ.கே.கான் என்பவர் (அதன் ஆசிரியர்) www.thatstamil.com எழுதிய இரண்டு கட்டுரைகளையும் பிற செய்திகளையும் தொகுத்துத் தரப்படுகிறது.

இன்றைய திகதியில் ‘ஐதரோகாபன்” தான் உலகத்தின் உயிர்நாடி. அதாவது எரிபொருள். அதனால் அரசியல் போன்ற பிறவற்றை விட்டுவிட்டு கதைக்கு வருவோம்.

ஊக வர்த்தகத்தால் பெட்ரோலிய விலை உயர்ந்தாலும் இதற்கு உடனடித் தீர்வு கச்சா எண்ணெய் உற்பத்தியை அதிகரிப்பதுதான் என OPEC நாடுகளிடம் உலக நாடுகள் வைத்த கோரிக்கையை சௌதி அரேபியா ஏற்றுக் கொண்டுவிட்டது.

உறுதியளித்தபடி சௌதி அரேபிய எண்ணெய் துறை அமைச்சர் அலி நைமி நடந்து கொண்டால், ஜூலையிலிருந்து ஒரு நாளைக்கு 2,55,000 பீப்பாய்கள் அளவுக்கு கூடுதலாக எண்ணெய் அகழ்வு செய்யப்படவுள்ளது.

ஆனால், சௌதி அரேபியா உற்பத்தி செய்யப் போகும் இந்தக் கூடுதல் எண்ணெய் சந்தைக்கு வரப் போகும் அதே நேரத்தில் இன்னொரு இடத்திலிருந்து வந்து கொண்டிருக்கும் எண்ணெய் நிற்கப் போகிறது. அது நைஜீரிய எண்ணெய்.

ஆப்பிரிக்க நாடான நைஜீரியாவிலும் கச்சா எண்ணெய் கிடைக்கிறது. இங்கு அதிக அளவில் எண்ணெய்யை உற்பத்தி செய்து வருவது டச்சு நிறுவனமான ஷெல் (Shell). ஆனால், நைஜீரியாவின் சொத்தை ஷெல் உள்ளிட்ட சர்வதேச நிறுவனங்கள் கொள்ளையடித்து வருவதாகக் கூறி அந்த நிறுவனங்களையும் அவற்றின் கட்டமைப்புகளையும் தாக்க ஆரம்பித்துள்ளன நைஜீரிய நாட்டு அதிருப்தி அமைப்புகள். குறிப்பாக ‘மென்ட்’ (Mend) என்ற அமைப்பு.

‘Movement for the Emancipation of the Niger Delta’ என்பது தான் இந்த ‘மென்ட்’ அமைப்புக்கு விரிவாக்கம். சரியாகச் சொன்னால் இதுவும் ஒரு தீவிரவாத அமைப்பு தான்.

இந்த அமைப்பின் தொல்லை தாங்க முடியாமல் நிலப் பகுதியில் எண்ணெய் எடுப்பதை கைவிட்டுவிட்டு நடுக் கடலில் போய் எண்ணெய் உற்பத்தி செய்ய (offshore) ஆரம்பித்துள்ளன எண்ணெய் நிறுவனங்கள். இதற்காக ஷெல் நிறுவனம் போங்கா (Bonga) என்ற மாபெரும் எண்ணெய் உற்பத்தி மற்றும் சேமிப்பு கிடங்கை (floating oil production and storage facility) பயன்படுத்தி வருகிறது. 3.6 பில்லியன் டொலர் மதிப்பிலான இந்த எண்ணெய் உற்பத்திக் கப்பல் இதுவரை மென்ட் அமைப்பிடம் இருந்து தப்பிவந்தது. காரணம், இந்தக் கப்பல் நைஜீரிய கடலோரத்தில் இருந்து 120 கி.மீ தூரத்தித்தில் இருந்தது தான்.

ஆனால், சில நாட்களுக்கு முன் 3 அதிவேக படகுகளில் வந்த மென்ட் தீவிரவாதிகள் போங்காவை ‘பதம்’ பார்த்துவிட்டுப் போய்விட்டனர். இதனால் எண்ணெய் உற்பத்தி தடைசெய்யப்பட்டுவிட்டது. போகும் வழியில் ஒரு அமெரிக்கக் கப்பலையும் தாக்கி அதிலிருந்த மாலுமியையும் கடத்திச் சென்றுவிட்டனர்.

அப்படி என்ன பெரிய அளவில் எண்ணெய் உற்பத்தி குறைந்துவிடப் போகிறது என்கிறீர்களா?. OPEC-ன் அதாவது உலகின் மொத்த உற்பத்தியில் 10சதவீதம் நைஜீரியாவில் தான் உற்பத்தியாகிறது, குறிப்பாக அதை போங்கா தான் தோண்டி எடுத்து வருகிறது.

சௌதியின் கூடுதல் எண்ணெய் சந்தைக்குள் நுழையும் அதே நேரத்தில் நைஜீரியாவிலிருந்து வந்து கொண்டிருந்த எண்ணெய் நிற்கப் போகிறது.


மாமூலன்
maamulan@thaiveedu.com

அதாவது அதிகரிக்கும் உற்பத்திக்கு பதில் வேறு இடத்தில் உற்பத்தி நிறுத்தப்பட்டிருக்கிறது. மொத்தத்தில் பாரத்தால் பின்னால் இருந்து எண்ணைவிலையை யாரோ இயக்குவதுமாதிரி தோன்றவில்லையா? கட்டுரையின் இரண்டாம் பகுதி அதற்குப் பதில் சொல்லும்.

### எண்ணணை விலை அமெரிக்காவின் மற்றொரு ஆயுதம்

அமெரிக்காவின் பல வங்கிகள் திரும்பி வராத கடன்களால் நடுத் தெருவுக்கு வந்து விட்டன. அத்தோடு சேர்ந்து கொண்டது அமெரிக்க பொருளாதார தேக்கம். அதன் அடுத்த விளைவு டொலர் மதிப்பின் வீழ்ச்சி. உலக அளவில் பல நாட்டு நாணயங்களுக்கு எதிரான டொலரின் விலை 20 முதல் 30 சதவீதம் வரை வீழ்ச்சி கண்டு விட்டது. இதனால் அமெரிக்க பொருளாதாரத்தில் மேலும் சரிவு.

இப்படியாக அடிமேல் அடி வாங்கி வரும் தங்கள் சந்தையை நிலை நிறுத்த அமெரிக்கர்களுக்கு கிடைத்த கடைசி ஆயுதம் தான் கச்சா எண்ணெய்.

உலகின் தேவையில் கிட்டத்தட்ட 80 சதவீதத்துக்கும் மேல், கச்சா எண்ணெய்யை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்வது என்னவோ சௌதி அரேபியா, வெனிசுவேலா, ஈரான், அல்ஜீரியா, யுஏஇ, குவைத், நைஜீரியா உள்ளிட்ட ஒபெக் (Organization of Petroleum Exporting Countries - OPEC) நாடுகளாக இருக்கலாம்.

ஆனால், இந்த கச்சா எண்ணெயின் வணிகம் நடப்பது அமெரிக்காவிலும் லண்டனிலும் தான். குறிப்பாக அமெரிக்காவின் பங்குச் சந்தையில்தான். எண்ணை விலை நிர்ணயிக்கப்படுவது டொலரில்தான். இந்த பங்குச் சந்தைத் தரகர்கள்தான் நாம் தின்னும் உப்பில் ஆரம்பித்து நாம் அணியும் உடைகள் வரை விலையை நிர்ணயம் செய்கின்றனர்.

(இத்தனைக்கும் உலகில் பெரிய அளவில் அமெரிக்காவிலும் எண்ணை வளம் உண்டு. அதை அவர்கள் வெளியே விற்பதில்லை. தற்போது தோண்டி எடுப்பதில்லை. சௌதி-

53ம் பக்கம் பார்க்க...

# நன்றி ஜோர்ஜ்



P. விக்னேஸ்வரன்
Wikneswaran@thaiveedu.com

உலக மக்களுக்குப் பொதுவாகவும் குறிப்பாகத் தமிழ் மக்களுக்கும் மரணம் இப்போதெல்லாம் சர்வ சாதாரணமாகி விட்டது, மரணங்கள் இடம்பெறும் எண்ணிக்கையிலும் சரி, அதை ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவத்திலும் சரி. இந்த மனப்பக்குவம் அறிவுபூர்வமான மன முதிர்ச்சியின் விளைவா அல்லது இயலாமையின் வெளிப்பாடா என்பது கேள்விக்குறி. தமிழ் சமூகத்தைப் பொறுத்தவரை முன்பெல்லாம் மரணம் என்பது தாங்கமுடியாத பெரும் சோக நிகழ்ச்சி.

நினைத்துப் பார்க்கிறேன். எனக்குப் பத்துப்பதினைந்து வயதாக இருக்கும்போது கூட எனது பேரனாரின் (அம்மாவின் தந்தை) மறைவு குறித்து ஊர் மக்கள் மிகுந்த சோகத்துடன் பேசிக்கொள்வார்கள். எனது அம்மம்மா மாலை மங்கி, இருளும் வேளைகளில் தனது கணவரின் மரணம் ஏற்படுத்திய சோகம்தாழாது புலம்பி அழுவதைக் கேட்டிருக்கிறேன். இவ்வளவற்றிற்கும் எனது பேரனார் இறந்தது தனது முப்பத்தாறாவது வயதில், எனது அம்மா சிறுமியாக இருந்தபொழுது. ஆக, இருபது இருபத்தைந்து வருடங்கள் கழித்தே ஒருவரின் இறப்பு சம்மந்தப்பட்டவர்களின் மனங்களில் ஏற்படுத்திய சோகத்தைக் கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். இன்று அது முடிகிறதா? எண்ணிலடங்காத மரணங்கள் நாளுக்குநாள் நிகழ்ந்தவண்ணம் இருக்கின்றன. சொந்த நாட்டிலேயே மக்கள் அகதிகளாக இடம்பெயர்ந்துகொண்டிருக்கிறார்கள். ஆண்டாண்டுகாலம் வேருன்றிய தம் மண்ணைவிட்டு வாழ்வுதேடிப் புலம்பெயர்ந்த மக்கள் தம்மை நிலைநிறுத்திக்கொள்ள காலநேரம்பாராது ஓடியோடி உழைக்கவேண்டியிருக்கிறது. மரணங்கள் அவர்களின் மனங்களில் பாரிய வலியைத் தோற்றுவிப்பதில்லை. தோற்றுவித்தாலும் நிலைப்பதில்லை. மரணங்கள் மலிந்துவிட்டன. நின்று நிதானித்து நினைவுகளைக் கொண்டாட முடிவதில்லை.

மரணம் பற்றிய இந்த நினைவுகள் என் மனதில் அண்மையில் அடுக்கடுக்காக வந்து போய்கொண்டிருந்தன. காரணம், ஜோர்ஜ் சந்திரசேகரனின் மறைவு. ஒரு சனிக்கிழமை காலை. வழமைபோல் எமது வானொலியின் செய்தி ஆசிரியர் ராஜி தான் தொகுத்த செய்திகளைத் தொலைபேசியின்மூலம் வாசித்துக் காட்டினார். அதில் மூத்த ஒலிபரப்பாளர் ஜோர்ஜ் சந்திரசேகரன் ஜுன் மாதம் ஆறாம் திகதி வெள்ளிக்கிழமை கொழும்பில் காலமானார் என்ற செய்தியும் இடம்பெற்றிருந்தது. அப்போது அதை ஒரு செய்தியாக மட்டுமே பார்த்தேன். நண்பர் மதியழகன் என்னைப் போல் ஜோர்ஜுடன் ஒன்றாகப் பணிபுரிந்தவர். அவரைத் தொலைபேசியில் அழைத்து செய்தியைப் பரிமாறிக்கொண்டோம். ஜோர்ஜ் நீண்டகாலம் நோய்வாய்ப்பட்டு சுயநினைவின்றி இருந்தவர், மரணமடைந்துவிட்டார். முடிந்தால் எமது அனுதாபத்தைக் கட்டுரை மூலம் வெளிப்படுத்தவேண்டும்.

எமது பரபரப்பான வாழ்க்கையில் ஜோர்ஜ் பற்றிய பேச்சு அந்த மட்டிலேயே இருந்தது.

மாலை ஒரு கல்யாண வரவேற்பு நிகழ்ச்சி.

அடுத்து வந்த நாட்களில் ஜோர்ஜ் என் நினைவுகளை ஆக்கிரமித்துக்கொண்டார். நாம் ஓய்வாகச் சிந்திக்கின்ற நேரம் கார் ஓட்டுகின்ற நேரம். அந்த நேரத்தில் எனது பழைய ஒலிபரப்பு வாழ்க்கையின் ஒவ்வொரு சிறுசிறு சம்பவங்களும் அலையலையாக வந்து போயின.

மனம் பாரமாக இருந்தது. யாருடனாவது பகிர்ந்துகொள்ள வேண்டும்.

ஒலிபரப்பு நாட்களில் என்னுடன் மிக நெருங்கிப் பழகியவரும் பல கலை முயற்சிகளில் என்னுடனும் ஜோர்ஜுடனும் கூட்டாக உழைத்தவரும் ஜோர்ஜுடன் ஒலிபரப்பு வாழ்க்கைக்கு முன்னரே நெருங்கிப் பழகிய வருமான கொழும்பில் வசிக்கும் நடராஜ சிவத்துடன் தொடர்புகொள்வதற்காகத் தொலைபேசியில் அழைத்தேன். மரணச்சடங்கிற்குச் சென்றுவந்த நாள்முதல் நடராஜசிவம் ஜோர்ஜ் பற்றியே பேசிக் கொண்டிருப்பதாக அவரது துணைவியாரும் மூத்த ஒலிபரப்பாளருமாகிய புவனலோஜனி கூறினார். நடராஜசிவத்துடன் பேசினேன். நீண்டநேரம் பழைய நினைவுகளை மீட்டுக் கொண்டோம்.

> “ கடவுள் நம்பிக்கை
> மற்றும் மூட நம்பிக்கைகள் அற்றவராக
> ஒரு இடதுசாரி மனப்பான்மை கொண்டிருந்த
> ஜோர்ஜ்
> ஒருபோதுமே தன்னை ஒரு இடதுசாரியாக
> இனம்காட்டிய தில்லை.. ”

1970ஆம் ஆண்டின் முற்பகுதி. நான் தயாரிப்பு உதவியாளனாக இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தில் இணைந்த நேரம். ஒருநாள் ஒலிபரப்புக் கூட்டுத்தாபனக் கன்ரீனில் நடராஜசிவம், ஜோர்ஜை எனக்கு அறிமுகம் செய்துவைத்தார். மெலிந்த உருவம், முழுக் கைச் சட்டை, கண்ணாடி, கையில் தடித்த ஆங்கிலப் புத்தகம், தாழ்ந்த தொனியில் பேச்சு. என்னைவிட வயதில் மூத்தவராக இருந்தார். இவைகள்தான் ஜோர்ஜ் சந்திரசேகரனின் வெளித்தோற்றம்.

அவர் தேசியசேவையில் பகுதிநேர அறிவிப்பாளராக இருந்தார். ஒருசில நாட்கள்தான் அவருக்கு வேலை இருக்கும். சனியோ அல்லது ஞாயிறோ சரியாக நினைவில்லை, அன்று அவரது நிகழ்ச்சியின் ஒலிப்பதிவு நாள். அந்த நிகழ்ச்சியைத் தயாரித்து அவரே தொகுத்து வழங்கினார். அன்று அவரை ஒரு பெரும் இளைஞர் படையோடு காணலாம். இந்த இளைஞர்மன்ற நிகழ்ச்சி அறுபதுகளின் தொடக்கப் பகுதிகளில் கலாநிதி சிவத்தம்பி அவர்களால் தயாரித்து வழங்கப்பட்டது. அப்போது கொழும்பு சென்ற்.பெனடிக்ற் கல்லூரியில் இளைஞனாக கல்விகற்றுக்கொண்டிருந்த ஜோர்ஜ் அந்த நிகழ்ச்சியில் பங்குபற்றுவது வழக்கம். ஜோர்ஜின் பல்துறைத் திறமைகளையும் பல விடயங்களில் அவருக்கிருந்த ஆழ்ந்த அறிவையும் இனங்கண்ட சிவத்தம்பி அவர்கள் மேற்படிப்பிற்காக வெளிநாடு சென்ற போது, ஜோர்ஜ் அந்த நிகழ்ச்சியை நடத்த ஏற்றவர் என்று சிபார்சு செய்து சென்றார். ஜோர்ஜுக்கு அந்த நிகழ்ச்சியைத் தயாரிக்கும் பொறுப்பு வழங்கப்பட்டது. இந்த நிகழ்ச்சியில்தான் முதல்முதலிலே வானொலியில் என் குரல் ஒலிப்பதற்கு ஜோர்ஜ் எனக்குச் சந்தர்ப்பம் வழங்கினார். ஜோர்ஜ் கேட்டுக்கொண்டதன்படி, சினிமா பற்றிய ஒரு சிறிய கட்டுரையை எழுதி அந்த நிகழ்ச்சியல் வாசித்தேன். ஜோர்ஜிடம் மற்றவர்களின் சிந்தனைகளை அறிவார்ந்த மார்க்கத்தில் நெறிப்படுத்தக்கூடிய அறிவும் ஆற்றலும் நிறைய இருந்தன.

ஒரு புத்திஜீவி எப்படி இருப்பார் என்பதற்கு ஜோர்ஜ் ஒரு நிதர்சனம். மெலிந்த உருவம். எப்போதும் கையில் ஏதோ ஒரு புத்தகம். அந்தப் புத்தகத்தில் அடிக்கோடிடப்பட்ட வரிகள். செஸ் விளையாட்டில் பிரியம். மூத்த ஒலிபரப்பாளர் விவியன் நமசிவாயத்துடன் மிகப் பிரியமாக செஸ் விளையாடுவார். தானுண்டு தன் புத்தகங்கள் உண்டு என்று இருப்பார். தான் விரும்பி உரையாடக்கூடிய இளைஞர்களுக்கு தான் அறிந்தவற்றைச் சொல்வதில் அவருக்கு மிகுந்த ஈடுபாடிருந்தது. எதிலுமே ஒரு பற்றற்ற தன்மை. கோபத்தை வெளியே காட்டமாட்டார். வலிந்து முன்னுக்கு நிற்கமாட்டார். கூச்ச சுபாவம் மிக்கவர். மனதுக்குப் பிடித்தவர்களோடு மிகவும் சுலபமாகத் திறந்த மனதுடன் நகைச்சுவையோடு உரையாடுவார். கிட்டப்பா, பி.யூ.சின்னப்பா, தியாகராஜ பாகவதர் போன்ற கலைஞர்களின் பாடல்களை சிலாகித்துப் பாடுவார். இனிமையாகப் பாடமாட்டார் என்றாலும் விருப்பத்துடன் அந்தப் பாடல்களைப் பாடுவார்.

“மறைவாய்ப் புதைத்த ஓடு மறைந்த மாயம் என்ன” என்ற பாடலை அவர் வேடிக்கையாக அடிக்கடி பாடுவது என் காதுகளில் இப்போதும் கேட்டுக்கொண்டிருக்கிறது. அதேபோல் ஜித்துக கிருஸ்ணமூர்த்தி, ஜீன் போல் சாத்ரே, அல்பே கமு, கா..ப்கா, புதுமைப்பித்தன், மௌனி, லாஸரா, பாரதியார். சார்ள்ஸ் டார்வின், சிவாஜி, எம்.ஜி.ஆர்., ஜெமினி, வான்கோ, பிறன்ட், பிக்காசோ, ரவிவர்மா, லியானாடோ டாவின்ஸி, கோவுலு, சத்திய ஜித்ரே, குமுதம், கல்கி, ஆனந்தவிகடன் என்று சகலவற்றையுமே மிக ஆழமாக அலசும் ஜோர்ஜின் ஆற்றல் இப்போது நினைத்துப் பார்க்கப் பிரமிப்பாக இருக்கிறது.

நான் அறிவதற்கு முந்தைய ஜோர்ஜ் பற்றி நடராஜசிவம் சொல்லுவார். ஜோர்ஜ் மிக இளைஞனாக இருந்தபோதே மிகநீண்ட, அடர்ந்த தாடியுடன் காணப்படுவாராம். கடவுள் நம்பிக்கை மற்றும் மூட நம்பிக்கைகள் அற்றவராக ஒரு இடதுசாரி மனப்பான்மை கொண்டிருந்த ஜோர்ஜ் ஒருபோதுமே தன்னை ஒரு இடதுசாரியாக இனம்காட்டிய தில்லை. பெரி சுந்தரம் என்பரால் நடத்தப்பட்ட “செய்தி” என்ற பத்திரிகையில் பணியாற்றியபோது ஜோர்ஜும் நடராஜசிவமும் ஒரே அறையில் தங்கியிருந்தார்கள். அப்போது நடராஜசிவத்தைப் பிரதான பாத்திரமாகக்கொண்டு “துப்பறியும் சிவம்” என்ற சித்திரத் தொடர்கதையை வீரகேசரிப் பத்திரிகைக்கு வரைந்து கொடுத்து, அதன் மூலம் கிடைக்கும் சிறிய வருமானத்தில் தங்கள் காலத்தைக் கடத்தியதை நடராஜ சிவம், ஜோர்ஜ் ஆகியோர் சொல்லி அறிந்திருக்கிறேன். அந்த நாட்களில் தான் வாழைப்பழம், வேர்க் கடலை, தண்ணீர் முதலியவற்றைக்கொண்டு பசியாறியதை ஜோர்ஜ் சொல்வார். இவ்வளவற்றிற்கும் வீடு. உறவுகள் என்று இருந்தன என்றாலும் சுதந்திரமாக வாழவேண்டும் என்ற உணர்வு அந்த நாட்களிலேயே அவர்களுக்கு இருந்தது.

ஜோர்ஜுக்கு புத்திஜீவிகளிடம் பெரும்பாலும் காணப்படும் “எக்ஸென்திரிசிற்றி” என்று சொல்லப்படுகின்ற கிறுக்குத்தனத்தை இரசிக்கும் மனோபாவம் மிகுந்து காணப்பட்டது. அவர் பாரதியாரை அதிகம் விரும்பியதற்கு அதுவும் ஒரு பிரதான காரணம் எனலாம். வீட்டிலே உணவுக்குக் கஸ்டப்படும்பொழுது செல்லம்மா கஞ்சிக்கு வைத்திருந்த அரிசியைக் குருவிகளுக்கு அள்ளிப் போட்டு மகிழ்ந்த பாரதியாரையும் அந்தக் காலத்திலேயே மனைவி செல்லம்மாளின் தோள்மேல் கைபோட்டு பாரதியார் அக்ரஹாரத்தில் கம்பீரமாக நடந்து சென்றதையும் ஒரு குழந்தையின் குறும்பை இரசிப்பதுபோல் இரசித்துச் சொல்வார். ஓவியர் வான்கோ காதலிக்காகத் தன் காதை அறுத்தகதை என்று ஜோர்ஜ் சொன்ன சுவாஸ்யமான கதைகள் பல.

எம்மவர்களில் சிலரைப்பற்றி ஜோர்ஜ் அடிக்கடி சொல்லுவார். அவர்களைப்பற்றி உயர்ந்த அபிப்பிராயத்தைக் கொண்டிருந்தார். ஒருவர் மறைந்த கலாநிதி அன்ரன் பாலசிங்கம். அவரை ஸ்ரனி என்றுதான் ஜோர்ஜ் அழைப்பார். அப்போது அவரை அன்ரன் பாலசிங்கமாக உலகம் அறிந்திராத வேளை. அவர் இலண்டன் சென்றபின் ஜோர்ஜுக்கு எழுதிய கடிதங்களை நான் பார்த்திருக்கிறேன். ஸ்ரனி ஒரு மிகுந்த புத்திக்கூர்மையுள்ள மனிதன் என்று ஜோர்ஜ் அடிக்கடி சொல்வார். அதேபோல் அவர் மிகுந்த மதிப்பு வைத்திருந்த மற்றும் இரண்டு நண்பர்களில் ஒருவர் கவிஞர் பிரமிள் என்ற தருமு சிவராம், மற்றவர் சிரித்திரன் ஆசிரியர் சிவஞானம் அவர்கள்.

ஜோர்ஜ் மென்மையாக இருப்பார் ஆனால் பயந்தவர் அல்ல. தனது கருத்தைச் சொல்வதற்கு என்றுமே தயங்கமாட்டார். அவர் ஒரு சிறந்த விமர்சகர். எழுபதுகளின் முற்பகுதிகளில் தேசியசேவையில் பேராசிரியர் கைலாசபதி அவர்கள் தயாரித்து வழங்கிய கலைக்கோலம் ஒரு முக்கியமான கலை விமர்சன நிகழ்ச்சி. ஒரு நிகழ்ச்சியில் ஜோர்ஜ் கலைஞர் மானா மக்கீனின் நாடகம் ஒன்றை மிகக் கடுமையாக விமர்சித்திருந்தார். இதனால் கோபம்கொண்ட மக்கீன் ஜோர்ஜுக்கு எதிராகத் துண்டுப்பிரசுரங்கள் வெளியிட்டு மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தி விட்டார்.

ஜோர்ஜ் எப்பொழுதுமே மற்றவர்களை மகிழ்ச்சிப்படுத்துவதற்காகப் பொய் பேசாது, உள்ளதை உள்ளபடியே சொல்லிவிடுவார். இதனால் எல்லோருக்கும் அவரிடம் ஒரு மரியாதை கலந்த பயம் இருந்தது. நிர்வாக ஒழுங்குகளை மிகவும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கவேண்டிய ஒலிபரப்புத் துறையிலே ஜோர்ஜின் பற்றற்ற போக்கு சில சமயங்களில் வரவேற்கப்படாதிருந்த போதிலும்கூட மேலதிகாரிகள் அவரிடம் மரியாதையுடன் அன்புகாட்டியே நடந்தார்கள். இது ஜோர்ஜின் அறிவிற்கும் அவருடைய சுபாவத்திற்கும் கிடைத்த மதிப்பு என்றே கருதவேண்டும்.

ஜோர்ஜ் மிகவும் உரிமையுடன் பழகியவர்களில் நானும் ஒருவன். விக்கி, நீர், உமக்கு என்றுதான் என்னுடன் அவரது உரையாடல்கள் அமைந்திருக்கும். இலங்கையில் எனது இருபதுவருடகால தொழில்வாழ்க்கையில் பெரும்பகுதியை ஜோர்ஜ், நடராஜசிவம் ஆகியோருடன்தான் கழித்திருக்கிறேன். எனக்குப் பெருமைசேர்த்த பல தயாரிப்புகளில் ஜோர்ஜின் பெரும் பங்கு இருக்கிறது. நான் பபீசார்த்த நாடகங்கள் தயாரித்தபோது அவர் எழுதிய ‘சொர்க்கமும் நரகமும்’ என்ற வோல்ற்ஸ் இசைவடிவ நாடகம் மிகுந்த வரவேற்பைப் பெற்றது. இந்த நாடகத்தை பின்னர் ஒலிபரப்புக் கூட்டுத்தாபன நாடக விழாவில் ஜோர்ஜும் நானும் இணைந்து நெறிப்படுத்தி மேடை நாடகமாகத் தயாரித்துப் பலரது பாராட்டையும் பெற்றோம்.

இயூஜின் அயனஸ்கோவின் நாடகமொன்றை

47ம் பக்கம் பார்க்க...

"நத்தையும் ஆமையும்" என்ற தலைப்பில் ஜோர்ஜ் மொழிபெயர்த்தார். அதைப் பரீட்சார்த்த வானொலி நாடகமாகத் தயாரித்தேன். அந்த நாடகம் அண்மையில் ரொரன்ரோவில் சபேசனின் நெறியாள்கையில் மேடையேறியபோது பலரது பாராட்டையும் பெற்றது. இந்த இரு நாடகங்களையும் ஜோர்ஜ் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்.

கவிஞர் இ.இரத்தினம் அவர்கள் மொழி பெயர்த்து, நான் வானொலிக்கெனத் தயாரித்து மிகப் பிரபலம் பெற்ற நாடகம் சேக்ஷ்பியரின் ஒதெல்லோ. அதில் இயாகோவின் பாத்திரத்தை மிகச் சிறப்பாக நடித்திருந்தார் ஜோர்ஜ்.

ஜோர்ஜ் 'வெயிற்றிங் ஃபோர் கோடோ' என்ற பிரசித்திபெற்ற அபத்த நாடகப் பாணியில் எழுதிய மேடை நாடகம் 'வைத்தியர் வரும்வரை'. இதை அவர் மேடையேற்ற வில்லை. 1976ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் நடத்திய முதல் கலைவிழாவில் இந்த நாடகத்தை நான் பல்கலைக்கழக மாணவர்களைக்கொண்டு நடிப்பித்து மேடையேற்றினேன். ஜோர்ஜும் நடராஜசிவமும் என்னுடன் யாழ்ப்பாணம் வந்திருந்து இந்த நாடகத்தை இயக்க உதவினார்கள்.

பின்னர் நான் தொலைக்காட்சிக்குச் சென்றவுடன் காலம்சென்ற எஸ்.எஸ்.கணேசபிள்ளை அவர்களின் 'நம்பிக்கை' மேடை நாடகத்தைத் தொலைக்காட்சிக்கெனத் தயாரித்த போது, ஜோர்ஜ் மேடையில் தோன்றிப் பிரபலம் பெற்ற கோவூர் பாத்திரத்தில் தொலைக்காட்சியிலும் தோன்றி நடித்தார்.

நான் தயாரித்து நெறிப்படுத்திய "துணை ஒன்று" என்ற தொலைக்காட்சி நாடகத்தில் பிரதான கதாபாத்திரமாக ஜோர்ஜ் நடித்தார். அவர் எழுதிய இரண்டு தொலைக்காட்சி நாடகங்கள் 'எதிர்பாராதது', 'நினைவில் மலர்ந்த நிஜம்' இவற்றை நான் தொலைக்காட்சிக்கெனத் தயாரித்தேன்.

இப்படி ஜோர்ஜும் நானும் இணைந்து செய்த தயாரிப்புகள் அநேகம். அதேபோல் தயாரிப்புக்கு வெளியேயும் ஜோர்ஜுடன் நான் சம்பந்தப்பட்ட சில நினைவுகள் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை.

ஒருமுறை நானும் ஜோர்ஜும் பெரும் சிக்கலில் மாட்டிக்கொண்டோம். நாகராஜன் என்பவர் எமது கூட்டுத்தாபனத்தால் வழங்கப்படும் கடனைப் பெறுவதற்கு நாம் இருவரும் சாட்சிக் கையெழுத்திட்டிருந்தோம். அந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்டு ஒரு நாள் மதியம் அலுவலகத்தை விட்டுச்சென்ற நாகராஜனை நாங்கள் சந்திக்கவில்லை. சிலநாட்கள் கழித்து கொழும்பு நகரெங்கிலும் காணப்பட்ட சுவரொட்டிகளில் பொலிஸாரால் தேடப்பட்ட நான்கு தீவிரவாதிகளில் ஒருவராக நாகராஜனின் படமும் வெளியாகி யிருந்தது. பொத்துவில் தொகுதிப் பாராளுமன்ற அங்கத்தவர் கனகரத்தினம் அவர்களை சுட்ட சம்பவத்தில் சம்மந்தப்பட்டார் என்று நாகராஜன் தேடப்பட்டார். சிறிது நாட்களின்பின் கொழும்பு இரகசியப் பொலிஸ் விசாரணைப் பிரிவிலிருந்து எனக்கும் ஜோர்ஜுக்கும் அழைப்பு வந்தது. எமது வேண்டுகோளுக்கிணங்க நாம் விசாரணைக்காக இரகசியப் பொலிஸ் பிரி



கட்டுரை ஆசிரியர் சுகவீனமுற்றிருந்த திரு. ஜோர்ச் அவர்களை மட்டக்களப்பில் சந்தித்தபோது.

விற்குச் செல்லாது எமது தங்குமிடங்களிலேயே அவர்கள் வந்து விசாரணை செய்ய ஒப்புக்கொண்டார்கள். பின்னர் பல ஆண்டுகளாக நானும் ஜோர்ஜும் சி.ஐ.டி. பிரிவினரின் கண்காணிப்பில் இருந்தோம். அவ்வப்போது அவர்கள் வந்து விசாரித்துவிட்டுச் செல்வார்கள். இதை நாம் வெளியே ஒருவருக்கும் சொல்லவில்லை. இந்தக் காலமாக இருந்திருந்தால் வெள்ளை வான் எங்கள் கதையை எப்போதோ முடித்திருக்கும்.

ஜோர்ஜின் பற்றற்ற போக்குக் காரணமாக திருமண பந்தத்தில் ஈடுபடுவார் என்று நான் நினைத்திருக்கவில்லை. எழுபதுகளின் மத்தியில் ஒருநாள் தான் திருமணம் செய்யப் போவதாக அவர் கூறினார். அதுவும் மட்டக்களப்பில். ஜோர்ஜ் பிறந்து வளர்ந்தது எல்லாமே கொழும்பில்தான். ஜோர்ஜ் தனது திருமணத்திற்கு எனக்கும் நடராஜசிவத்திற்கும் மட்டுமே சொல்லியிருந்தார். நாம் ஜோர்ஜின் திருமணத்திற்கு மட்டக்களப்பு சென்றோம். அதுதான் நான் மட்டக்கள்பிற்குச் சென்ற முதற்பயணம்.

ஜோர்ஜின் போக்கிற்கு எந்தவித இடையூறும் ஏற்படாதவகையில் ஒரு மணவாழ்க்கை வாய்த்தது என்றே சொல்லவேண்டும். தனக்கு மிகவும் பிடித்த பாரதி, காஃப்கா ஆகிய பெயர்களை தனது முதற் பெண் குழந்தைக்கும், ஆண் குழந்தைக்கும் சூட்டினார். மற்றையவர்கள் ராதா, ரதி. எல்லோருமே தற்போது நல்ல நிலையில் இருக்கிறார்கள்.

இப்படி நினைக்க நினைக்க எத்தனையோ நினைவுகள். நாம் நட்பினை மிகைப்படுத்தும் பானங்களைப் பருகியவாறு மணிக்கணக்கில் உரையாடியிருக்கின்றோம். சினிமா, நாடகம், ஒலிபரப்பு இவைபற்றித்தான் அதிகம் பேசினோம்.

இறுதியாக நான் ஜோர்ஜைச் சந்தித்தது இரண்டாயிரத்திரண்டாம் ஆண்டு. சமாதான உடன்படிக்கையையடுத்து நான் நாடு திரும்பிச்சென்றபோது எனது குடும்பத்தாருடன் மட்டக்களப்புக்குச் சென்று ஜோர்ஜைச் சந்தித்தேன். நோய்வாய்ப்பட்டிருந்தார். எனது 'நாற்காலிகள்' என்ற அபத்த மொழி பெயர்ப்பு நாடகத்தைப் புத்தகமாக வெளியிட எண்ணி அவரிடம் ஒரு முன்னுரை கேட்டிருந்தேன். எழுதி அனுப்பியிருந்தார். கையெழுத்து விளங்கவில்லை. அவரிடம் நேரில் வாசித்துக் காட்டி உறுதி செய்து கொண்டேன். அந்த முன்னுரையில் நான் எனது துறையைவிட்டு வெளிநாடு சென்றதைப்பற்றி ஆதங்கப்பட்டிருந்தார். புத்தகம் இன்னமும் வெளிவரவில்லை. இதுதான் நான் கடைசியாக ஜோர்ஜைச் சந்தித்தது.

ஜோர்ஜ் பல இளைஞர்களுடன் பழகியவர். அவர்களின் சிந்தனைக்கும் செயல்களுக்கும் தூண்டுகோலாக அமைந்திருக்கிறார். எத்தனைபேர் ஜோர்ஜின் மூலம் தமது ஆற்றல்களை வளர்த்துக்கொண்டார்கள் என்று என்னால் கூறமுடியாது போனாலும் எனது தொழில் வாழ்க்கையில் ஜோர்ஜினால் கிடைத்த நன்மைகள் அதிகம்.

இந்திய சினிமா, இசை, நாடகம் ஆகியவற்றில் மட்டுமே ஈடுபாடும் இரசனையும் சிறிதளவு திறமையும் கொண்டு, மிக இளவயதில் ஒலிபரப்புத் துறையில் அடியெடுத்து வைத்தவன் நான். தியேட்டர் ஒஃவ் த அப்சேட் பற்றியும் நியோ றியலிஸம் பற்றியும் எக்ஸிஸ்ரான்ஷலிஸம் பற்றியும் ஸ்ட்றீம் ஒஃவ் கொன்ஷியஸ்னஸ் பற்றியும் மற்றும் உலகின் வாழ்ந்த, வாழ்ந்துகொண்டிருக்கின்ற பல உன்னதமான எழுத்தாளர்கள், தத்துவமேதைகள், கவிஞர்கள், ஓவியர்கள், நாடகக் கலைஞர்கள் என்று ஓரளவாவது அறியத்தந்து, எனது தேடல் அவாவிற்குத் தீனி போட்டு, நான் சார்ந்த துறைகளில் நானும் ஒரு குறிப்பிடத் தக்கவனாக வளர முடிந்தது என்றால் அதற்கு ஜோர்ஜின் பெரும் பங்களிப்பு இருக்கிறது. ஆனால் நான் ஒருபோதும் வாய்திறந்து ஜோர்ஜிடம் சொன்னதில்லை. அப்படிச் சொன்னால் அது ஒரு தமிழ் சினிமாத் தனமாக ஆகிவிடுமோ என்ற கூச்சம்தான் காரணம். இப்போது கூச்சப்படாமல் மனம் திறந்து பதிவுசெய்துவிட்டேன், எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து.

நன்றி ஜோர்ஜ்.

ஜோர்ஜ் ஒரு பன்முகக் கலைஞர். சிந்தனா வாதி. தான் சார்ந்த துறைகளில் கௌரவமும் புகழும் பெற்றிருக்கிறார். அவரது பல படைப்புகள் நூலுருவில் வெளி வந்து, இலக்கியத் தளத்தில் பதிவாகியுள் ளன. சிறந்த குடும்பவாழ்க்கையும் அமையப்பெற்ற அவருக்குக் குறையொன்று மில்லை.

ஓய்வாகக் காரைச் செலுத்திக் கொண்டிருக்கிறேன். எனது இளமைக் காலங்களில் கேட்ட பாடல்கள் காரின் எம்.பி.3 பிளேயரில் இருந்து இனிமையாக ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அதைப் பின்னணியாகக்கொண்டு ஜோர்ஜுடன் பழகிய இனிமையான நினைவுகளும் சேர்ந்து கொள்கின்றன. அந்த நினைவுகளை இப்போதாவது நான் மீட்காவிட்டால் வேறு எப்போது? நாளை என்னென்ன செய்திகள் காத்திருக்கின்றனவோ. மரணங்கள் எமக்கு சர்வ சாதாரணமாகிவிட்டன.

■ ■ ■

# எழுத்தாரம்



வி. கந்தவனம்
kanthavanam@thaiveedu.com

## பத்து அழகு

பத்துக் குற்றங்களையும் கூறியதோடு பவணந்தி முனிவர் அமைதியடையவில்லை. அக் குற்றங்களைத் தவிர்த்தால் மட்டும் நூல் சிறப்பாகாது என்று கருதிப்போலும், நூலை அழகு படுத்துவதற்கு வேண்டிய வழிமுறைகளையும் கூறுகின்றார்.

இயற்கைப் பொருள் அழகுபற்றி முன்பு பார்த்தோம். இங்கு கூறப்படும் அழகு, ஆக்க அழகு. ஆக்கப்படும் நூலுக்கு இருக்க வேண்டிய அழகு. இந்த அழகைப் பத்தாக வகுக்கின்றார் பவணந்தி முனிவர்.

| | |
|---|---|
| 01- சுருங்கச் சொல்லல் | -நூற்பொருளைச் சுருக்கமாகக் கூறுதல். |
| 02- விளங்க வைத்தல் | -சுருங்கக் கூறினும் பொருளைச் சந்தேகத்துக்கு இடம் இன்றி விளங்க வைத்தல். |
| 03- நவின்றோர்க்கு இனிமை | -வாசிப்பவருக்கு இன்பத்தைத் தருதல். |
| 04- நன்மொழி புணர்த்தல் | -நன்மை தரத்தக்க சொற்களைச் சேர்த்தல். |
| 05- ஓசை உடைமை | -சந்த இன்பங் கொண்டிருத்தல். |
| 06- ஆழம் உடைத்தாதல் | -படிக்குந்தோறும் ஆழ்ந்த கருத்தைத் தருதல். |
| 07- முறையின் வைப்பு | -பொருளைக் காரண காரிய முறைப்படி ஒழுங்கு செய்தல். |
| 08- உலகம் மலையாமை | -உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுபடாமை. |
| 09- விழுமியது பயத்தல் | -சிறப்பாகிய பொருளைத் தருதல். |
| 10- விளங்கு உதாரணத்தது ஆகுதல் | -விளங்கிய (எல்லோருக்கும் தெரிந்த) உதாரணத்தை உடையதாதல். |

இவை பற்றிய சூத்திரம் பின்வருமாறு:

*சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்*
*நவின்றார்க் கினிமை நன்மொழி புணர்த்தல்*
*ஓசையுடைமை ஆழமுடைத் தாதல்*
*முறையின் வைப்பே உலகமலை யாமை*
*விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த*
*தாகுத னூலிற் கழகெனும் பத்தே.*

இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கலை. இக்கலைகள் முற்காலத்து நூலாக்கத்துக்காகக் கூறப்பட்டவையேயாயினும், தனித்தனியான கட்டுரை, கதை, கவிதை முதலிய இக்காலத்து இலக்கிய வடிவங்களுக்கும் பொருந்துமாறு உணர்க.

இவற்றுடன் பொருள் புதிதாதல், சிந்திக்க வைத்தல் போன்ற பொருத்தமான பிற கலைகளையும் இக்காலத்து எழுத்தாளர்கள் கையாள வேண்டிய நிலையில் உள்ளனர். இவ்வழகு பத்தும் பிறவும் பொருந்திவரும் ஆக்கப்படைப்பு அழகுற அமையும். அதாவது, கலைத்துவம் மிக்கதாயிருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

கலைத்துவம் இல்லாத படைப்புகளிற் கவர்ச்சி இல்லை. கவர்ச்சி இல்லாத பொருளுக்குச் சந்தை இல்லை.

பவணந்தி முனிவர் வரிசைப்படுத்தும் பத்து அழகுகளில் முதல் இரண்டும் மிகவும் முக்கிய மானவை.

## சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்

நன்னூலிற் கூறப்பட்டிருக்கும் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் ஆகிய அழகுகள் இரண்டும், இக்காலத்தில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என வழங்கி வருதல் கண்கூடு.

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்பது முற்காலத்திலும் இக்காலத்துக்கே மிகவும் வேண்டப்படுகின்றது. இக்கால மனிதனுக்குத் தேவைகள் பல; அலுவல்கள் அதிகம்; பொழுது போக்குகள் ஏராளம். அவனது வாழ்க்கை ஒருவித அந்தர வாழ்க்கை. இத்தகைய

போக்கின் ஒரு துளிச் சிதறல் இப்பாடல்:

*காலையும் மாலையுங் காரிருள் வேளையுங்*
*காலம் முழுவதும் வேலை – பயன்*
*கண்டறி யாதொரு வேலை*
*சோலி சுரட்டில் நிகழும் மனிதர்கள்*
*சோர்ந்து தளர்ந்திடும் வாழ்வு – துயர்*
*சூழ்ந்து வளர்ந்திடும் வாழ்வு!* (நூல்: பாடு மனமே)

துன்பங்களால் சோர்ந்து தளரும் மக்களுக்கே இக்காலத்து எழுத்தாளர் எழுதவேண்டி இருக்கின்றது. நேரத்தோடு என்னேரமும் போராடிக் கொண்டிருக்கும் வாசகர்களின் மன-நிலையைப் புறக்கணித்து, எழுத்தாளர், தாம் நினைப்பதை எல்லாம் நீட்டி முழக்கிக் கொண்டிருக்க முடியாது. அவற்றை அவர்கள் படிக்கவும் தயாராக இல்லை. அவர்களைக் கவர்வதற்குச் சிறந்த வழி, சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலேயாம்.

சேக்ஸ்பியரின் காலம் (1564 – 1616) ஓரளவு அமைதியும் ஆறுதலும் குடிகொண்டிருந்த காலம் என்பர். கலை முயற்சிகளுக்கு எலிசபெத் மகாராணியும் பொதுமக்களும் நல்ல ஆதரவளித்த காலம் அது. அத்தகைய காலத்திலேயே சொல்வதைச் சுருங்கச் சொல்ல வேண்டிய அவசியத்தை உணர்த்தியிருக்கின்றார் சேக்ஸ்பியர். அவரின் பொன்மொழி இது: Brevity is the soul of wit.

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் கவிதைகளுக்கே உரிய கலையெனச் சிலர் கருதுகின்றனர். இது தவறானது. சுருங்கக் கூறி விளங்க வைத்தல் கவிதைக்கு மட்டுமன்றி எழுத்துச் சார்ந்த அனைத்துக் கலைகளுக்கும் (கட்டுரை, சிறுகதை, நாவல், நாடகம் மற்றும் பத்திரிகைத் துறை) அவசியமானதாகும்.

இன்றைய காலம், உரைநடைக் காலம்; கவிதைக் கலையிலும் உரைநடைக் கலை ஏறு நடைபோடும் காலம்; வசன நடையில் எழுதுவோருக்கே வாசகர்கள் அதிகமாகவுள்ள காலம். அதனால், அவர்களுக்கே அவசர யுகத்து வாசகர்களைக் கவரவேண்டிய பொறுப்பு அதிகமாக உள்ளது. புகழ் பெற்ற எழுத்தாளர்கள் பலர், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் கலையினால் வாசகர்-களைக் கவர்ந்திருக்கின்றார்கள்; கவர்ந்து வருகின்றார்கள்.

எழுத்துத் துறையில் வெற்றி பெற விரும்பும் இளம் எழுத்தாளர்களும், சொல்வதை அளவாகவும் அழகாகவும் விளக்கமாகவும் சொல்லப் பழகுதல் வேண்டும். சொல்வது பயனுடையதாக இருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். அதனைப் பொருத்தமான சொற்களாற் சொல்லுதல் வேண்டும். பொருத்தமான சொல் என்பது, வேறொரு சொல் அதனை வெல்லாத சொல். பல பயனற்ற சொல்களைப் பயன்படுத்தலிலும் பயனுள்ள சிலவற்றைப் பயன் படுத்தல் சிறந்தது, சொல்லின் தெரிவு பொருளினைப் படிப்பவர் உணரும் வகையில் அமைதல் வேண்டும்.

*இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது*
*ஊணர விரித்துரையா தார்*

என்று கூறுவர் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

தாம் கற்றதை மற்றவர் உணர்த் தக்க வகையில் விளக்கிக் கூறத் தெரியாதவர், மலர்ந்தும் மணவாத மலரைப் போன்றவர் என்பது இதன் பொருள்.

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலுக்குச் சொல்வளம் இன்றியமையாதது. இக்கலையிற் பெயர் பெற்ற, கலாநிதி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை போன்றோரின் நூல்களைப் படிக்கின், எழுத்துக் கலை பற்றிய பல நுணுக்கங்களை அறிந்து கொள்ள முடியும்.

## பயிற்சிக் கலை

*சித்தரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்*
*வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்*

என்று ஔவைப் பிராட்டியார் கலைகளுக்கும் கல்விக்கும் பயிற்சி மிக அவசியமென வலியுறுத்துகின்றார்.

எத்துறையாயினும் அத்துறையில் போதிய பயிற்சி பெறுபவனே முன்னுக்கு வரமுடியும்.

இளம் எழுத்தாளர்கள் நிறையவே எழுதிப் பழகுதல் வேண்டும். எழுதி எழுதிப் பழகுவதால் எழுத்துக் கலையை நல்ல முறையில் கற்றுக்கொள்ள முடியும். குறிப்பாக, எழுதும் ஆக்கத்தை மனநிறைவு வரும்வரை எத்தனை முறை வேண்டுமானாலும் திருப்பி எழுதுவது நல்லது.

எழுத்தாளர் ஒருவர், தமக்குத் தாமே குருவாகித் தமது எழுத்தில் பிழைகளைக் கண்டறிய முயலுதல் வேண்டும். தமது எழுத்தைத் தாமே திருத்தி எழுதுதல் வேண்டும். எழுத்தாற்றலை வளர்ப்பதற்கு இதைப் போன்ற சிறந்த வழி வேறொன்றுமில்லை.

ஒரு படைப்பினை எழுதத் தொடங்குமுன், அது பற்றிய குறிப்புத் திட்டம் ஒன்றை அமைத்தல் பயனுடையது. இத்திட்டத்தில் கருத்து அல்லது நிகழ்வு ஒழுங்கு முக்கியமாக இடம்பெற வேண்டும். பொருளைக் காரிய முறைப்படி ஒழுங்கு செய்தல், ஆக்க இலக்கியத்தின் அழகுகளில் ஒன்று. படிப்பவனை இழுத்துப் பிடிக்கும் வகையில் இந்த ஒழுங்குமுறை அமைதல் வேண்டும்.

எழுதிக் கொண்டிருக்கையில் பிழைகளைப் பற்றியோ அழகுபடுத்தலைப் பற்றியோ கவலைப்-படுதல் நல்லதல்ல. அத்தகைய கவலை கற்பனையைப் பாதிக்கும்; எழுத்து ஓட்டத்தையும் தடைப்படுத்தும்.

எழுத வேண்டியதை எழுதி முடித்தபின் திருப்பிப் படித்தல் வேண்டும். எழுத்துப் பிழை, சொற்பிழை போன்றவற்றைக் கவனிக்க வேண்டிய கட்டம் இது. குறிப்புத் திட்டம் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருந்தால் கருத்து ஒழுங்கு, கூறியது கூறல், மிகைபடக் கூறல் போன்ற குற்றங்களும் குறைவாகவே இருக்கும்.

எதிர்பார்த்ததிலும் நீண்டு விட்டதாகக் கருதின், படைப்பைச் சுருக்கி எழுதுவதைவிட வேறு வழியில்லை. சுருக்கி எழுதத் தொடங்குமுன் பின்வருவனவற்றைக் கவனித்துக் குறித்துக் கொள்வது நல்லது:

*1- அவசியமற்ற சொற்கள் / சொற்றொடர்கள்*
*2- விலக்குதற்குரிய இழி வழக்குகள்*
*3- நீக்கத் தகுந்த உதாரணங்கள்*
*4- பொருத்தமற்ற தாளிதங்கள் (உவமை, பழமொழி, சிலேடை)*
*5- மேலதிக கருத்துக்கள் / மேற்கோள்கள்*
*6- ஐயப்பாட்டுக்குரிய இடங்கள்*

இவற்றை நீக்கி, அளவாகச் சுருக்கியபின், படைப்பினை ஓரிடத்தில் வைத்து, அதை மறந்துவிடுவது விரும்பத்தக்கது. இரண்டொரு நாள்களுக்குப் பின், அதனை மீண்டும் எடுத்து, அமைதியாகப் படித்துப் பார்க்க வேண்டும். இம்முறையால் அப்படைப்பு, ஒரு புதிய பார்வைக்கு உள்ளாகின்றது.

எழுத்தாளரின் சிறந்த இரசிகர் எழுத்தாளரே. அவரது ஆக்கத்தில் அவருக்கு ஒரு நிறைவு வரல் வேண்டும். மனநிறைவு மிகவும் முக்கியமானது. மனநிறைவு வரும்வரை படைப்பினைச் சீர்செய்ய வேண்டும். இந்த விடயத்தில் எழுத்தாளர், சலிப்படையவே கூடாது. எழுத்துலகத்தை விட்டுப் பலபேர் நீங்கியமைக்குச் சலிப்பே காரணமாகும்.

காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு என்னும் பந்தபாச மனநிறைவு எழுத்துலகுக்குச் சரிப்பட்டு வராது. தனது ஆக்கத்தைப் பற்றித்தானே மகிழ்ச்சியடைவது மனித இயல்பு. முன்னவரதும் சமகாலத்தவரதும் படைப்புகளுடன் ஒப்பிடுகையில், தனது படைப்பு எத்தரத்தில் உள்ளதெனும் மதிப்பீட்டால் வரும் மனநிறைவே தகுந்த மனநிறைவாகும்.

அத்தகைய நிறைவு ஏற்படின் ஆக்கிய படைப்பினை விரும்பிய ஓர் இதழுக்கு அனுப்பிப் பார்க்கலாம்.

இதழில் அதைப் பிரசுரிக்கவில்லை என்றால்?

■ ■ ■

தொடரும்...

# குடும்ப வன்முறையும் பிள்ளைகளும் (Domestic Violence and Children)

ஜீவா திசைராஜா
jeeva@thaiveedu.com



குடும்ப வன்முறை என்றால் என்ன என்பது பற்றியும் அதனால் ஏற்படும் உளப் பாதிப்புக்களை எவ்வாறு தம்பதியினர் எதிர்நோக்கலாம் என்பது பற்றியும் கடந்த இதழ்களில் நோக்கினோம். குடும்ப வன்முறையினால் பிள்ளைகள் எவ்வாறு பாதிக்கப்படுவார்கள் என்பதை வன்முறை நிகழும் வீடுகளில் சிந்திக்கத் தவறிவிடுகிறார்கள். எமது தாயகத்தில் இத்தகைய சம்பவங்கள் குறைவாக இருப்பதுடன் நாம் புலம்பெயர்ந்த நாட்டு சட்ட திட்டங்களையும் அறியத் தவறுவதால் வன்முறைகள் இடம்பெறும் வீடுகளில் பெற்றோர் தற்காலிகமாகவேனும் தமது பிள்ளைகளை இழக்க நேரிடும் சந்தர்ப்பங்களும் ஏற்படுவதுண்டு.

குடும்ப வன்முறை நிகழும் வீடுகளில் பிள்ளைகளின் பாதுகாப்புத் தொடர்பாக அரசாங்கம் அதிக கவனம் செலுத்துகின்றது என்பது பலரும் அறியாததொன்று. இத்தகைய வீடுகளில் பிள்ளைகள் வளரும்போது பிள்ளைகளின் உதவும் அமைப்பு (Children's Aid Society) பிள்ளைகளை அந்த வீடுகளில் இருந்து அகற்றி வளர்ப்பு இல்லங்களில் (Foster homes) பிள்ளைகள் வளர்வதற்கான ஏற்பாடுகளைச் செய்கின்றனர்.

குடும்ப வன்முறை நிகழும் வீடுகளில் பிள்ளைகள் வாழும்போது அங்கு பாதிக்கப்படும் பெற்றோர் (Victim) கூட அதனை அறிவிக்கத் தவறும் பட்சத்தில், அல்லது அத்தகைய வீடுகளில் பிள்ளைகளுடன் வாழும்போது அவரும் சிறுவர் துஷ்பிரயோகம் செய்கிறார் என நீதிமன்று தீர்மானிக்கும். இது இரண்டாந்தர துஷ்பிரயோகம் (Secondary Abuse) எனப்படும்.

கலிபோர்ணியா நீதிமன்று வழக்கொன்றில் ஒரு தாய் அவரது ஆண்நண்பரால் உடலியல் ரீதியாக துஷ்பிரயோகம் செய்யப்பட்ட போது அத்தாயின் இரு பிள்ளைகளும் அதனை அறியாது அதேவேளை அதே வீட்டில் வேறொரு அறையில் இருந்த போதும், ஒரே வீட்டில் இருந்த காரணத்தினால் வீட்டிலிருந்து அகற்றப்பட்டு நீதிமன்றின் பொறுப்பில் விடப்பட்டனர். அதாவது பிள்ளைகள் வீட்டிலிருந்து அகற்றப்படுவதற்கு அவர்கள் உடலியல் ரீதியாகத் துன்புறுத்தப் பட வேண்டும் என்பதில்லை.

## பிள்ளைகள் வீட்டிலிருந்து அகற்றப்படாதிருக்க என்ன செய்ய வேண்டும்?

பிள்ளைகள் வீட்டிலிருந்து அகற்றப்படாதிருப்பதை உறுதி செய்ய வேண்டுமெனில், ஓர் துஷ்பிரயோகமான உறவுமுறையிலிருந்து (Abusive Relationship) விடுபடுவதே ஒரு பெற்றார் எடுக்க வேண்டிய முக்கியமான படிமுறையாகும். ஓர் துஷ்பிரயோகமான



உறவுமுறையில் இருந்து விடுபடுதல் ஓர் நீண்ட செயல்முறையாகும் (Long Procedure). அதேநேரம் தமது பிள்ளைகளைப் பாதுகாக்குமுகமாக பெற்றோர் வேறு சில மாற்று வழிகளை எடுப்பதையிட்டு கவனம் செலுத்தலாம். குடும்ப வன்முறையை நிறுத்துவதற்கு பாதிக்கப்படுபவருக்கு (Victim) உதவி கிடைக்கும் வரை பிள்ளைகளை உறவினர், நண்பர், அல்லது ஏனைய பராமரிப்பாளருடன் தங்க வைக்கலாம்.
குடும்ப வன்முறை காணப்படும் ஓர் உறவு முறையில் நீங்கள் ஈடுபட்டிருக்கும்போது, பிள்ளைகள் அவ்வுறவு முறையில் இருந்தால், உங்களது சட்டத்தரணியின் ஆலோசனையைப் பெறுவது சிறந்ததாகும். அத்துடன் உங்களதும் உங்களது பிள்ளையின் பாதுகாப்புத் தொடர்பாகவும் சட்ட ஆலோசனையைப் பெற்றுக் கொள்ள முடியும்.

## பிள்ளைகள் வீட்டிலிருந்து அகற்றப்பட்டால் என்ன செய்வது?

குடும்ப வன்முறை எப்போதும் பிரிவினையில் (Separation) முடிவதில்லை. உண்மையில் பாதிக்கப்பட்ட பெண்களிற்கு பிரிவு என்பது மிக யோசனை மிகுந்த கட்டமாகும். இதன்போதும் இதன்பின்னரும் பிள்ளைகளின் பாதுகாப்பு என்பது மிக முக்கியமான-தாகும்.

பிள்ளைகள் வீட்டிலிருந்து அகற்றப்பட்டால், பாதிக்கப்பட்டவர் சட்ட ரீதியான ஆலோசனையைப் பெற்று துஷ்பிரயோகமான வீட்டில் பிள்ளைகள் வளரும் நிலை காணப்படாது என்பதை உறுதி செய்ய வேண்டும். இதுவும் ஒரு நீண்ட கால செயல்முறையாகும். சட்டத்தரணிகளைச் சந்திப்பதும் நீதிமன்றிற்குச் செல்வதும் உங்களது நேரத்தை அபகரித்துவிடும் சந்தர்ப்பங்களாக இருக்கும்.

இவற்றினை தவிர்க்க வேண்டுமாயின் அத்தகைய உறவுமுறையிலிருந்து விடுபடுவதே சிறந்த வழியாகும். இத்தகைய வன்முறைகள் குடும்பத்தில் நிகழாது பார்த்துக் கொள்ள வேண்டும். எமது தாயகத்தில் என்ன நிகழ்ந்தாலும் அயல்வீட்டுக்காரர், உறவினர் சமாதானம் செய்ய முன்வருவர். ஆனால் இங்கு பாதிக்கப்படுபவர் வீட்டில் பொறுமையாக இருந்தாலும் அயல்வீட்டுக்காரார் 911 அழைத்து விடுவது சாதாரண நிகழ்வாகும். இத்தகைய சந்தர்ப்பங்களில் பாதிப்புச் செய்பவர் பொலிஸாரால் கைது செய்யப்படுவதும், பிள்ளைகள் இத்தகைய வீடுகளில் இருந்து அகற்றப்படுவதும் எதிர்பார்க்கப்படக் கூடியவையே.

## பிள்ளைகளுக்கு ஏன் முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது?

குடும்ப வன்முறைக்குச் சாட்சியாதல், மற்றும் இத்தகைய குழப்பமான குடும்ப சூழலில் வளர்தல் என்பன பிள்ளைகளின் உளவியல் வளர்ச்சியில் பாரதூரமான தாக்கத்தை ஏற்படுத்தும். இவ்வாறாக, குடும்ப வன்முறை நிலமைகளில் பிள்ளைகளை பெற்றோர் அவர்களுடன் வைத்திருத்தல் (Custody) ஓர் கேள்விக்குரிய முக்கிய இடத்தைப் பெறுகிறது.

பெற்றோர் தமது வீட்டில் குடும்ப வன்முறையை அனுபவிக்கும்போது, அவர்கள் தமது பிள்ளைகளை தம்முடன் வைத்திருக்கும் (Custody) பொறுப்பை இழந்துவிடும் அபாயம் உள்ளது. பிள்ளைகள் இத்தகைய சந்தர்ப்பங்களில் நீதிமன்றால் பொறுப்பேற்கப்பட்டு பிள்ளைகளின் உதவும் அமைப்பின் (Children's Aid Society) பொறுப்பில் விடப்படுவார்கள்.



தொடாரும் குடும்ப வன்முறை பிள்ளைகளில் பாதகமான தாக்கங்களை ஏற்படுத்து கின்றது. துஷ்பிரயோகம் செய்பவர்கள் தமது துணைவர்களை தமது கட்டுப்பாட்டி னுள் கொண்டுவருவதற்காக பிள்ளைகளைப் பயன்படுத்துவார்கள். உறவுமுறை தொடரும் போது பாதிக்கப்பட்டவர் இத்துஷ்பிரயோகம் பற்றி அறிவித்தால், பிள்ளையை வைத்தி-ருக்கும் பொறுப்பை (Custody) தாம் எடுக்கப் போவதாகவும், பிள்ளைகளை கடத்துவோம் அல்லது துன்புறுத்துவோம் எனவும் துஷ்பிரயோகம் செய்பவர்கள் அச்சுறுத்துவது இயல்பாகும்.

பாதிக்கப்பட்ட பெண் உறவுமுறையை விட்டு நீங்கிய பின், பாதிக்கப்பட்டவர்கள் பிள்ளையை பாதுகாத்து வைத்திருக்கும் பொறுப்பு (Custody), பிள்ளையை பார்க்கச் செல்லுதல் (Visitation), பிள்ளையை பாதுகாப்பாக வைத்திருக்கும் கூட்டான பொறுப்பு (Joint Custody) என்பவற்றை, தமது முன்னைய துணைவர்களைப் பயமுறுத்துத்துதல் (Intimidation), அச்சுறுத்துதல் (Threatening), துன்புறுத்துதல் (Hurting), பலவந்தமாகக் கீழ்ப்படியச் செய்தல்

51ம் பக்கம் பார்க்க...

50ம் பக்கத் தொடர்ச்சி...

(Coerce) ஆகியவற்றிற்காகப் பயன்படுத்தலாம். அடித்துத் துன்புறுத்தாத தகப்பன்மாரைவிட அடித்துத் துன்புறுத்தும் தகப்பன்மார் தமது பிள்ளைகளை தாம் வைத்திருந்து பாதுகாக்கும் பொறுப்பை (Custody) கோரும் நிலை அதிகமாகக் காணப்படுகின்றது. அத்துடன் தமது முன்னைய துணைவர்களை தொடர்ந்து துன்புறுத்துவதற்கான ஓர் போரிடும் களமாக சட்டமுறையைத் தவறாகப் பயன்படுத்துகிறார்கள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் பிள்ளையை மேற்பார்வையுடன் சென்று பார்த்தல் (Supervised Visitation) நீதிமன்றத்தால் தீர்மானிக்கப்படுகின்றது. அதாவது பிள்ளைகளை மற்றைய பெற்றோர் சென்று பார்க்கும்போது மூன்றாம் நபர் ஒருவர் இச் சந்தர்ப்பத்தில் மேற்பார்வை செய்வார். பிள்ளையின் பாதுகாப்பிற்கு தகப்பன் அல்லது தாயினால் ஆபத்து ஏற்படலாம் என நீதிமன்று காணும் பட்சத்தில் இம் மேற்பார்வையுடனான சென்று பார்க்கும் ஒழுங்கு மேற்கொள்ளப்படும்.

## மேற்பார்வையற்ற விஜயங்கள்

*மேற்பார்வையற்ற விஜயங்களின் போது பெற்றோரால் ஆபத்து ஏற்படலாமா என்பதை நீதிமன்று பின்வரும் விடயங்களின் ஊடாகத் தீர்மானிக்கும்.*

- பிள்ளைகள் மீதும் அவர்களது தாயார் மீதும் தொடர்ந்தும் அச்சுறுத்தல் ஏற்படுத்தும் ஒருவர் சிறந்தபெற்றோராக இருக்க முடியுமா?
- வன்முறையான நடத்தையில் ஈடுபடும் ஒருவர் சிறந்த பெற்றோராக இருக்க முடியுமா?
- தமது துஷ்பிரயோகமான நடத்தையை மறுத்துவிட்டு மற்றைய பெற்றோரை அல்லது பிள்ளைகளைக் குற்றம்சாட்டும் ஒருவர் சிறந்த பெற்றோராக இருக்க முடியுமா?
- தமது சொந்த தேவைகட்கு மேலாக பிள்ளைகளின் தேவைகட்கு முன்னுரிமை கொடுக்க முடியாத ஒருவர் சிறந்த பெற்றோராக முடியுமா?
- தமது பிள்ளைகளதும் அவர்களைப் பெற்றவர்களதும் நலனைப் பாதிக்கும் ஒருவர் சிறந்த பெற்றோராக முடியுமா?

வன்முறை மூலம் பாதிப்பை ஏற்படுத்தியவர் தமது பிள்ளைகளுக்கோ அல்லது மற்றைய பெற்றோருக்கோ எந்த வித ஆபத்தையும் ஏற்படுத்த மாட்டார் என்பதை நிரூபித்தால் ஒழிய பிள்ளைகளைப் பார்ப்பது, பிள்ளையின் பாதுகாப்பிற்கு பொறுப்பாக இருப்பது போன்றன அனுமதிக்கப்பட மாட்டாது.

குடும்ப வன்முறையின்போது பிள்ளையின் பாதுகாப்புத் தொடர்பான பெற்றோருக்கிடையிலான சமரசப் பேச்சுவார்த்தைகள் நேருக்கு நேர் நடைபெறுவதை விட மூன்றாம் தரப்பு மத்தியஸ்தத்தினூடாக பேச்சுவார்த்தைகள் நடைபெறுவது நல்விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை விட செலவும் குறைவானதுமாகும். இச் சமரசப் பேச்சுவார்த்தை, ஓர் பயிற்றுவிக்கப்பட்ட நடுநிலையான சமரசப் பேச்சுவார்த்தையாளரால் பிரச்சனையைக் கலந்து பேசித் தீர்க்கும் ஓர் தொடரான செயல் முறையாகும். இச்செயல்முறை தம்பதியர் இருவரையும் ஒற்றுமைப்படுத்தும் முயற்சியல்ல. இதனுள் பிள்ளைகள் வாழவேண்டிய இடம், பிள்ளைக்குரிய நிதி தொடர்பான ஒழுங்குகள் போன்றவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படும்.

எனவே மேற்கண்டவற்றிலிருந்து குடும்ப வன்முறையின்போது பிள்ளைகளின் பாதுகாப்பு மற்றும் நல்வாழ்விற்கு அரசாங்கம் கூடிய முக்கியத்துவம் கொடுக்கின்றது என்பதை அறிந்து கொள்ளலாம். பெற்றோரின் பிரச்சனைகட்குள் பிள்ளைகள் பாதிப்படையாமல் இருப்பதை உறுதி செய்து கொள்வதே இங்கு முக்கிய இடம் பெறுகின்றது. இச் சந்தர்ப்பங்களின்போது பிள்ளையின் பாதுகாப்பிற்காக பெற்றோரிடமிருந்து பிள்ளை அகற்றப்படும் நிலைமையும் ஏற்படலாம் என்பதை எதிர்பார்க்கத் தான் வேண்டும்.

■ ■ ■

# எண்ணைவிலை.. யாருக்கு..

45ம் பக்கத் தொடர்ச்சி...

யிடம் வாங்கிக் கொண்டு பதிலுக்கு கொஞ்சம் பணம், நிறைய போர் விமானங்கள், ரொக்கெட்களை தந்து விடுகிறார்கள், பணத்துக்கு பணம் மிச்சம்.. கூடவே அமெரிக்க தளவாட உற்பத்தி நிறுவனங்களுக்கு லாபம்! எதிர்காலத்தில் உலகம் எண்ணைத் தட்டுப்பாட்டில் திண்டாடி இறக்க அமெரிக்காவில் மட்டும் எண்ணை இருக்கும். ஒபெக் நாடுகளுக்கு கூட எண்ணை இல்லாமல்போகலாம்.)

பங்குச் சந்தை வர்த்தம் என்பதே ஒரு கணிப்பு தான். ஊகம்தான். உண்மையை சொன்னால் வெறும் ஊகம் மட்டும்தான்.

சீனாவில் ஒலிம்பிக் வருதா, அங்கு ஸ்டேடியங்கள் கட்ட இரும்பு அதிகமாக பயன் படுத்தப்படப் போகிறது, இதனால் இரும்பு நிறுவனங்களின் லாபம் அதிகமாகும், இதனால் இரும்பு நிறுவன பங்குகளில் அதிகம் முதலீடு செய்யலாம்.. என்று இவர்கள் - தரகர்கள் 'கிளப்பிவிட்டால்' இரும்பு நிறுவனங்களுக்கு அதிஸ்டம்தான். ஒரே நாளில் அவர்களது பங்கு மதிப்பு சந்தையில் பல பில்லியன் கூடிவிடும். எதிர்பார்த்தபடி அந்த நிறுவனங்கள் லாபம் சம்பாதிக்கவில்லை என்றால் அதன் பங்கு மதிப்புகள் மடமடவென சரியும். பங்குச் சந்தைத் தரகர்களின் கூவலை நம்பி பணம் போட்டவர்கள் தலையில் துண்டு மிஞ்சும். அது வேறு கதை.

இப்படித்தான் கச்சா எண்ணெயின் விலையையும் அமெரிக்க-இங்கிலாந்து தரகர்கள் நிறுவனங்கள் ஊகம் கூறியதால் மட்டும் கூட்டிவிட்டுவிட்டன.

குறிப்பாக கோல்ட்மான் சாக்ஸ், சிற்றி குரூப் ( இந்தியாவின் சிற்றி பாங்க்), ஜே.பி. மோர்கன் சேஸ், மோர்கன் அண்ட் ஸ்ரான்லி ஆகிய நான்கு நிறுவனங்கள் தான் கச்சா எண்ணெய் நிறுவனங்களின் பங்குகளில் மிக அதிகமாக முதலீடுகளை தள்ளிவிட்டவர்கள். இந்த நிறுவனங்களை 'financial companies' என்று அழைப்பதற்கு பதில் 'oil traders' என்றே அழைக்கலாம். அந்த அளவுக்கு தங்கள் தொழிலையே கச்சா எண்ணெய்யை சார்ந்து மாற்றி அமைத்துக் கொண்டுவிட்டன.

கச்சா எண்ணெய் விலை கன்னாபின்னாவென உயர்வதற்கு கடவுளைத்தவிர (இருந்தால் நல்லதுதான்) வேறு யாருக்காவது காரணம் தெரியும் என்றால் அது இந்த நான்கு பேராகத் தான் இருக்க முடியும்.

விலை ஏன் உயர்கிறது என்று தெரியாமல் OPEC நாடுகளே திக்குமுக்காடிக் கொண்டிருப்பதும், (அல்லது தெரிந்தும் ஒன்றும் செய்ய முடியாமல் இருப்பதும்) விலை உயர்ந்தாலும் இந்த நாடுகளுக்கு ஒரு சதமும் லாபம் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இன்னொரு உதாரணத்தைப் பாருங்கள். இசுரேலின் உதவி பிரதமர் ஒரு நாளிதழ் நேர்காணலில் நாங்கள் சிலவேளைகளில் ஈரானைத் தாக்கினாலும் தாக்குவோம் என்று கூறியிருக்கிறார். அடுத்தநாளே பங்குச் சந்தையில் எண்ணைவிலை கிடுகிடுவென உயர்ந்துவிட்டது. போர் வந்தால் எண்ணை உற்பத்தி நாடான இரானிலிருந்து எண்ணை வராது என்ற ஊகமே இதற்கு காரணம். இசுரேலின் உதவிப் பிரதமருக்கு குறிப்பிட்ட நான்கு எண்ணை நிறுவனங்களில் ஏதாகிலும் தொடர்பு இருக்குமோ யாமறியோம்.

முன்பே சொன்னது போல பங்குச் சந்தையே ஒரு 'குதிரைப்பந்தயம்' தான். இன்று கச்சா எண்ணெய் விலை என்னவாக இருக்கும் என்று காலையில் பங்குத் தரகர்கள்-நிறுவனங்கள் ஊகத்தை ஆரம்பித்தால் மாலையில் அந்த நிறுவன அதிகாரிகளும் ஊழியர்களும் வீடு போவதற்குள் பெட்ரோலியத்தின் விலை பீப்பாய்க்கு மேலும் சில டொலர்கள் உயர்ந்திருக்கும்.

விலை உயர்வால் நான்கு எண்ணெய் நிறுவனங்களுக்கும் லாபம். விலையைக் கூட்டி விட்ட தரகு நிறுவனங்களுக்கு கொமிஷன்.

இப்படியாகத் தான் (speculative trading காரணமாக) கச்சா எண்ணெய் விலை விண்ணை நோக்கி போய்க் கொண்டே இருக்கிறது. இதை தடுப்பதை விட்டு விட்டு OPEC உடனே எண்ணெய் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்று கோரியுள்ளார் அமெரிக்க எரிசக்தித்துறை அமைச்சர் சாம் போட்மேன்.

எதற்காக கூடுதலாக உற்பத்தி செய்ய வேண்டும்.. அப்படி என்ன திடீரென தேவை அதிகரித்துவிட்டது. உற்பத்தியை அதிகரித்தாலும் எங்களுக்கு என்ன லாபம் என்று கேட்கின்றன எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள்.

உண்மையில் எண்ணை உற்பத்தியை அதிகரிக்கச் சொல்வதுவும் ஒரு தந்திரம். எண்ணை உற்பத்தி அதிகரிக்கப்படத் தேவையில்லை. பங்குச் சந்தையைக் கட்டுப்படுத்தினாலேயே போதும். எண்ணைக்கான தேவை ஒன்றும் திடீரென அதிகரித்துவிடவில்லை. உண்மையில் மக்கள் எரிபொருளைப் பாவிப்பதில் விழிப்புணர்வுடன் இருப்பதால் பாவனை வீதம் குறைந்துள்ளது.

அண்மையில் மத்தியகிழக்கில் எண்ணை விலையேற்றம் தொடர்பான நிதியமைச்சர்களுக்கான மாநாடு நடந்தது. இந்தியாவின் நிதியமைச்சர் (அரசியல்களுக்கு அப்பாற்பட்டு பாராட்டப்படவேண்டிய திறமையான தமிழர்) ப.சிதம்பரம் ஒரு நல்ல கருத்தைக் கூறியிருந்தார்... எண்ணைவிலையினை எண்ணை உற்பத்தி செய்யும் நாடுகளே தீர்மானிக்கின்ற நிலைப்பாட்டை எடுக்கவேண்டும். பங்குச் சந்தைத் தரகர்களுக்கு விலையை நிர்ணயிக்கும் உரிமையைத் தரக்கூடாது

அமெரிக்க எரி சக்தித்துறை அமைச்சரின் கூற்றுக்கும் சிதம்பரத்தின் கூற்றுக்குள் உள்ள வேறுபாட்டைப் பாருங்கள். யாருக்கு உலகத்தின் மீதான மக்களின் மீதான கரிசனம் இருக்கிறது என்பது தெரியும்.

எண்ணெய் விலையை உயர்த்தும் நிதி நிறுவனங்கள்-உற்பத்தி செய்யும் நாடுகளுக்கு இடையில் சிக்கித் தவிப்பது ஒவ்வொரு சொட்டு பெட்ரோலையும் இறக்குமதி செய்து வாழ்ந்து வரும் நாடுகள்.

இந்தக்கதையை எல்லாம் எப்படி பொது மக்களுக்கு புரிய வைப்பது என்று தெரியாமல் அப்பாவி உலக நாடுகள் விழி பிதுங்கிப் போய் நிற்கின்றனர்.

அடுத்த முறை எரிபொருள் நிரப்ப நுழையும்போது இந்த 'பெட்ரோல் கதை'யை ஒரு முறை யோசித்துப் பாருங்கள். இனி அடுத் தெருவுக்குப்போக எல்லாம் காரையோ வானையோ தேடமாட்டீர்கள். அடுத்த வின்ரர் வரும்வரைக்குமாவது...

■ ■ ■

# Bankruptcy in Canada

## கனடாவில் திவால் எவ்வாறு செயற்படுகிறது?



வதனி வசீகரன்
- ஈட்டுக்கடன் முகவர் -
vathanyvasi@thaiveedu.com

அமெரிக்காவைப் போலவே கனடாவிலும் bankruptcy, அதாவது கடன் கட்ட முடியாமல் திவாலாகும் நிலை அதிகமான அளவில் காணப்படுகிறது. இருப்பினும் இரண்டு நாடுகளிடையேயும் இதற்கான சட்டங்கள் பெரிதளவில் வேறுபட்டுள்ளது.

கனடாவில் பங்கிறப்ஸி (திவால்) செயல் முறை நிர்வாகம் ஒரு ரஸ்ரி (Trustee) மூலமாகவே நிர்வாகிக்கப் படுகின்றது. ரஸ்ரி பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவராகவும், பொதுவாகக் கணக்கியல் துறையில் சிறந்து விளங்குபவராகவும் மற்றும் பங்கிறப்ஸி, சட்டம் போன்ற போன்ற துறைகளில் சிறப்புப் பயிற்சி பெற்றவராகவும் இருப்பார். இவரை அனுமதிப் பொறுப்பு (licence) வழங்கி நிர்வாகிப்பது "Superintendent in Bankruptcy pursuant to the Bankruptcy and Insolvency Act" ( Canada).

பங்கிறப்ஸிக்கு விண்ணப்பிக்கும்போது, சில கட்டளைகளை கடன் பெற்றவர் நிறைவேற்ற வேண்டும். அதில் இரண்டு ஆலோசனை வகுப்புக்கள் ரஸ்ரியால் நடாத்தப்படும். இதைக் கட்டாய சட்டமாக 1992ல் கனடாவில் அறிமுகப்படுத்தப் பட்டது. இதில் ஒழுங்கு இல்லாதவர்கள் வங்கிறப்ஸி விடுதலைப்பத்திரம் (Discharge document) பெறமுடியாது, பின்னர் நீதிமன்றம் மூலம் விண்ணப்பிக்கவேண்டும்.

கடன் தொல்லையால் கடன் கொடுத்தவர்களின் தொலைபேசி அழைப்புக்கள், மிரட்டல்கள் கூடும்போது, பொதுவாக பங்கிறப்ஸி பற்றி யோசிப்பார்கள். ஆனால் கடன் தொல்லையில் இருந்து வங்கிறப்ஸி இல்லாமலேயும் விடுபட பல வழிகள் உண்டு.



நீங்கள் வங்கிறப்ஸிக்கு விண்ணப்பிக்கும் போது முதல்முறையாக உங்களைச் சந்திப்பவர் ஒரு ஆலோசகர். இவர் ரஸ்ரி இல்லை, ஆனால் அவரது சார்பாக உங்களுக்கு ஆலோசனை வழங்குவார். இவருடன் உங்களின் நிதி சம்பந்தமான பிரச்சனைகள் அனைத்தையும், உங்கள் உரிமைகளைப் பற்றியும் (rights), பொறுப்புக்கள் பற்றியும் மற்றும் மாற்றுத் தீர்வுகள் (பங்கிறப்ஸி தவிர்ப்பது) பற்றியும் பேசலாம்.

> "கடன் தொல்லையால் கடன் கொடுத்தவர்களின் தொலைபேசி அழைப்புக்கள், மிரட்டல்கள் கூடும்போது, பொதுவாக பங்கிறப்ஸி பற்றி யோசிப்பார்கள். ஆனால் கடன் தொல்லையில் இருந்து வங்கிறப்ஸி இல்லாமலேயும் விடுபட பல வழிகள் உண்டு."

முதலாவது ஆலோசனையின் பின் பாங்-கிறப்ஸி தான் முடிவு எனத் தீர்மானிக்கும் கட்டத்தில் இந்த ஆலோசகர் உங்களு-டைய விண்ணப்பத்தை உள்வாங்குவார். நீங்கள் அடுத்த சந்திப்பு ரஸ்ரியுடன் அமைக்கலாம். ரஸ்ரி உங்களுடைய வங்கிறப்ஸி கோரிக்கையை அனுமதிக்கும் போது, கடன் கொடுத்தவர்களின் தொலை பேசி அழைப்புகள், ஏனைய பிரச்சனைகள் அனைத்தும் நிறுத்தப்படும். ஆனால் தொடர்ந்து 9 மாதங்களுக்கு ரஸ்ரி உங்களை, உங்களுடைய நிதி நிலைமைகளை நிர்வாகிப்பார்.

### ரஸ்ரியால் நடாத்தப்படும் முதலாவது ஆலோசனை வகுப்பு

நீங்கள் பங்கிறப்ஸிக்கு விண்ணப்பித்து சிறிது காலத்தில் இந்த வகுப்பிற்குப் போகவேண்டும். இதை "Consumer and Credit Education" என்று அழைப்பார்கள். இதில் கடன் பெற்று கட்ட முடியாதவர்களுக்கான புத்திமதிகள் வழங்கப்படும்.

### இரண்டாவது ஆலோசனை வகுப்பு

இது விடுதலைப் பத்திரம் ( Discharge document) வழங்குவதற்குச் சிறிது காலம் முன்னதாக நடாத்தப்படும். இதில் கடன் தீர்க்கும் சக்தி பற்றியும், முதல் வகுப்பில் ஆலோசித்தவற்றை கடைப்பிடிக்கும் பாவனை பற்றியும், மேலும் பணத்தை எவ்வாறு நிர்வாகிக்கிறீர்கள் என்பது பற்றியும் ஆலோசிக்கப்படும். இந்த வகுப்புக்கள் ஒவ்வொன்றிற்கும் $85 கட்டணமாக அறவிடப்படும்.

### 9 மாதங்களுக்கு நீங்களும் ரஸ்ரியும்

ஒரு ரஸ்ரியுடன் விண்ணப்பித்ததும் தொடர்ந்து 9 மாதங்களுக்கு நீங்கள் உங்கள் வருமானத்திற்கு ஏற்றவாறு ஒரு தொகையை செலுத்த வேண்டும். இத்துடன் உங்கள் வரவு செலவுத் திட்டம் ஒவ்வொரு மாதமும் அறிவிக்க வேண்டும். அனேகமானவர்களுடைய தவறான அபிப்பிராயம் என்னவென்றால் ரஸ்ரி கடன் பட்டவருக்காக செயற்படுகிறார் என்பது. ஆனால் அது உண்மையல்ல. ரஸ்ரி எப்போதுமே கடன் கொடுத்தவருக்காகவே செயற்படுகிறார்.

### உங்கள் கடன் மற்றும் சொத்துக்கள்

உங்களுடைய அனேகமான சொத்துக்களும், முழுக்கடன்களும் ரஸ்ரியிடம் ஒப்படைக்க வேண்டும். இதில் மிகவும் சிறிதளவான சொத்துக்களை நீங்கள் வைத்திருக்கலாம். வாகனமாக இருந்தால், $5650க்கு குறைந்த பெறுமதியாக இருக்கலாம். மற்றும் உடை போன்றவை $5650உம், சில இயந்திரங்கள் $11,300 உங்கள் வியாபாரத்திற்குத் தேவைப்பட்டால், மற்றும் தளபாடங்கள் $11,300ற்கும், குறிப்பிட்ட சில காப்புறுதிகளும் வைத்திருக்க முடியும். மீதமான ஏனைய சொத்துக்கள் அனைத்தும் உங்களிடம் இருந்து பறிமுதல் செய்யப்படும்.

RRSP மற்றும் Pension plan சிலவேளைகளில் பறிமுதல் செய்யப்பட மாட்டாது. உங்கள் மாத வருமானம் செலவுக்கு முடிய மீதமானால் அதையும் தொடர்ந்து 9 மாதங்களுக்கு ரஸ்ரிக்கு செலுத்த வேண்டும்.

### கடன் கணக்குத் தீர்க்கும் ஸ்தாபனங்கள் (Debt Settlement Company)

பங்கிறப்ஸிக்கு விண்ணப்பிப்பதால் சில பின் விளைவுகள் ஒருப்படுவதால், கடன் தொல்லையில் இருந்து விடுபட கடன் தீர்க்கும் ஸ்தாபனங்கள் இயங்கி வருகின்றன. உதாரணமாக நீங்கள் $10,000 கடன் கொடுக்க வேண்டியிருந்தால், கடன் அறவிடும் நிறுவனம் (Collection Agency) உங்களை தொல்லை செய்யும். ஆனால் கணக்குத் தீர்க்கும் ஸ்தாபனம் இதை நிறுத்தி, உங்களுக்கான பேரம்பேசி, கடனைத் திருப்பிச் செலுத்தும் தொகையைக் குறைத்து, இவர்களின் தொல்லைகளில் இருந்து உங்களை விடுவிக்கும். இச்சந்தர்ப்பத்தில் நீங்கள் செலுத்த வேண்டிய $10,000, $5,000 ஆகக் குறையக் கூடிய சாத்தியமும் உண்டு. இதன் மூலம் நீங்கள் தொகையாகவோ அல்லது 24-36 மாதத்தில் மாதாந்தமாகவோ கட்டி முடிக்கலாம்.

மேலும் எனது கருத்துப்படி ஒன்றுமே இயலாத நிலையில் மட்டுமே பங்கிறப்ஸியை ஆலோசிக்கலாம். ஆனாலும் பங்கிறப்ஸி பற்றி முழுமையான அறிவு இல்லாமல் இதில் இறங்குவது பின்னர் கவலையை ஏற்படுத்தவும் கூடும். பங்கிறப்ஸியானது ஒருவரின் பொறுப்பில்லாத தன்மையை வெளிப்படுத்துவதால் சில வேலைவாய்ப்புக்கள்கூட இழக்க நேரிடலாம், அல்லது திரும்பவும் ஒரு கடன் தேவைப்படும்போது சில சிரமங்களை எதிர்நேக்க வேண்டியிருக்கும். ஆனால் வேலை இழப்பு, சுகயீனம், விவாகரத்து போன்ற வேளைகளில் இது சிலவேளை தவிர்க்க முடியாததாகும்.

■ ■ ■

# காலத்தின் கோலங்கள் - 6

- பொன் குலேந்திரன் -
kulendran@thaiveedu.com

காலத்தோடு, எழுத்துத் துறையில், வசன அமைப்புகளும், கதை, கவிதை, கட்டுரை எழுதும் விதமும், கடைப்பிடிக்கும் யுக்திகளும் மாறி வருகிறது. இது வாசகர்களுடைய இரசனையோடு இணைந்தது. இரசனையும் காலத்தோடு மாறுகிறது. நடை, உடை, பாவனை மாறுவது போல், கல்கி என்று அழைக்கப்பட்ட கிருஷ்ணமூர்த்தியின் கதைகள், கட்டுரைகளில் நகைச்சுவை இழையோடியிருக்கும். அதேபோல், ஈழத்து எழுத்தாளர்களில், மகாகவியைக் குறிப்பிடலாம். ஈழத்தில் பிறநாட்டவர்களின் ஊடுறுவலால் வசனத்தில் பாவிக்கப்படும் சொற்களில் பிறமொழிகள் ஊடுறுவியது.

நம்பினாலும் நம்புங்கள். பழமையில் ஊறிய ஒரு தமிழ்நாட்டு ஐயங்கார் பெண்மணி ஒருத்தி, 80 வருடங்களுக்கு முன்னர், ஐந்து வயதிலேயே பால்ய திருமணம் செய்து, பள்ளிக்கூடத்துக்குப் போகாமலே 115 நூல்களை எழுதினவர். அதில் ஒன்று துப்பறியும் நாவல் என்றால் ஆச்சரியப்படுவீர்கள். 80 துப்பறியும் நாவல்களை எழுதிய அகதா கிறிஸ்டி என்ற ஆங்கிலப் பெண்மணியைப் பற்றி கேள்விப்பட்டிருப்பீர்கள். இப்பெண்மணியும் இந்தக் காலக்கட்டத்தில் தான் வாழ்ந்தார். ஜகன்மோகினி என்ற சஞ்சிகையை 35 வருடங்களாக வெளியிட்டவர் ஐயங்கார் பெண்மணி. 1932ம் ஆண்டு இந்திய சுதந்திர இயக்கத்திற்காகச் சிறை சென்றவர். பெண் உரிமைக்காக வாழ்ந்தவர். கர்நாடக சங்கீதத்தில் புலமை பெற்றவர். இந்த ஆச்சரியத்தைத் தரும் பெண்மணி யாருமில்லை வை.மு. கோதநாயகி அம்மாள் தான். 1901 – 1960 வரை வாழந்தவர். திருவல்லிக்கேணியைப் பிறப்பிடமாகக் கொண்டவர் ஆவர். திருமணமாகும்போது வயது ஐந்து. கணவர் வை. மு பார்த்தசாரதிக்கு வயது ஒன்பது. கணவனினதும், மாமனினதும் உதவியுடன் கோதநாயகி அம்மாள் கற்கத் தொடங்கினாள்.

துப்பறியும் கதைகள் இக்காலத்தில் வெளிவருவது மிகக் குறைவு. குடும்பக் கதைகள் அல்லது காதல் கதைகள் தான் அதிகம். ஆனால் காலத்தோடு பின்னோக்கிச் சென்றால் நிலமை வேறு. தமது துப்பறியும் கதைகளை ஆங்கிலக் கதைகளில் இருந்து தழுவி தமிழில் எழுதினார்கள் ஆரணி குப்புசாமி முதலியார். வடுவூர் துரைசாமி ஐயங்கார் ரங்கராஜு , தேவன் ஆகியோர். 18ம், 19ம் நூற்றாண்டில் எழுதிய வசனங்களுக்கும் தற்காலத்தில் உள்ள வசனங்களுக்கும் பல வித்தியாசங்களுண்டு. இப்பொழுது மக்கள் சாதாரணமாக பேசும் நடையில் வசனங்கள் எழுதப்படுகிறது. கிராமத்துக்குக் கிராமம் இது வேறுபடுகிறது. யாழ்ப்பாணம் குடாநாட்டில் அங்கு வாழும் மக்களின் தொழிலுக்கு ஏற்ப ஊருக்கு ஊர் வித்தியாசமான மொழி பேசப்படுகிறது. இது போன்றே மட்டக்களப்பு, திருகோணமலை, வவுனியா, மன்னார் பகுதிகளில் வாழும் மக்களின் உரையாடலில் வித்தியாசமுண்டு. இந்த வேற்றுமையை தமிழ்நாட்டில் மதுரை, திருநெல்வேலி, கோயம்புத்தூர், கன்னியாகுமரி, தூத்துக்குடி, செட்டிநாடு பகுதிகளில் வாழும் மக்களிடையேயும் காணலாம். சென்னையில் வாழும் மக்கள் பேசும் தமிழ் தமிழாக இருப்பதில்லை, காரணம் தெலுங்கு, மலையாளம், கர்நாடக நாட்டு மக்கள் கலந்து வாழ்கிறார்கள். மொழியும் காலத்தின் விரிவோடு கலந்து விடுகிறது.

இனக் கலப்புத் திருமணம் போல் மொழிகளுக்கிடையேயும் திருமணங்கள் இடம் பெறுகிறது. ஆனால் சடங்குகள் இல்லை. சொற்கள் கலப்பதற்கு எதிர்ப்புகள் குறைவு. இவை நடப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. பலமொழி பேசுபவர்கள் ஒன்றாக வாழும்போது உறவாடுவதன் மூலம் பேசும் மொழிகளும் உறவாடிக் கொள்கிறது. ஆங்கிலேயர் ஒருவர் மண்வெட்டும் தமிழ் விவசாயியைப் பார்த்து “அந்த உபகரணத்தை தா! நானும் வெட்டிப் பார்க்க விரும்புகிறேன்” என்று கேட்டால், அந்த உபகரணத்தின் ஆங்கிலப் பதம் தெரியாத விவசாயி “இந்த மண்வெட்டியையா கேட்கிறீர்கள்?” என்று சொன்னால் உடனே ஆங்கிலேயருக்கு அதன் அர்த்தம் புரிந்துவிடும். ஆமாம், மண்வெட்டித்தான் என்று தனக்குத் தெரிந்த உச்சரிப்பில் சொல்வார். பின் அதற்கு ஏன் அந்தப்பெயர் வந்தது எனபதை அறிந்து அழகான பொருத்தமான சொல்லாக இருக்கிறதே என்று தனது நண்பர்களுக்கு அதை அறிமுகப்படுத்துவார்.

உதாரணத்துக்கு ஈழத்தை போர்த்துக்கேயரும் , ஒல்லாந்தரும், பிரித்தானியரும் 16ம் நூற்றாண்டில் இருந்து 20ம் நூற்றாண்டு வரை ஆண்டதையும், அதற்கு முன்னர் தமிழ்நாட்டு மன்னர்கள் ஆண்டதையும் வரலாறு இயம்புகிறது. அதன் தாக்கமே மொழிக் கலப்பாகும். அக்காலத்தில் ஈழத்து தமிழர்கள் அவ்வினத்தினருடன் கலப்புத் திருமணம் செய்தார்கள், பல வசதிகளுக்காக. அதற்கு மதமாற்றமும், வேலை வாய்ப்பு, இலவசக் கல்வி போன்றவையும் முக்கிய காரணங்களாகும். கலப்புத் திருமணத்தில் பிறக்கும் குழந்தைகள் இரு மொழிகளையும் பேசக் கூடிய சூழ்நிலையில் வாழ்வதினால் பேசும் மொழியில் இரு மொழிக்களினது கலப்பு ஏற்படுகிறது. நாட்டைப் பரிபாலனம் செய்யும் போது நாட்டு மக்களின் மொழியை அறிந்து வைத்திருப்பது அவசியம். அதனால் சில பொதுவான சொற்கள் தமிழுடன் கலந்துவிட்டன. சிங்களத்தில் பெரெரா என்ற பெயர் அதிகமானோர் வைத்துள்ள பெயர். பலருக்கு அதன் அர்த்தம் தெரியாது. பெரெரா என்பது போர்த்துக்கேய மொழியில் கொய்யாப்பழத்தைக் குறிக்கும். அவ்விதம் போர்த்துக்கேய மொழியில் அனேக பெயர்கள் பழங்களையும், பூக்களையும் அடிப்படையாகக் கொண்டவை.

கீழக்கண்ட சுவையான உரையாடலை சற்று உற்று நோக்குவோம்:

“ இஞ்சாரும், அலுமாரிக்கு பக்கத்திலை அலவாங்கு இருக்குது, அதை எடுத்துக் கொண்டு வந்து விராந்தை வாங்கிலை இருக்கிற கந்தனிடம் கொடும்”

“நான் இங்கை அச்சாறு போத்திலிலை போட்டு கொண்டிருக்கிறன், அவன் ரவியிடம் செய்யச் சொல்லுங்கோ”

“அவன் மேசையும் கதிரையுமாக என்னவோ எழுதி தள்ளிக்கொண்டிருக்கிறான். அவனுக்குச் சொல்லி நடக்கப் போவதிலலை. நான் பெட்டிசன் விஷயமாக நொத்தாரிசு நாகலிங்கத்தை பாத்துப் போட்டு கந்தோருக்குப் போக நேரமாச்சு”

“அப்ப கொஞ்சம் பொறுங்கோ. கறியை அடுப்பிலை இருந்து இறக்கி வைச்சுப் போட்டு வாறன். அதுக்கிடையிலை கேத்தி-

60ம் பக்கம் பார்க்க...


CTR
நட்சத்திரப் பெருவிழா
July 12 & 13 2008
CNE
நையாண்டிக் கலக்கல்
மீண்டு எழுவோம்
தாயக வீரவிளையாட்டுகள்
சரித்திர நாடகக் காட்சிகள்
நாட்டுக்கூத்து
Carnival Rides
வானம்பாடிகள்
அக்னி
பாரதி கலைக்கோவில்
கைப்பந்து
வலைப்பந்து
பாரம்பரிய கலைப் பவனிகள்
தாயக உணவு வகைகள்
தமிழறிவுப்போட்டி
ஆங்கில எழுத்துக்கூட்டல் போட்டி
சாகசக்காட்சிகள்
மேடைநாடகம்
நகைச்சுவை நிகழ்ச்சி
முதியோர் நிகழ்ச்சி
EXHIBITION PLACE, TORONTO
404
DVP
427
QEW
வர்த்தகச் சாவடிகளின் பதிவுகளுக்கு
416-264-8798, 416-884-0284
முதன்மை அனுசரணையாளர்கள்
New SpiceLand
416-292-9769
Scarborough, (between Markham & Nellson)
Indran Sweets
416-321-7552
80 Nashdene Rd., Unit# C57 & C58
Scarborough, (between Markham & Middlefield)
Shan's Home Team
Shan Thayaparan
Sales Representative
416-567-7675
416-457-7162
HomeLife GTA
ASIYANS
The one stop shopping centre for the entire family
Tel: 416-438-6568
Jay Brand
Importers of Groceries & Sea Foods
416-724-1067
A 1 Master
COUNTER TOPS INC.
Kitchen and Bath
Over 15 years Experience
Manny - 416-757-2875, 416-726-1850
நிகழ்ச்சி அனுசரணையாளர்கள்
நுழைவுச்சீட்டு அனுசரணையாளர்கள்
BABU Catering
416-298-BABU (2228)
White Pine Inn
You relax in a right place
1-866-796-7333, 705-375-5357
Datta Food Manufactory inc.
416-297-8402
MJS Money Transfer & Fashion
416-335-3100
Lalitha Jewellerys Mart
Ambika Jewellers
Cash Point Mortgages
Tel: 416.284-0005,
Sutha: 416.824-6605
S.K.T
REGINOS Pizza
416-321-6666
www.reginospizza.com


SERANDIBTRAVEL1
AROUND THE WORLD WITH SERANDIB
WITH US YOUR ARE A GUEST NOT A PASSENGER
We don't just sell air line tickets.
we make your trip a comfortable and memorable one.
That is why you should try us First.
Serandib Travel1
For tour packages and more information contact us or vist our website. TICO (retail) #:50012691
Toronto: 416-750-0009, Montreal: 514-448-1389,
Canada wide Toll Free: 1-888-207-0902
serandibtravel1@bellnet.ca www.serandibtravel.com
USA
New York: 716-408-0342
Washington DC: 202-517-0139
Los Angeles: 213-254-0119
New Jersey: 732-783-1513
Detroit: 313-263-0610
Chicago: 312-625-1420
Miami: 305-625-4102
Honolulu: 808-457-1730

# சீனப் பயணக் கட்டுரை



திரு மகேசன்
mahesan@thaiveedu.com

இக்கட்டுரையை எழுதத் தொடங்கும் முன்பாக மனம் ஒரு கணம் நம் மண்ணின் பக்கம் இழுத்துப் போகத்தவறவில்லை. பாடசாலைக் காலத்தில் அழகான COVER போட்டு நமது பாடப்புத்தகங்களை அழகு பார்ப்பது ஒரு வேடிக்கையான சமாச்சாரம். சைக்கிளைத் தள்ளி ஒரு உழக்கு உழக்கி ஸ்ரான்லி வீதியில் அமைந்திருந்த சீனப் புத்தகசாலைக்கு சென்று அங்கே விற்கப் படும் அழகிய சீனப் புத்தகங்களை வாங்கி வந்து நமது புத்தகங்களுக்கு COVER போட்டு அழகு பார்த்தது அந்த அமைதி- யான நாட்கள். அந்த நாட்களிலிருந்தே அந்த சீன அழகுமீது ஏதோ ஒரு பிடிப்பு. சீனா என்றால் இரண்டு எழுத்து என்பதாலோ என்னவோ சின்னதாகவே மனதில் இந்த நாட்டை ஒருநாள் பார்த்துவிட வேண்டும் என்று மனதில் ஒரு ஆசை அன்றே அத்தி- வாரம் போட்டாகிவிட்டது. எங்கே பார்த்தா லும் சிவப்பாக கண்களுக்கு குளிர்ச்சியாக அந்த சீனப் பத்திரிகைகள் பள்ளிக்கூட காலங்களில் எம்மைப் பாடாய்ப்படுத்தி விட்டன. சீன கம்யூனிசப் பிரச்சாரத்திற்கே இவை பயன்படுத்தப்படுவதால் நமது குடும்- பத்தவர்களிடையே நாம் இதனை பள்ளிக் கூட புத்தகங்களுக்கு பாவிப்பதற்கு வீட்டில் பயங்கரத் தடை வேறு.

கம்யூனிச போராட்டத்திற்கு யாழ்ப்பாணத் தில் அவ்வளவு வரவேற்பு இல்லாமலே போய்விட்டது. இறுதியாக ரோகண விஜேவீர தலைமையில் 'சேகுவேரா" இயக்கம் யாழ்ப்பாணத்தில் நடத்திய வேண்டத் தகாத ஆயுதப் போராட்டத்தால் அடிபட்டு அந்த அழகிய சீனப் புத்தகசாலையும் சீல் வைக்- கப்பட்டுவிட்டது. ஆனால் அந்த புத்தகசாலை யில் பார்த்த அந்த சீனத்து அழகுகளை ஒருமுறை பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை என்னவோ மனதில் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டுவிட்டது. போதாத காலத்திற்கு பால்ய கால பள்ளி நண்பர்கள் வேறு சீனா போனால் கட்டாயம் 'ORIGI- NAL NOODLES' வேறு சாப்பிட வேண்டும் என்று அந்த சின்ன வயதிலேயே கனவுல- கில் பயணிக்க ஆரம்பிக்க தொடங்கிவிட்- டார்கள்.

அந்த பள்ளிக்கால ஆசைக்கனவுகளுக்- கெல்லாம் மகுடம் சூட்டுவதுபோல் எனது சென்ற மாத சீன நாட்டுக்கான பயணம் அமைந்துவிட்டது. CATHY PASIFIC விமா- னத்தில் TORONTOவில் புறப்பட்டு ஹொங்- கொங் நாட்டுக்குச் சென்றடைந்தேன். ஹொங்கொங்கிலிருந்து CHINA SOUTH- ERN விமானத்தில் புறப்பட்டு GUANGZ- HOUவைச் சென்றடைந்தேன்.

சீனா என்றவுடன் மாணவப் புரட்சி நடந்த- தும் கம்யூனிச ஆட்சியின் கொடூரத்தையும் நினைத்துக்கொண்டே விமானத்திலிருந்து இறங்கிய எனக்கு திக்கென்றிருந்தது.

GUANGZHOU என்ற இடம் GUANG- DONG என்பதன் தலைநகரம் ஆகும். பல அரசியல் மாற்றங்களை மட்டுமல்ல ஆனாப் பட்ட பிரபலங்களைக்கூட மல்லாக்காய் விழுத்திய இடமும் கூட. எனவேதான் எனக்கு எச்சரிக்கை மணி புறப்படுமுன்பே நண்பர்க- ளால் அடிக்கப்பட்டுவிட்டது. தேவையற்ற விதண்டாவாதங்களில் ஈடுபட வேண்டாம். சீனாவின் அரசியல் பற்றி விமர்சிக்க வேண்டாம் என்று பல எறிவெடிகளை எறிந்து என்னை கலவரப்படுத்தி விட்டிருந்தார்கள்.

KAPOK என்ற மலரே GUANGZHOUவின் நகர மலராகவும் KAPOK மரமே இந்நகரத் தின் நகர மரமாகவும் மதிக்கப்படுகிறது. GUANGDONG மாகாணமானது GUANG- ZHOU நகரத்தின் அழகால், கல்வியால், வர்த்தகத்தால், விஞ்ஞான மேம்பாட்டால் அழகுபடுத்தப்பட்டு மிளிருகின்றது.

GUANGZHOU நகரமானது SOUTH CHINA SEA, HONG KONG, MACAU இவற்றை அண்டிய பக்கமாகவே அமைந்தி- ருக்கின்றது. ZHUJING நதியினது GUAN- GZHOU விஹூடாக ஓடுகின்றது. இந்நதி யானது சீனாவின் 3வது மிகப் பெரிய நதி ஆகும். மாலை நேரத்து மங்கலான சூரிய ஒளியில் பட்டுத் தெறிக்கும் நீர்த்திவலைக ளுக்கு மத்தியில் இறங்கி நிற்பது மெய்- மறக்கவைக்கும் அனுபவமாகும். கூட்டம் கூட்டமாக ஜோடி போட்டபடி இந்நதியோரம் கூடுகின்றனர்.

2870 SQ MILES பரப்பளவை கொண்டது GUANGZHOU 11 மில்லியன் சனத்தொகை என்ற பொழுது 'ஆ' என்று வாயில் கைவைத்துவிட்டேன். இதில் 3.7 மில்லியன் மக்கள் நாளாந்தம் இந்நகருக்கு பயணம் செய்து தமது கடமைகளை முடித்துக்- கொண்டு தமது நகரங்களுக்குத் திரும்பு- கின்றார்கள். சீனா என்ற இரண்டு எழுத்துப் போல் மக்களும் சிறிதாகவே கைக்கு அடக்கமானவர்களாகவே இருக்கின்றார்கள். வர்த்தக அபிவிருத்தியில் இந்நகரமே முதல் நிலை வகிப்பதால் சனத்தொகை அதிக- மாகவே இருக்கின்றது.





HAN NAYUE KING இனது ஞாபகார்த்த நடுகல் அமைந்திருக்கும் தொல்பொருட் காட்சியகமும், ZHENHAI TOWERஉம், SUN YAT – SEN ஞாபகார்த்த மண்டபமும் GUANGZHOU CITYஇன் 2000 ஆண்டு பழமை வாய்ந்த சரித்திரச் சான்றுகளை கட்டியம் கூறி நிற்கின்றன. சீனா என்றால் கம்யூனிச கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் ஒரு வல்லரசு என்ற நினைப்போடு கால் வைத்த எனக்கு தூக்கிவாரிப்போட்டது. அங்கே ஏற்பட் டுக் கொண்டிருக்கும் கலாச்சார மாறுதல் கள் நாம் இங்கே பணத்தை அள்ளிக்கொட்டி வாங்கும் மேற்குக் கலாச்சார ஆடைகள் இங்கே மிக மிக மலிவு விலைகளில் விற்- கப்படுகின்றன. ஒரு விபரம் தெரியாமல் தனியே போய் மாட்டிக்கொண்டீர்களானால் கதை கந்தல்தான். அதுவும் வெளி நாட்டவர் கள் என்றால் தமக்குத் தெரிந்த ஆங்கிலத் தில் வெட்டி விளையாடி நம்மிடம் உள்ளதை கறப்பதிலேயே குறியாக இருப்பார்கள். நிச்சயமாக CANTONESE தெரிந்த ஒரு வழிகாட்டியுடன் தான் SHOPPING போக வேண்டும். வழிகாட்டிகளைக் (GUIDE) கண்டவுடனேயே விலை குறைப்பு செய்து விடுகிறார்கள்.

அதற்கேற்றால்போல்தான் உல்லாசப் பிரயா ணிகளுக்கான வழிகாட்டிகளை பெண்களாக- கவே தெரிவு செய்கிறார்கள். கண்ணைப் பறிக்கும் அழகான வழிகாட்டிப் பெண்கள் உங்களுடன் வழிகாட்டிகளாகவே வருவது பிரயாணக் களைப்பையே போக்கிவிடுமல்- லவா? சரளமாகவே இவர்கள் ஆங்கிலம் பேசுகிறார்கள்.

YUE CAI எனப்படும் CANTONESE சமையல் மூக்கை துளைக்கிறது. பிரபல மான எட்டு CANTONESE CWSINE இங்கே காணப்படுகின்றது. நாம் கனடாவில் சாப்பிடும் CHINESE FOOD என்பது போலியானது. காரணம் இங்கே இவர்கள் உணவுகளுக்கு பாவிக்கும் INGREDIENTS அசலாகவே இருக்கின்றது. கனடாவை விட்டுப் புறப்படும் போது என் நண்பர் சொன்னது போல ORIGINAL NOODLESஐ சாப்பிட்டு பார்த்து விட வேண்டும் என்ற எண்ணம் மனதில் இருந்தது. உண்மைதான் ORIGINAL NOODLES என்பது சுவையே சுவைதான். நினைத்தாலே எப்போதும் வாயூறுகின்றது. என்ன நேர்த்தியான சமையல். அதிலும் பரிமாறும் அழகு இதற்காகவே சீனாவில் தங்கிவிடலாம்.

ஒலிம்பிக் போட்டிகள் நடைபெற இருக்கும் காரணத்தால் மும்முரமாகவே அபிவிருத்தி வேலைகள் சூடுபிடித்துவிட்டன. தாமும் மேற்கத்திய உலகிற்கு சளைத்தவர்களல்ல என்பதைக்காட்ட சீனா தன்னாலான அனைத்து அபிவிருத்தி வேலைகளையும் செய்து கொண்டு இருக்கின்றது.

ஆனாலும் 1989ம் ஆண்டு நடைபெற்ற TIANANMEN SQUARE மாணவப் புரட்சி மனதை உறுத்தவே செய்கின்றது. TIANA- NMEN SQUAREல் காலடி எடுத்து வைக் கும் போது மனதில் ஒரு படபடப்பு கழுகுக் கண்களோடு சாதாரண சீருடை அணிந்த உளவு பிரிவினர் உள்ளே வருபவர்களை கண்காணித்தபடி இருக்கின்றார்கள். அவர்க- ளை படம்பிடிக்க முயலும் போது கையை உயர்த்தி அவர்கள் தடுக்கும் போது தெரி- கிறது அவர்கள் உளவு பொலிஸார். அமைதி யாகவும் அழகாகவும் இருக்கும் TIANAN- MEN SQUARE ல் காலடி வைக்கும் போது மனக்கண்ணில் மாணவர்கள் செய்த புரட்சி தான் தோன்றி மறைகின்றது. ஆனாலும், வாழ்வில் கட்டாயமாகவே ஒரு தடவை நம் கால்தடம் பதியவேண்டிய இடம் TIANAN- MEN SQUARE.

BEIJING மிக மிக கலாச்சாரச் சீரழிவுக்குள் சிக்கிக் கொண்டிருப்பதை உணர முடிகின் றது. நாகரீக வளர்ச்சி உச்சாணிக் கொம்பை தொட்டு நிற்கிறது. DISCO, BAR, போன்ற வை இது சீனாதானா என்ற பயத்தை ஊட்டுகிறது. JULY 13, 2001இல் 2008இற்கான OLYMPIC நடைபெற BEIJING தெரிவு செய்யப்பட்ட பிறகு பாரிய மாற்றங்கள் நிகழ்ந்ததாக வழிகாட்டிப் பெண்மணி சொன்னார். 3000 ஆண்டுகளுக்கு முந்திய கலாச்சாரப் பாரம்பரியத்திற்கு ஆப்பு வைக்கப் பட்டுவிட்டதாக தெரிகிறது. STRIP CLUBகள் கூட சர்வ சாதாரணமாக இயங்கிக் கொண்- டிருக்கின்ற BEIJING இல்.

THE GREAT WALL OF CHINA என்பது மனிதனால் உருவாக்கப்பட்டது என்பதை நம்புவது கடினமே. 7ம் நூற்றாண்டில் (BC) ஆரம்பிக்கப்பட்ட சீனப் பெருஞ்சுவர் 16ம் நூற்றாண்டில் (AD) முடித்துவைக்கப்பட்ட- தாக சரித்திரம். வடக்குப் பகுதியில் இருந்து ஆக்கிரமிப்பு ஏற்படாமலிருப்பதற்காகவே சீனப் பெரும் சுவர் கட்டப்பட்டது. 6700 KM நீளம் என்றால் சும்மாவா? CABLE CAR எம்மை சட்டென்று TOP OF THE WALL இற்கு அழைத்துச் செல்கிறது.

THE FORBIDDEN CITY ஆனது தலை- நகரத்தின் இதயமாகவே அமைந்திருக்கின் றது. THE FORBIDDEN CITY 1406ம் ஆண்டு MING DYNASTY காலகட்டத்தில் கட்டப்பட்டது. இது நகரத்தினுள் அமைந்- திருக்கும் ஒரு நகரமாகும். 9999 அறைகள் 250 ஏக்கர் நிலப்பரப்பில் படர்ந்து கிடக் கிறது. MING இனதும் QING இனதும் இராச்சிய காலத்தில் 24 EMPERORS இந்த நகரத்தை தமது இல்லமாக அமைத்துக் கொண்டனர். THE EMPERORS PALACE தற்போது MUSEUMஆக மாற்றப்பட்டு பேரரசரதும் அவரது அரச குடும்பத்தவரதும் பொக்கிசங்களையும் பாதுகாக்கும் இடமாக பாதுகாக்கப்படுகிறது. PUYI எனப்படும் சீன கடைசி பேரரசர் 1924ம் ஆண்டுவரை THE FORBIDDEN CITYயை தனது அரச மாளிகையாக பாவித்தார்.

SUMMER PALACE எனப்படும் மாளிகை 1750ம் ஆண்டு கட்டப்பட்டது. KUNMING LAKE ஐ நோக்கியபடி அமைந்திருக்கும் இம்மாளிகையின் பரந்த வெளிகளில் தான் அரச குடும்பத்தவர்கள் தமது கோடை விடுமுறையைக் கழித்தனர்.

கல்லினால் கட்டப்பட்ட மிருகங்களும், மனித உருவங்களும் அலங்காரமாக அணிவகுத்து நிற்கிறது. அரசர்களின் மயான பூமியில் இதனை கடந்து சென்றால் மலைப்பாங்கான இடத்தில் 13 பேரரசர்களின் (EMPERORS) புதைகுழிகள் காட்சியளிக்கின்றன. இந்த பேரரசர்கள் MING DYNASTYயை சேர்ந்த வர்களாவர்.

மொத்தத்தில் சொல்லப் போனால், புத்தகங் களிலும், பத்திரிகைகளிலும் பார்த்த சீனக் கம்யூனிசம் வாழும் நாடு என்று சொல்லப்- படும் சீனா கண்களுக்கு மெய்மறக்கும் விருந்தை அள்ளிக் கொட்டிவிட்டது எனலாம்.

அவர்களின் மூன்றடி உயரத்தை பார்த்துச் சிரிக்கும் எமக்கு சீனாவில் சென்று அந்த அழகை நேரில் அனுபவித்த போது இப்படிப் பட்ட ஒரு தரிசனத்தை இவ்வளவு காலமும் பார்க்காது தவறவிட்டுவிட்டோமே என்ற ஏக்கம் மனதை தொட்டது.

சீனப் பெருஞ்சுவரில் தொட்டு அரச பொக்- கிசங்கள் வரை ஆராய்ந்துவிட்டு விமானத்தில் ஏறி TORONTO பயணமானபோது கொம்புத் தேன் குடித்தது போன்ற கிரக்கமாயிருந்தது. அந்த இனிமையான பயண நினைவுகள் மனதை விட்டு மறையாமல் இன்னமும் போட்டுத் தாக்குகிறது என்றால் ஏன் நீங்க ளும் ஒருமுறை சீனா செல்லக்கூடாது.

■ ■ ■

# காலத்தின் கோலங்கள்...

56ம் பக்கம் பார்க்க...

லிலை மேசையிலை கோப்பி இருக்கு ஊற்றி குடித்துப்போட்டு, பிறகு சப்பாத்தைப் போடுங்கோவன்."

" நான் போடுகிறன். நேற்று ஹனிபா காக்கா மகனுக்கு நிக்காஹ் என்று சொல்லிப் போட்டு போனவர். பின்னேரம் எனக்கு நினைப்பூட்ட மறந்திடாதையும். என்ன கேட்குதே?"

இந்த கணவன் மனைவிக்கு இடையேலான உரையாடலில் சில வார்த்தைகள் தமிழுக்குள் பிறமொழியில் இருந்து ஊடுருவி சில மாற்றங்களுடன் பழக்கத்தில் இருந்து வருகிறது. இவை வெளிநாட்டவரின் தொடர்பால் பேச்சுத் தமிழுடன் கலந்தவையாம். முக்கியமாக அலுமாரி, அலவாங்கு, அச்சாறு, மேசை, கதிரை சப்பாத்து போன்ற சொற்கள் போர்த்துக்கேய மொழியில் இருந்து வந்த சொற்கள். கந்தோர், நொத்தாரிசு, கேத்தில் போன்ற சொற்கள் ஒல்லாந்து மொழிச் சொற்கள். அவ்வாரே விராந்தை, நிக்காஹ், கோப்பி, காக்கா போன்றவையும் பிற மொழித் திசைச் சொற்கள்.

தமிழுடன் கலந்த வேறு சில போர்த்துக்கேய சொற்கள் கீழே தரப்பட்டுள்ளன:
அலு கோசு, அன்னாசி, இறாத்தல், கசாது (இது சிங்கள மொழியிலும் ஊடுருவியுள்ளது), கரத்தை ( மாட்டு வண்டில்), கிறாதி, கொய்யா, கோப்பை, சலாது, சாவி, சிப்பம், சீமேந்து, தவறணை, பட்டாசு, பட்டாளம், பாதிரி, பிட்டிசம், யன்னல், வாங்கு, வாத்து, வசுக்கோத்து, வின்னாகிரி.

தமிழுக்குள் இச்சொற்கள் புகுந்த மாதிரி போத்துக்கேய மொழிக்குள்ளும் தமிழ் சொற்கள் ஊடுருவி இருக்கலாம். ஆங்கில அகராதியில் பல தமிழ்ச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. உதாரணத்துக்கு, மிளகு தண்ணி ( Mulligatawny), கஞ்சி ( congee) கட்டில், இராஜா, குரு ( Guru), கறி ( Curry), கட்டுமரம் (Catamaran) கூலி (Cooli), போன்றவையாம். அணைக்கட்டு என்று தமிழ் சொல்லில் இருந்தே Annicut என்ற ஆங்கிலச் சொல் பிறந்தது. இவ்வாறு ஆங்கிலத்துடன் தமிழ் சொற்கள் கலந்தது போல் தமிழிலும் பல ஆங்கிலச் சொற்கள் கலந்துள்ளன: உதாரணத்துக்குச் சில, கீழே தரப்பட்டுள்ளன.

ஏக்கர், சூப்பு , பென்சில், மார்க்கட், யார், வத்தை, பெனியன் போன்றவையாம். இக்கலப்பு ஏற்படுவதற்கு இந்தியாவிலும், ஈழத்திலும் நடந்த பிரித்தானியர் ஆட்சியே முக்கிய காரணமாகும். பரிபாலான அதிகாரிகள் பலர் தமிழ் பகுதிகளில் கடமை புரிந்ததினால் இச்சொற்கள் தமிழுடன் கலந்திடக் காரணமாக இருந்திருக்கலாம். வற்புறுத்தல் நிமித்தமோ அல்லது சௌகரியத்திற்காகவோ அவை சேர்க்கப் பட்டிருக்கலாம். ஒரு சொல் திரும்பித் திரும்பி பாவிக்கப்படும் போது பலர் மனதில் அச்சொல் பதிந்து விடுகிறது. பின்னர் இலகுவாக அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. புதுச்சொல்லாக இருப்பதினால் புதுத் துணியை அணிவது போல் பலரால் விரும்பி பாவிக்கப்படுகிறது. உதாரணத்துக்கு, "கூலி" என்ற சொல்லும் "குரு" என்ற சொல்லும் உச்சரிப்பதற்கு இலகுவான சொற்கள். அதனால் ஆங்கில மொழியில் அதிகமாகப் பாவிக்கப்படுகிறது. அக்காலத்தில் பல கூலி வேலைசெய்பவர்களை பிரித்தானியர், இலங்கை, மேற்கிந்தியத் தீவுகள், கிழக்கு ஆபிரிக்கா, மலேசியா போன்ற இடங்களுக்குத் தோட்டங்களில் வேலை செய்யவும், பாதைகள் அமைக்கவும் அனுப்பினார்கள். அதனால் அப்பெயர் பிரபல்யமானது. இப்போது கணனித் துறையில் குரு என்ற சொல்லுக்கு நல்ல மதிப்புண்டு. கணனியைப்பற்றி முற்றும் அறிந்தவர் என்பதை அது குறிக்கும்.

தென்னிந்திய சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் இலங்கையை ஆண்ட போது வந்து குடியேறிய வன்னியர்களும், பரவர்களும், துலுக்கர்களும், நாயக்கர்களும் சிங்கள இனத்துடன் கலந்ததினால் மொழிக் கலப்பு ஏற்பட்டது. ஏராளமான தமிழ் சொற்கள் சிங்கள மொழிக்குள் ஊடுறுவி ஆட்சி புரிகிறது. "சிங்கள உரிமைய", "ஜாதிக்க விமுக்தி பெரமுனை: போன்ற தமிழ் துவேசம் உள்ள அரசியல் கட்சிகளின் பெயர்களில் கூட தமிழ் புகுந்து விளையாடுகிறது. உரிமை என்ற தமிழ் சொல்லுக்கு ஒரு "ய" என்ற வார்த்தை யைச் சேர்த்தவுடன் சிங்கள சொல்லா-கிறது. ஜாதியுடன் "க" என்ற வார்த்தையை சேர்த்தவுடன் ஜாதிக ஆகிவிடுகிறது. அது மட்டுமா? பண்டார நாயக்கர் என்ற பெயர் கூட பண்டாரநாயக்கா ஆகி உச்சரிப்பில் சிங்களப் பெயராக மாறிவிடுகிறது. இப்படி இராஜசிங்கன், விக்கிரமசிங்கன், விஜய வீரன், குணரத்தினம், இராஜரத்தினம், கனகரத்தினம் போன்ற தமிழ்ப்பெயர்கள் கூட சிங்கள உருவம் எடுத்துவிட்டன. போர்த்துக்கேய ஆட்சியினால் சில்வா, சொய்சா, பெர்ணாந்தோ, மெண்டிஸ், பீரிஸ். பெரெரா, போன்ற போர்த்துக்கேய பெயர்கள் மதமாற்றத்தினால் தோன்றிவிட்டன. ஒரு காலத்தில் சமஸ்கிருத சொற்கள் தமிழுக்குள் புகுந்து விளையாடியது போன்று தமிழ் சொற்கள் சிங்கள மொழியை ஆட்சி புரிகிறது என்று சொல்வதில் பிழையில்லை. ஊர்ப் பெயர்கள் கூட அப்படித்தான். வில்லு என்பது தமிழில் குளத்தைக் குறிக்கும். அதுவே வில்லுவ எனச் சிங்களத்தில் அழைக்கப்படுகிறது. "துறை" என்பது தமிழுக்கும், சிங்களத்திற்கும் பொதுச் சொத்தாகிவிட்டது.

அரேபிய சொற்களும் இலங்கைக்கு அரேபிய வணிகர்களின் வருகையால் தமிழுக்குள் புகுந்து விட்டது. ஆனால் இச்சொற்கள் ஊருக்கு ஊர் வித்தியாசமானது. சில சொற்கள் பொதுவானவை. உதாரணத்துக்குச் சில:
செய்த்தான், கபீர், ஆலீம், காக்கா, ராத்தா, உம்மா, வாப்பா, மவுத்து(இறப்பு), ஹராம், நிகடகாஹ் ஆகியவையாம்.

தமிழுக்கும் மளையாளத்திற்கும், அரேபிய மொழிக்கும், உருது மொழிக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு போல் இறுக்கமான தொடர்புண்டு. காரணம், சேர மண்டலத்துக்கும், சோழ மண்டலத்துக்கும், பாண்டிய மண்டலத்துக்கும் இடையே நிலவிய திருமண உறவாகும். திராவிட மொழிகளான தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் எல்லாம் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை. தம்பிப்பிள்ளை, கணபதிப்பிள்ளை, சுந்தரப்பிளளை என்று முடியும் பெயர்கள் கூட பிள்ளை என்ற மலையாளத்தைச் சேர்ந்த பிள்ளை இனத்துடன் இணைந்தவை என்பது மொழியியலாளர் கருத்து. கேரள வீரர்கள் யாழ்ப்பாணத்தில் அக்காலத்தில் வாழ்ந்ததே இதற்கு முக்கிய காரணமாகும். காலத்தோடு உரையாடல் பெயர்களும் மாற்றமடைகிறது, பிறநாட்டவர் வருகையால்.

■ ■ ■

**தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.**

E-mail:thaiveedu@gmail.com
Fax: 416-849-0594
Tel: 416-646-3422

# யோகம் தரும் ஆரோக்கிய ரகசியம்




**N.T. கருணாகரன்**
- யோகா ஆசிரியர் -
ntkaruna@thaiveedu.com


ஆரோக்கிய ரகசியம் - 6

### பத்மாசனம்

மலர்களில் சிறப்பான இடம் தாமரை மலருக்கு இருப்பது போல் கதயோகத்தில் தாமரை ஆசனத்திற்கு பல சிறப்பம்சங்கள் உண்டு. (பத்மம் =தாமரை) இவ் ஆசனத்தில் அமர்ந்து இருக்கும் போது ஓர் உன்னத மான அழகு அனைவரிலும் ஒழி விடும்.

### பத்மாசனம் (தாமரை இருக்கை)

விரிப்பில் நேராக நிமிர்ந்து இருக்கவும். ஆழமாக மூன்று முறை மூச்சை உள் இழுத்து வெளி விடவும்.

பின் வலது காலை மடித்து இடது தொடை-யில் வைக்கவும். வலது குதிக்கால் வயிற்றை தொட வேண்டும்.
*(படம் 1ஐ பார்க்கவும்)*

அதன் பிறகு இடது காலை மடித்து வலது தொடை மேல் வைக்கவும். இதிலும் இடது குதி வயிற்றில் தொட்டபடி இருக்கும். கை களை நீட்டி முழங்கால்களிலும் முத்திரை யுடன் வைக்கவும்
*(படம் 2ஐ பார்க்கவும்)*

நேராக நிமிர்ந்து இருக்கவும். முதுகுத் தண்டு, கழுத்து, தலை ஆகியவை நேர் கோட்டில் இருக்குமாறு நிமிர்ந்து இருக்கவும்.
*(படம் 3ஐ பார்க்கவும்)*

இப்பயிற்சியில் 5 தொடக்கம் 20 நிமிடம் வரை இருக்கலாம்.

ஆரம்ப சாதகர்கள் எடுத்த எடுப்பில் அதிக நேரம் இருக்காமல் சிறுக சிறுக நேரத்தை அதிகரிக்கலாம்.



படம் 1



படம் 2



படம் 3

*இப்பயிற்சியில் கால்களில் விறைப்பு ஏற்பட் டால் உடனடியாக பத்மாசனத்தை விலக்கி விடவும்.*

*மற்றும் அமர்ந்து இருக்கும் விரிப்பை மிகவும் மென்மை உடையதாக வைத்திருக்கவும்.*

### பத்மாசனத்தின் பயன்கள்

- மாணவர்கள் முதல் பெரியோர்வரை அனைவரும் பயிலலாம்.
- உடலில் புத்துணர்வும் மென்மையும் தோன்றும்.
- மனம் ஆழ்ந்த அமைதி அடையும்.
- மூளையின் அல்பா (Alpha) அலைகள் இயற்கையாகவே தோற்றுவதால் தியானம் மற்றும் பிரார்த்தனை செய்ய அருமை யான இருக்கை இருவாகும்.
- இரத்த சுற்றோட்டம் கால்ப்பகுதிக்கு அதிகம் செல்லாது பந்தம் ஏற்படுவதால் உடலில் ஏனைய பிரதான கருவிகளால் மூளை, இதயம், நுரையீரல் போன்ற அனைத்தும் அதிக இரத்த சுற்றோட்டத் தை பெற முடிவதால் அதிக பிராண சக்தியைப் பெற்று ஆரோக்கியமும் புத்-துணர்வும் நீண்ட ஆயுளையும் பெறும்.
- பத்மாசனத்தில் இருந்து நாடிசுத்தி (பிராணாயாமம்) செய்தால் நுரையீரல் நன்கு விரிவடைந்து மூச்சுப்பயிற்சி முறைமை பெற வழிவகுக்கும்.
- அதிக களைப்பு, மனக்கவலை, மன அழுத்தம் போன்ற மன ரீதியான பிரச்ச னைகள் உள்ள போது பத்மாசனத்தில் சிறிது நேரம் இருந்தால் மனம் அமைதி-யாகி புத்துணர்வு ஏற்படுவதை நீங்கள் அனுபவமாக உணரலாம்.

அருட்கவி திருமூலர் பத்மாசனத்தை பற்றி இப்படி கூறுகிறார்.

**ஓரணை அப்பதம் ஊருவின்மேல் ஏறிட்டு**
**ஆர வலித்து அதன் மேல் வைத்து**
**அழகுறச் சீர்திகழ் கைகள் அதனைத்**
**தன் மேல் வைக்கப் பார்த்திகள்**
**பத்மாசனம் என லாகுமே**

திம் 559

இவ்வாறு பெரும் சிறப்புகள் பொருந்திய தாமரை இருக்கையை பயின்று பார்த்திகழும் உன்னத வாழ்வை அடைவோம்.

■ ■ ■

நன்றி.

# சாதகக் குறிப்பும் கடன் குறிப்பும்

- கல்யாணி நாதன் -
kalyany@thaiveedu.com

நம்மவர்களிடம் திருமணம் என்ற பேச்சை எடுத்தவுடன் முதல் பார்ப்பது குறிப்புப் பொருத்தம். குறிப்புகள் பொருந்தினால் தான் மற்றப் பேச்சுகள் யாவும். கல்யாணத் தரகர்கள் சிலவேளைகளில் இந்த குறிப்பு களில் மாற்றங்கள் செய்தும் திருமணத்தை நடத்திவிடும் நிலை இருப்பதனால், பிள்ளை களின் பெற்றோர் மற்றவர் குறிப்பை பெற்றுக்கொள்ளாமல் தமது பிள்ளைகளின் குறிப்பை கொடுக்க மறுத்துவிடுவார்கள். இதில் சுவையான விடயம் என்னவெனில் தமது தலைவிதியை தீர்மானிக்கும் இந்த சாதகக் குறிப்பின் குறியீடுகளை ஒருவருமே புரியமுயல்வதில்லை. பொதுவாக சாதக கணிப்பாளர்கள் உதவியை நாடியிருப்பார் கள். இந்த சிறு சாதகக் குறிப்பை கொடுத் தால் கணிப்பாளர் அறுபது எழுபது வருடங்-களுக்கான எதிர்கால விளைவுகளை விரிவு படுத்தி ஒரு சாதகத்தை வேறு எழுதி விடுவார்கள். இந்த சாதகக் குறிப்பில் இன்னும் ஒரு சுவையான விடயம் குறிப்பைப் பெறும் வேளையில் பிறந்த நேரத்தையும், இடத்தையும் கேட்டுக்கொண்டு இந்த குறிப்பு உண்மையானதா என தமது கணிப்பாளரை கொண்டு தெவிவு செய்வார்கள்.

இதேபோன்றதே கடன் குறிப்புப் படிவமும். (Credit report) மேற்கு நாடுகளில் வதியும் எல்லாருமே பல வகையான கடன்களைப் பெற்றுத்தான் வாழ நிர்ப்பந்திக்கப்பட்டுள்-ளார்கள். கடன்பட்டார் நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன் என்றார். அப்படியானால் இங்கு உள்ளவர்கள் அனைவருமே கலங்கிப்போய்தான் இருக்க வேண்டும். அதனால் தான் இரத்த அழுத்த வியாதியும், சர்க்கரை வியாதியும் மாரடைப்பு வியாதியும் கொஞ்சம் அதிகமாகவேயுள்ளது போலும். இப்படி எமது வாழ்க்கையின் போக்கையே நிர்ணயிக்கும் இந்த கடன் குறிப்பை பற்றி சற்று தெரிந்து வைத்திருந் தால் நல்லதல்லவா?

### கடன் குறிப்பு

கடன் குறிப்பு என்பது (Credit report) உங்கள் கடன்கள் பற்றிய விளக்கமான ஆவணமா-கும். கடன் குறிப்பு எப்படி பாவனைக்கு வந்தது என்று முதல் பார்ப்போம். மாடு மேயப்போன வழியால் மனிதன் நடந்து பின் மனிதன் நடந்த நடைபாதை வழியே வண்டில் கள் போய், அடுத்து வண்டில்கள் போன பாதையில் வாகனங்கள் போய் பாதையா னது போல்தான் இந்த கடன் குறிப்பு ஆவணமும் தோன்றியது எனலாம்.



ஆரம்பத்தில் வங்கி தோன்றுவதற்கு முன் கடன்கள் வைத்திருந்த வியாபாரிகள் வாடிக்கையாளர்களின் அவசர தேவைக-ளுக்கு வட்டிக்கு கடன் கொடுத்தார்கள். இப்படி கடன் கொடுப்பவர்கள் அக்கடன் களை சிறு சீட்டுகளில் குறித்து வைத்திருந் தார்கள். காலப்போக்கில் வேறு சிலரும் கடன் கொடுக்க முன்வந்த வேளையில் கடன் பெறுபவரின் தகைமை, நாணயம் என்பவற்றை தெரிந்து கொள்வதற்கு கடன் உரிமையா-ளர்கள் இக்குறிப்புகளின் விபரங்களை நாட முற்பட்டார்கள்.

ஒவ்வொரு வியாபார நிலையமாக அலை யாமல் அவற்றை ஓரிருவர் சேகரித்து ஒரு இடத்தில் மையமாக வைக்க முற்பட்டார் கள். இவர்களே பிற்காலத்தில் உள்ள Credit Bearu முன்னோடிகள்.

விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சி காரண-மாக சாதகக் குறிப்புப்போல அல்லாமல் கடன் குறிப்புகள் பல வளர்ச்சியடைந்து இன்று பல பயன் உள்ள தகவல்களை நுகர்வோர்களுக்கு தருகிறது. சாதகக் குறிப்பில் ஒன்பது கிரகங்களும் பிறக்கும் போது எந்த வீட்டில் இருக்கிறது என்ற தகவலைத் தரும். ஆனால் கடன் குறிப்பு ஒன்பது தகவல்களை தருவதாயிருக்கும்.

தகவல் பெறப்படுபவரின் பெயர், விலாசம் ஆகியவற்றுடன் பிறந்த திகதி அவரது சமூக காப்புறுதி எண் ஆகியன தரப்படும். கடைசி ஆறு வருடங்களில் வேலை செய்த அமைப்புகளின் விபரம் தரப்படும்.

- நீங்கள் கடன் பெறுவதற்கு கடைசி ஆறு வருடங்களில் விசாரித்த கடன் கொடுப்ப-னவாளர் பட்டியல் தரப்படும்.
- இப்போது உள்ள கடன்கள், கடனட்டை விபரங்கள், வியாபார ஸ்தாபன அட்டை கள் ஆகியவற்றின் விபரங்கள் தரப்பட்-டிருக்கும்.
- உங்கள் கணக்குகள் எப்போ ஆரம்பிக் கப்பட்டது, எவ்வளவு கட்டுத்தொகை கொடுக்கப்பட்டது ஆகிய விபரங்கள்.
- உங்கள் கடன் குறிப்பைப்பற்றி விசா-ரித்த அமைப்புகளின் விபரங்கள்.
- நீங்கள் செய்துகொண்ட வங்குரோத்து கள் (Bank reply)சட்ட தீர்வுகள், கடனற-விடுவோர் (Collection agency) ஆகியவற்-றின் விபரங்கள்.
- நீங்கள் பதிவுசெய்த விளக்கங்கள், அதா வது நீங்கள் சுயமாக ஏதாவது காரணத் தால் தவறுதலாக (வீட்டில் சுகயீனம் அல்லது மரணம்) கட்டுவதில் தாமதம் ஏற்பட்டால் அதனை பதிவு செய்யலாம்.
- உங்கள் கடன் சுட்டு எண்.

எனவே சாதகக் குறிப்பில் ஒன்பது கிரகங் கள் போல் இங்கு ஒன்பது விபரங்கள் கடன்குறிப்பில் தரப்படும். இவற்றைக் கொண்டு உங்கள் நாணயத்தை மதிப்பிடு-வார்கள்.

இந்த கடன் குறிப்பை யார் யார் பார்வை யிடலாம் என்று முதலாவதாக நீங்கள்

67ம் பக்கம் பார்க்க...

## துயர் பகிர்வோம்



### திருமதி. லூர்தம்மா வேலாயுதம்பிள்ளை

(ஆசிரியை)

நெடுந்தீவை பிறப்பிடமாகவும், கிளிநொச்சி, அக்கராயனில் வசித்தவரும், தற்போது இந்தியாவில் வசித்து வந்தவருமான திருமதி. லூர்தம்மா வேலாயுதம்பிள்ளை (ஆசிரியை) அவர்கள் ஜுன் 16ந் திகதி இந்தியாவில் இறைபதம் எய்தினார்.

அன்னார் திரு. கார்த்திகேசு வேலாயுதம்பிள்ளை (ஆசிரியர்) அவர்களின் அன்பு மனைவியும், சவரிமுத்து, அக்கினேசம்மா ஆகியோரின் அன்பு மகளும், கார்த்திகேசு, செங்கமலம் ஆகியோரின் அன்பு மருமகளும், அந்தோனிப்பிள்ளையின் (சிவஞானம்) அன்புச் சகோதரியும், கணபதிப்பிள்ளை, தையலம்மை ஆகியோரின் அன்பு மைத்துனியும், விமலா, பத்மா, குகன், வரதன், வினோதினியின் பாசமிகு தாயாரும், சோமசுந்தரம், குணமணி, பத்மா ஆகியோரின் அன்பு மாமியாரும், அந்தோனிமுத்து, இராணி ஜெயரத்தினம் ஆகியோரின் சகோதரியும் ஆவார்.

| | |
|---|---|
| வேலாயுதம்பிள்ளை | 011 91 994 049 0553 |
| பத்மா வேலாயுதம்பிள்ளை | 416 628 5149 |
| இராணி ஜெயரத்தினம் | 416 618 4555 |
| ரூபன் இராமநாதன் | 416 834 6130 |



### திரு கார்த்திகேசு கணபதிப்பிள்ளை

நெடுந்தீவை பிறப்பிடமாகவும், கலட்டி (யாழ்ப்பாணம்), வட்டக்கச்சி ஆகிய இடங்களை வசிப்பிடமாகவும், தற்போது கனடாவில் வசித்தவருமாகிய கார்த்திகேசு கணபதிப்பிள்ளை அவர்கள் ஆடிமாதம் 2ம் திகதி, ரொறன்ரோவில் காலமானார்.

அன்னார், காலஞ்சென்ற அம்பலவாணர் கார்த்திகேசு கதிரேசபிள்ளை அவர்களின் அன்பு மூத்த மகனும், யாதவராயர் பார்வதி தம்பதிகளின் அருமை மருமகனும், வள்ளிப்-பிள்ளையின் அன்புக் கணவரும், ஸ்ரீகாந்தி, ஆசிரியர் விக்னேஸ்வரன் (பவன்) (ஸ்டார் சவுண்ட்), உமாகாந்தி ஆகியோரின் பிரியமுள்ள தந்தையும், சதாசிவம் (ஜெட் ட்ராவல்ஸ்), பரமேஸ்வரி, ஜஸ்டின் ஜெயகுமார் ஆகியோரின் அன்பு மாமனாரும், காலஞ்சென்றவர்களான நாகமுத்து, சேதுப்பிள்ளை, வள்ளியம்மை, நாகமணி, அம்பலவாணர் ஆகியோரதும், நாகலிங்கம் (கனடா), சின்னம்மா, பசுபதிப்பிள்ளை (உருத்திரபுரம்) ஆகியோரின் சகோதரரும், காலஞ்சென்றவர்களான நாகநாதன், பசுபதி, கணபதிப்பிள்ளை, சின்னம்மா (யாழ்ப்பாணம்) ஆகியோரின் மைத்துனரும் ஆவார்

| | |
|---|---|
| சிவம் ஸ்ரீகாந்தி | 416 854 8400 |
| விக்னேஸ்வரன் | 647 898 7422 |
| ஜெயக்குமார் உமா | 416 302 5628 |

# CTR தகவல் பலகை

## ROOMS / BASEMENT RENT

**Brimley/Lawrence**
647 502 7163 / 647 341 3979

**Birchmount/Finch**
Condo வாடகைக்கு
416 451 7934

**Neilson/Sheppard**
ரஞ்சி 416 724 7594
416 706 7594

**Lawrence/Orton park**
ராசநாயகம்
416 289 1951

**Brampton**
பகுதியில் வாடகைக்குத் தேவை
தேவி 905 494 0220

**Markham / Steel**
Basement வாடகைக்கு
கணேஸ் 416 786 5145

**Middlefield / Finch**
1 bedroom+ den Condo
சுகந்தி 905 604 0145

**GTA Square**
கட்டிடத்தில் கடை விற்பனைக்கு
குமார் 416 885 9556

**Yonge/Finch**
பாபு 416 818 2019

**Markham / Steele**
1 bedroom basement வாடகைக்கு
மணி 416 917 8336

**Clothing Sale**
பெண்களுக்கான இந்தியாவில் இருந்து
தருவிக்கப்பட்ட உடைகள்
விற்பனைக்கு உண்டு
பாலமுரளி 416 454 2580

**India**
தமிழ்நாட்டில் திருவான்மியூரில் வீடு
வாடகைக்கு உண்டு.
குறுகியகால வாடகைக்கு தரப்படும்
வசந்தி ராஜா 416 454 2580

**Eglinton/Donmills**
3 Rome Condo விற்பனைக்கு உண்டு
சபா 416 538 3589 / 905 780 6911

**Mclevin/Neilson**
2+1 Bedroom.
சுதா 416 283 0312/647 284 1173

**DONMILLS & FINCH**
1 B/Room Basement for Rent
Call: 416 756 4365

**BRIMLEY & LAWRENCE**
2 B/Room, 11/2 W/R
416 265 3352 / 416 704 8534

## AUTO

**2002 – Toyota Sisly Car**
416 836 9355

**2000 Honda Odessey Van**
சுரேஸ் 416 271 7580

## OTHERS

**Electronic Baby room**
பொருட்கள்
416 400 2222

**Help Wanted**
Italy Restaurant - Pizza Maker
கணேசன் - 905 805 3519

**Computer Teacher**
தேவை
416 898 7811

**வகுப்புகள்**
சிறுவர்களுக்கான உதைபந்தாட்டப் பயிற்சி
வகுப்புகள்.
வினோதன் - 416 873 2148
416 638 1954

**ஆசிரியர் தேவை**
Richmount Hill பகுதியில் எட்டாம் வகுப்பு
மாணவர்களுக்கு கற்பிக்க
- 905 770 3737

**Paint**
வீடுகளுக்கு வண்ணம் பூசி அழகு படுத்த
ஜுவா 416 828 5745/ 416 754 2096

**Pizza Delivery**
வேலைக்கு 416 917 8336

**Wedding Birthday Cake**
செய்து கொடுக்கப்படும்
விமல் 416 752 2073

**Teacher**
Scarborough வில் கணிதம், ஆங்கிலம்,
தமிழ் கற்பித்துக் கொடுக்கப்படும்
சபரிமுத்து 416 282 0951/ 416 570 6920

CTR
கனடியத் தமிழ் வானொலி
416 264 8798

**Help Wanted**
இத்தாலியன் உணவகத்திற்கு
வேலையாட்த் தேவை – 416 799 6318

**DAY CARE FOR KIDS**
**SWING WORK AVAILABLE**
416 431 8655

**TV REPIRE**
Call: 905 472 2534

**TUITIONS /TRANSLATION**
416 282 0951 / 416 570 6920

**TUITION CLASS**
Middlefield & Finch
Tuition Class for Student
Call: 416 830 7078 / 416 609 9043

**YOGA**
Birchmount & Eglinton)
Yoga (Thiyanam) Class (Free)
Call: 416 642 4883

**plants sale**
**மரங்கள், சிறு கன்றுகள்**
சாந்தி 905 201 9116

# அனலைதீவு வாழ்வும் வளமும் வரலாற்று நூல் வெளியீட்டுவிழா

கடந்த ஞாயிறு 29ம் திகதி இந்நூல் மிகுந்த வரவேற்புடன் வெளியிடப்பட்டது. 400க்கு மேற்பட்ட பக்கங்கள், பெருந்தொகையான வர்ணப்புகைப்படங்கள், 300க்கு மேற்பட்ட ஆண்டுகால சம்பவங்கள், பாடசாலைகள் பெரியார்களைப்பற்றிய விபரங்கள் கொண்ட வரலாற்றுநூல் இது

பிரதம விருந்தினராக திரு காசிலிங்கம் (முன்னைய ஈழநாடு பத்திரிக்கையாசிரியர்) பாரிஸில் இருந்து வந்திருந்தார். சிறப்பு விருந்தினராக திரு செல்லையா (RTD PHI) லண்டன் மாநகரிலிருந்து வந்திருந்தார். மற்றும் நம் உள்ளூர் அறிஞர்கள், அபிமானிகள் நூற்றுக் கணக்கில் கலந்து கொண்டனர்.

திரு சாமி அப்பாத்துரை, திருமதி வசந்தா நடராஜன், லோகன் கணபதி, சிவவிநாயகமூர்த்தி, பாராளுமன்ற உறுப்பினர் JIM, கரு கந்தையா, அவர்களது பேச்சைக் கேட்டுக்கூடியதாக இருந்தது.

பிரதம நூலாசிரியர் திரு பெ.துரைராஜா அவர்களின் இந்த அரிய நூலாக்கத்திற்கும், அதற்கு உதவிபுரிந்த நூலாக்கக்குழுவுக்கும் பலரும் விழாவில் பாராட்டுத் தெரிவித்ததைக் காணக்கூடியதாக இருந்தது.

மாலை 6.00 மணியளவில் ஆரபித்த விழா நூல் பிரதிகள் வழங்கிமுடிந்து 10.30 க்கு முடிவடைந்தது.

முதற்பிரதி திருமதி தங்கம்மா கனகசபையும் அடுத்த பிரதியை திரு ரஜீவ்கரன் (RJ multi litho printing)ம் பெற்றுச் சிறப்பித்தார்கள்.



# சாதகக் குறிப்பும்...

65ம் பக்கத் தொடர்ச்சி...

கேட்டால் அவர்கள் உங்கள் கடன் குறிப்பை தருவார்கள் என்பது மட்டுமல்ல தரக் கடமைப்பட்டவர்களாயுள்ளார்கள். காலத்துக்குக் காலம் நீங்கள் இதில் ஒரு கண் வைத்திருப்பது உங்கள் அனுமதி இல்லாமல் மற்றவர்கள் இதில் பதிவுகள் செய்வதனை தடுக்கலாம்.

இந்த கடன் குறிப்பை வைத்திருக்கும் ஸ்தாபனத்தில் (Credit Bear)அங்கத்தவராக உள்ள அமைப்புகள் இந்த குறிப்பை பெறலாம். ஆனால், ஒரு நிபந்தனை உண்டு. உங்கள் அனுமதியை முதல் பெறுவதவசியம். மேலும் இவை பெறுவதற்கு கீழ் தரப்பட்ட ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும்.

- கடன் கொடுப்பதற்கு முடிவெடுப்பதற்கு
- கடன் அறவிடுவதற்கு
- வீடு அல்லது apartment வாடகைக்கு விடுவதற்கு
- வேலைக்கு சேர்ப்பதற்கு
- காப்புறுதி செய்வதற்கு

இந்த கடன் குறிப்புடன் தொடர்புடைய இன்னுமொரு விடயம் கடன் தகைமை. (Credit rating) இத்தகைமை எண்கள் RO முதல் R9 வரை வேறுபடலாம். RO எனில் அவர்தகைமை இல்லாதவர். அதாவது (R=Rating) அவர் கடன் எடுத்த அனுபவம் இல்லாத ஏமாளி. இதனால் தான் பாவிக்காவிடினும் கடனட்டைகளை அட்டை போல் ஒட்டிக்கொள்ள அறிவுரை கூறுவார்கள். R9 தகைமை உடையவர் என்றால் அவருக்கு கடன் கொடுத்தால் தலைக்கு துண்டைப் போட்டுவிட்டு ஆலமரத்தடியில் குந்த வேண்டியதுதான். காரணம் அவர் திருப்பிச் செலுத்த மாட்டார். இனி R1 முதல் R8 வரை நீங்கள் எவ்வளவு காலத்தில் பணத்தை கட்டவேண்டியபடி செலுத்துகிறீர்கள் என தெரிவிக்கும். R1 என்றால் குறித்த தவணையில் செலுத்துவீர்கள். R2 என்றால் ஒருமாதம் பிந்தி செலுத்துவீர்கள். இப்படியே இந்த தகைமை எண் கூடிக் கொண்டு செல்லும். R1 தகமையில் இருப்பது தான் சிறந்தது. ஓரிரு சந்தர்ப்பத்தில் R2 R3 வந்தால் அம்போ என்று இருந்துவிட வேண்டாம். யாருக்கும் எதிர்பாராமல் சில தவணை தவறிவிட்டு பணம் செலுத்தப்படலாம். உதாரணத்திற்கு வீட்டில் சுகயீனம் என பல காரணம் இருக்கலாம். ஆனால் தொடர்ச்சியாக இப்படி இருப்பது தவறு. அடடா மறந்துவிட்டேன். கடன் குறிப்பில் இன்னுமொரு விடயமுள்ளது. அதுதான் கடன் சுட்டு எண்கடன். சுட்டு எண் உங்கள் கடன் குறிப்பில் உள்ள அனைத்து விடயங்களையும் கருத்திற்கொண்டு நீங்கள் கற்புடையவரா? (கற்பெனப்படுவது சொல் கவனம் என்பதை) குறிக்கும் எண். எல்லோருமே கடன் குறிப்பை எடுத்து ஆராய்ச்சி செய்து முடிவெடுக்க முயல்வதில்லை. அநேகமானவர்கள் கடன் சுட்டு எண்னைப் பார்த்து விட்டு நீங்கள் நாணயஸ்தரா? என்பதை அறிந்துகொண்டு உங்களுக்குக் கடன் தர முன்வருவார். உங்கள் கடன் சுட்டு எண் 640இற்கு குறைவாக இருப்பின் அவர்கள் மேலும் கவனமாக அவதானித்து சில வேளைகளில் கடன் தர முன்வருவார்கள். அதேவேளை 700க்கு அதிகமாக கடன் சுட்டு எண் இருந்தால் வலிந்து உங்களுக்கு கடன் தந்து உங்களை கடன்காரனாக்கிவிடுவார்கள்.

உங்கள் கடன் குறிப்பை கவனமாக நீங்கள் பாதுகாத்து வந்தால் உங்கள் ஜாதகக் குறிப்பு எதனைச் சொன்னாலும் உங்களுக்கு தேவையான நிதி உதவியைத் தந்து கைகொடுத்து முன்னுக்கு வர பலரும் முன்வருவார்கள். இதனால் தான் வள்ளுவரும் “தெய்வத்தால் ஆகாது (சாதகக் குறிப்பு) எனும் முயற்சி தன் மெய்வருத்தக் கூலி (கடன் குறிப்பு) தரும் என்று கூறியிருக்க வேண்டும். ஏதும் சந்தேகம் இருந்தால் என்னுடன் தொடர்பு கொண்டால் மேலும் விளக்கம் தருவேன்.

■ ■ ■

# மேற்கும் கிழக்கும் மணப்பெண் உடைகள்

திருமணம் என்பது எல்லாரும் எதிர்பார்க்கும் ஒரு விசேடம். திருமணவாழ்வில் ஈடுபட முடியாமல் எத்தனையோ பெண்களும் ஆண்களும் தனிமையில் வாழ்கின்றனர்.

திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதாக கீழைத்தேச நாடுகளில் சொல்வார்கள். எல்லாம் விதிப்படி நடக்குமென்பது இந்து சமயம். நாம் விரும்பியவரை மணக்க வேண்டுமென்பது மேலைத் தேச மக்களின் விருப்பம். ஆனால் திருமணங்கள் உலகம் பூராகவும் நிகழ்கின்றன. நாம் மணப்பெண்கள் உடையைப் பற்றி மட்டும் இன்று பார்ப்போம்.

## மேற்கத்திய மணப்பெண்

மேற்கத்திய கலாச்சாரத்தில் எத்தனையோ கலாச்சாரங்கள். ஒவ்வொரு கலாச்சாரத்துக்கும் ஒவ்வொரு விதமான உடை. சாதாரண மண உடையிலிருந்து விலை உயர்ந்த கோடீஸ்வரர்கள் அரசகுடும்பத்தினர் வரை பலவிதமான உடைகளில் திருமண மேடைக்கு வருகிறார்கள். இங்கு விவாகங்கள் இரு அன்புள்ளங்களின் பிணைப்பாகவோ, அல்லது வாழ்க்கையில் ஒருதடவை மட்டுமே நடக்கும் விடயமென்றோ எந்தக் கட்டுப்பாடுமற்ற ஒரு சூழலில் நடைபெறுவதால் அவர்கள் குடும்ப அந்தஸ்துக்கு ஏற்ற, அவர்கள் தராதரத்திற்கு ஏற்றவாறு உடுத்தினர்.

செல்வந்தர்கள் விலை உயர்ந்த கம்பளி, பட்டு, செல்வம் போன்றவற்றால் தயாரித்த உடையணிவார்கள். எவ்வளவு அதிகமானதும் விலை உயர்ந்ததுமான உடைகளை மணப்பெண்கள் அணிகிறார்களோ, அந்த அளவுக்கு அவர்கள் சமுதாயத்தில் உயர்ந்தவர்களாயிருப்பார்கள்.

ஏழைப் பெண்கள், பணக்காரப் பெண்களின் உடைகளைப் பார்த்து அதேமாதிரி விலை குறைந்த துணிகளை உபயோகித்துத் தைத்துக் கொண்டார்கள். அல்லது அவர்களின் முன்பாக மிக நல்ல உடையை அணிந்தார்கள். 1930 வரை கல்யாணப் பெண்ணின் உடை அந்தப் பிரதேசத்திலேயுள்ள இந்திய உடைகளின் மாதிரியாக இருக்கும். உதாரணமாக 1920 களில் மணப்பெண்ணின் உடை முன்புறம் குட்டையாகவும், பின்புறம் மிக நீண்டும் இருந்தது. 1940களின் இறுதியில் நீண்ட முழுச்சட்டை அணிந்தார்கள். விக்டோரியா ராணியின் காலத்தை ஞாபகப்படுத்தின. இந்த வழக்கம் இன்றும் தொடர்கிறது. 1840 வரை வெள்ளை நிறம் மணமகளின் விருப்ப நிறமாக இருக்கவில்லை. விக்டோரியா மகாராணி சக்சே கோபாக்கைச் சேர்ந்த அல்பர்ட் என்பவரை மணம் செய்யும் வரை மணப்பெண்கள் பல நிற உடைகளில் மணம் செய்தனர். ஆனால் அவர்கள் கறுப்பு நிறத்தையோ, சிவப்பு நிறத்தையோ தெரிவு செய்யவில்லை. ஏனெனில் கறுப்ப துக்கத்தை நினைவுபடுத்தும். சிவப்பு விலைமாதர்களின் உடையின் நிறம்.

இன்று வெள்ளை நிறம் தூய்மை, பெண்மைகளைச் சுட்டிக் காட்டும் என்பதால் இப்போதைய உடை டயானாவின் கல்யாண உடையைப் போலவே தைக்கிறார்கள். பெரிய தலைத்துண்டு, சருகை வேலைப் பாட்டுடனும் இருக்கின்றன.

இன்று ஹொலிவூட் நடிகைகளின் மண உடைகள்தான் மணப்பெண்களுக்கு முன் மாதிரியாக வேண்டும். நீங்கள் விரும்பிய விதத்தில் நீங்கள் உங்கள் கடமையைச் செய்யலாம்.



## இந்திய மணப்பெண்

இந்திய மணப்பெண்கள் மணமேடைக்குச் செல்லும்போது அது ஒரு கண்கொள்ளாக் காட்சியாகும். அவர்கள் அணியும் பாவாடையும் (முழுநீளம்) மேலுக்கு அணியும் குட்டையான பிளவுஸ்சும் மேற்கத்திய உடைகளை விட முற்றிலும் வேறுபட்டன. மேலும் இடத்துக்கு இடம் இந்தப் பாவாடை, பிளவுஸ்கள் வேறுபடும். வட இந்தியாவில் விவாகத்துக்கு பாரம்பரியமாக உடுக்கும் உடைகளின் எண்ணிக்கை அதிகம். அத்துடன் பாரம்பரியமாக மணப்பெண்ணுக்கு தேர்ந்தெடுக்கும் உடை சிவப்பு நிறத்திலேயே இருந்தது. இன்றும் அதிகமாகச் சிவப்பு நிறமே அநேகரின் விருப்பமாக உள்ளது. சிவப்பு நிறம் புனிதத் தன்மையையும், பச்சை செழிப்புத் தன்மையையும் அடையாளம் காட்டுகின்றன. எனவே இவை இரண்டும் அநேகமாக மணப்பெண்ணின் உடையில் காணப்படும் நிறங்களாகும்.

செல்வந்தர் குடும்பப் பெண்கள் அணியும் உடைகளில் ஏராளமான தங்க இழைகள் (நூல்) இருக்கும். பல கிலோ எடையுள்ள தங்க நூல்கள் அந்த உடையில் சரிகை வேலை செய்வதற்கு உபயோகிக்கப்பட்டிருக்கும்.

விலை உயர்ந்த உடைகள் வாங்க முடியாத ஏழைகள் தங்கம், வெள்ளி முலாம் பூசப்பட்ட கம்பி, நூல்களால் செய்யப்பட்ட பட்டு உடைகளை அணிந்தனர்.

ககரா சோலியும், லெகுனா பாவாடையுமே மணப்பெண்ணின் பிரதான உடை. ககரா நீண்ட பாவாடையின் பெயர், சோலி என்பது கட்டையான மேல் அங்கி. தொப்புள் தெரியக்கூடியதாக இருக்கும். துப்பட்டா என்ற ஒரு நீளமான துணியும் மார்பில் அணிவதற்கு இருக்கும். ககராவையும் சோலியையும் விட்டால் பட்டுச் சேலையும் சோலியுமே மணப்பெண்ணின் உடையாகும். சேலை கட்டும் விதமும் மாறுபடும். வட இந்தியாவில் ஒரு விதமாகவும், தென்இந்தியாவில் இன்னொரு விதமாகவும் அணிவார்கள். தென் இந்தியாவில் மணப்பெண்ணின் சேலை 'கிறீம்' நிறத்தில் இருக்கும். கிறீம் நிறம், செழிப்பு, தூய்மை, செல்வம் முதலியவற்றிற்கு அறிகுறி.

ஆனால் இப்போது பாரமான சரிகை வேலை அதிகமுள்ள சேலைகளுக்குப் பதிலாக மெல்லிய பாரம் குறைந்த கிறேப், சற்றின் மற்றும் ரியோன் துணியில் செய்த சேலைகளையே மணப்பெண்கள் அணிகிறார்கள். Pink, Burgundy, Peach, Wine நிறங்களும் இன்று மணப்பெண்களால் விரும்பி அணியப் படுகின்றன. தங்கள் நிறத்தை நன்றாக எடுத்துக் காட்டும் நிறங்களையே மணப் பெண்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆனால் ஒரு வெள்ளை உடையையோ, சேலையையோ மணப்பெண் ஒருபோதும் தேர்ந் தெடுக்கமாட்டார். ஏனெனில் வெள்ளை உடை துக்கத்தையும் அமங்கலத்தையும் குறிக்கும். இந்திய மணப்பெண்கள் நம்ப-முடியாத அளவுக்கு தங்களை அழகு-படுத்துவார்கள். மணப்பெண் அலங்காரத்தில் உயிருள்ள ஒரு பொம்மை போலக் காட்சியளிப்பாள்.

## ஆசிய மணப்பெண்

சீனக் கலாச்சாரத்தின்படி ஒரு பெண் மூன்று தடவையாவது தனது மண உடையை மாற்றுவார். பல நூற்றாண்டுகளுக்கு முன் மணப்பெண்கள் ஒரு நாளில் 30 தடைவையும் உடை மாற்றுவார்கள். அவர்கள் அணியும் உடை அவர்கள் தராதரத்தை, பொருளாதார வளத்தை காட்டி நிற்பதால் அதிக உடை அதிக செல்வம், வளம் படைத்தவர்களாக இருக்கிறோம் என்று காட்டவே இப்படிச் செய்தார்கள். சீனாவில் அநேக திருமண உடைகள் சிவப்பு நிறத்திலேயே காணப்படும். ஏனெனில் கடும் நிறமான சிவப்பு தீய சக்திகளை விரட்டி விடும் என்பதும், சிவப்பு அதிஸ்டமான நிறமெனவும் அவர்கள் நம்பினார்கள். அவர்கள் மணப்பெண்ணுக்கு ஒரு சிவப்பு முகத்திரை அணிவிப்பவர்கள். சீனாவின் வடபகுதியில் ஒரு பீஸ் உடையையே அணிவார்கள். அதனை உயி பாஓ (Qi Pao) என அழைப்பர். அதில் நிறைய சிவப்பு, மஞ்சள் நிறத்தில் பின்னல் வேலை செய்யப்பட்டிருக்கும்.



பாலா
இராஜேந்திரன்
balar@thaiveedu.com


தென் சீனப்பகுதிகளில் மணப்பெண் இரண்டு பீஸ் உடை அணிவாள். அதனை Qun Gun என அழைப்பர். அவள் அணியும் சட்டையில் பொன்நிற பீனிக்ஸ் (Phoenix)உம் சிவப்பு நிற ட்றகன் (Dragon) வடிவங்களும் இருக்கும். இந்த வடிவங்கள் ஆண், பெண் இற்கிடையில் காணப்படும் சக்தியைச் சமப் படுத்துவதற்காகவே அவர்கள் உடையில் காணப்படுகின்றன.

முன்பு 'Qi Pao' என்ற மணப்பெண்ணின் உடை ஒரு தளர்ந்த சாதாரண உடை போலவே இருந்தது. ஆனால் இப்போது மணப்பெண்ணின் உடை அழகாகவும் உடலோடு ஒட்டியும் உயர்ந்த கழுத்தையும் கொணடுள்ளது.

இன்று ஒரு சீன மணப்பெண் தான் விரும்பி நீளத்தில் கைகள் உள்ள, தன் உடல் வாகுக்கேற்ற உடையையும் தெரிவு செய்யலாம். அநேக (PAOS) பாஓக்கள். தடித்த சிவப்புப் பட்டுநூலினால் நெய்யப்படுகின்றன. கோடைகாலத்தில் மெல்லிய சிவப்பு நிறத்தை விரும்புவர். உடைகளின் நிறங்களும் இப்போது மாறிவிட்டன. எனவே ஒரு மணப்பெண் தனக்கு விருப்பமான, தனக்குப் பொருத்தமான நிறத்தை தெரிவு செய்யலாம். கறுப்பும், சாம்பல் நிறமும் துர் அதிர்ஸ்டமான நிறங்களென மக்கள் நினைக்கிறார்கள்.

சீன தேசத்திலும் வெள்ளை ஒரு அதிஸ்டமல்லாத, துக்கத்தைக் காட்டுகிற ஒரு நிறம். ஆனால் இன்று ஒரு சில நவ நாகரீக மணப்பெண்கள் வெள்ளை உடையையும் தெரிவு செய்கின்றனர். பிற கலாச்சாரம் சீன கலாச்சாரத்தில் ஆதிக்கம் செலுத்தவே செய்கின்றன.

■ ■ ■

அறியவில்லையானால் அறிந்துகொள்ளுங்கள் - கனடாவில் சில தகவல்கள்

# உயிர் இழப்பின் பின்பு ஆயுள் காப்புறுதியிலிருந்து பணம் பெறுதல்?



சிவ பஞ்சலிங்கம்
- ஆயுட்காப்புறுதி பிரதிநிதி -
sivapunch@thaiveedu.com

தகவல் தொடர் - 19

- ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் வைத்திருக்கும் ஒருவரின் உயிர் இழப்பின் பின்பு அவரது குடும்பத்தவர்கள் காப்புறுதி கம்பனியிலிருந்து ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட நட்டஈட்டு தொகையினை எவ்வாறு பெற்றுக்கொள்வது?
- நட்டஈடு பெற உரித்துடையவர் உயிரோடு இல்லையாயின் யாது செய்வது?
- கனடாவில் ஆயுள்காப்புறுதி ஒப்பந்தம் செய்த ஒருவர் ஈழ மண்ணில் அல்லது ஏனைய நாடுகளில் போய் நிற்கும்போது அந்தந்த நாடுகளில் உயிர் இழப்பு நடந்தால் இத்தகைய நிலையில் நட்ட ஈட்டினை எப்படிப் பெறுவது?
- நட்டஈடு பெற உரித்துடையவர் என ஒப்பந்தத்தில் நியமிக்கப்பட்டவர் தாயக மண்ணில் மட்டும் வாழ்பவராக இருந்தால் அவர் எப்படி நட்டஈட்டினைப் பெறுவது?
- ஆயுள் காப்புறுதியிலிருந்து நட்டஈடு பெறுவதில் ஏதாவது 'திருப்தியின்மை' அல்லது 'முரண்பாடு' என ஒன்று உருவாகினால் அதனை எங்கு முறையிடுவது?
- ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் தொலைக்கப்பட்டால் என்ன செய்வது?
- ஆயுள் காப்புறுதி கம்பனி வங்குரோத்து நிலைமைக்கு போய் ஏமாற்றம் செய்யுமா?



ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் செய்து வைத்திருக்கும் ஒருவர் மரணம் அடைந்து விட்டார் என்றால் முதலில் செய்ய வேண்டியது இது தொடர்பான செய்தியினை உடனடியாக காப்புறுதி கம்பனிக்கு அறிவித்து விடல் வேண்டும்.

ஏனெனில் இச் செய்தி என்பது பதிவில் போகும்போது, ஒப்பந்தத்திற்காக மாதா மாதம் வங்கியில் இருந்து எடுத்துக் கொள்ளும் பணமும் நிறுத்தப்பட்டு, உயிர் இழப்பு நட்ட ஈட்டினை வழங்கும் தயார் நிலைக்கு கம்பனியும் நடவடிக்கைகளை முன் எடுப்பார்கள்.

### நட்ட ஈட்டினை பெற உரித்துடையவர் (Primary Beneficiary)

அதாவது நட்ட ஈட்டினை பெற முதல் உரித்துஉடையவர் என சம்பந்தப்பட்ட ஆயுள் காப்புறுதியின் ஒரு குறிப்பிட்ட தொகை பணத்தினை பெற முதலாவது நபராக நியமிக்கப்படுபவராவார். இங்கு நியமிக்கப் படுவது ஒருவராகவும் இருக்கலாம். அல்லது பலரையும் நியமிக்கலாம். பலரை நியமிக்கும்போது ஒப்பந்தம் செய்பவர் எவ்வளவு விகிதத்தில் தமது உயிர் இழப்பின் பின்பு நட்டஈடு போய் சேர வேண்டும் எனவும் குறிப்பிட்டு வைக்கலாம். இவ்வாறு குறிப்பிடவில்லையானால் பலரை நியமிக்கும் போது அது சமமாகவே பகிர்ந்து வழங்கப்படும்.

உயிர் இழப்பு நட்ட ஈட்டினை பெற உரித்துடையவர் பலராக இருந்தால் ஒவ்வொருவரும் தனித்தனி விண்ணப்பப் படிவங்கள் நிரப்பி வழங்குதல் வேண்டும். அத்துடன் தங்கள் அறிமுக அடையாளங்களும் நட்ட ஈடு கோரும்போது நிரூபித்தல் வேண்டும்.

> காப்பபுறுதிக் கம்பனி ஒன்று வங்குரோத்து (Bankruptcy) நிலைமைக்கு போகும் நிலை ஏற்பட்டால், வாடிக்கையாளர் ஒருவர் பாதிக்காமல் இவ் ஒப்பந்தங்கள் நிதி அமைச்சின் நிறுவனத்தினால் இன்னொரு கம்பனிக்கு மாற்றியமைக்கப்படும். இதற்குமேலும் பிரச்சனை வந்தாலும் நிதி அமைச்சுகளின் கண்காணிப்பில் இயங்கும் ஒரு நிறுவனம் வாடிக்கையாளர்களுக்கு அவர்கள் பாதிக்காமல் இருக்க ஒரு தொகை வரை பாதுகாப்பு வழங்குகின்றது.

### அடுத்த கட்ட நடவடிக்கை என்ன?

ஒப்பந்தத்தில் இருந்து ஆயுள் காப்புறுதி பணத்தினை பெற உரித்துடையவர் எவர் என குறிப்பிடப்பட்டிருந்ததோ அவர் நட்டஈடு கோரும் விண்ணப்பப் படிவங்களை கம்பனியிடமிருந்து நேரடியாக பெற்று அல்லது கம்பனியின் தொடர் வலயப் பகுதியினுள் சென்று விண்ணப்பப் படிவங்களை பதிவு இறக்கம் செய்து நிரப்பி சமர்ப்பித்தல் வேண்டும்.

இங்கு ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்தில் இருந்து பணத்தினை பெற உடையவர்களை இரு வகையினராக ஒப்பந்தங்களின் விண்ணப்ப படிவங்கள் நிரப்பும்போதே ஒப்பந்தம் செய்து கொள்பவர் குறிப்பிடுவதுண்டு.

அவையாவன பின்வருமாறு:

### அடிப்படையில் முதல் நபராக

### இரண்டாவது நிலையில் நட்ட ஈட்டினை பெற உரித்துடையவர் (Contingent Beneficiary)

அடிப்படையில் முதல் நட்டஈட்டினை பெற உரித்துடையவர் எவரும் சில நேரங்களில் அந்த நேரம் உயிருடன் இல்லையேல் (அவர் உயிருடன் இல்லை என்பதும் நிரூபிக்கப்படல் வேண்டும் என்பது இங்கு குறிப்பிட வேண்டிய விடயம்). நட்டஈடு பெற இரண்டாவது நபர் என எவரையாவது நியமிக்கலாம். இரண்டாவது நிலையில் நட்ட ஈட்டினைப் பெற உரித்துடையவர் இந்த நிலை ஏற்படும்போது நட்டஈடு பெற விண்ணப்பங்களை கையளிக்கலாம். இரண்டாவது நிலையில் நட்டஈட்டினைப் பெற உரித்துடையவரையே ஆங்கிலத்தில் Contingent Beneficiary எனக் குறிப்பிடுவது ஆகும். (ஒரு குடும்பத்தில் கணவனின் உயிர் இழப்பின் பின்பு மனைவியும், இதேபோல் மனைவியின் உயிர் இழப்பின் பின்பு கணவனும் பணம் பெற உரித்துடையவர் என நியமிப்பதுடன் இவ் இரண்டாவது நிலையில் (Contingent Beneficiary) பிள்ளைகளை நியமிப்பது வழமையாகும்) இங்கு ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்தில் இருந்து பணத்தினை பெற உரித்துடையவர்கள் சமர்ப்பிக்க வேண்டிய முக்கியமானவை இரு பத்திரங்கள் அவையாவன பின் வருவனவாகும்.

### நட்டஈடு கோரும் விண்ணப்ப படிவம் (Claimant's statement)

குறிப்பிடப்பட்ட ஒரு ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்தில் ஒப்பந்தத்திற்கு உரியவரின் மரணத்தினை தொடர்ந்து பணம் பெற உரித்துடையவர் தமது அடையாளங்களையும் உறுதிப் படுத்தி கைச்சாத்திட்டு சமர்ப்பிக்க வேண்டிய விண்ணப்பப் படிவம் இதுவாகும்.

இதில் ஆயுள் காப்புறுதி ஒப்பந்த இலக்கம், மரணமானவரின் பெயர், சமூக காப்புறுதி இலக்கம் (Social Insurance Number), மரணமான திகதி, மரணத்திற்கான காரணம், மரணம் நிகழ்ந்த இடம், பிறந்த திகதி உட்பட பணம் பெறுபவரின் அடையாளங்கள், விபரங்கள்யாவும் இவ் விண்ணப்பத்தில் சமர்ப்பிக்கப்பட்டு பணம் முழுவதாகவோ அல்லது பகுதியாகவோ பெற்றுக் கொள்ள விருப்பம் என்பதனையும் குறிப்பிட்டு கைச்சாத்திடல் வேண்டும்.

### மரணத்தினை உறுதிப்படுத்தும் அத்தாட்சிப் பத்திரம் (Proof of death certificate)

ஆயுள் காப்புறுதியில் உயிர் இழப்பின் பின்பு பணம் பெற கோரும்போது சமர்ப்பிக்க வேண்டிய முக்கியமான பத்திரம் இதுவாகும். இப் பத்திரம் இல்லாது எந்த சந்தர்ப்பத்திலும் நட்ட ஈடு கோரமுடியாது..

கனடாவில் இப்பத்திரம் மரண சடங்குகளை பொறுப்பு எடுத்து நடாத்தும் நிறுவனத்தினால் (Funeral Home) வழங்கப்படும். மரணமானவரின் பெயர், சமூக காப்பறுதி இலக்கம், விலாசம், மரணம் அடைந்த இடம், மரணம் நடந்த நாள், உடல் அடக்கம் செய்யும் இடம், இப்படி சகல விடயங்களும் அதில்

72ம் பக்கம் பார்க்க...

# உயிர் இழப்பின் பின்...

71ம் பக்கத் தொடர்ச்சி...

குறிப்பிட்டு நிறுவனத்தின் உயர் அதிகாரியினால் கைச்சாத்திடப்பட்டு இருக்கும்.

ஏனைய நாடுகளில் வெவ்வேறு அரச நிறுவனங்களினால் இம் மரணத்தினை உறுதிப்படுத்தும் அத்தாட்சிப் பத்திரம் வழங்கப்படும்.

இப் பணம் கோரும் விண்ணப்பப் படிவத்துடன் மரணத்தினை உறுதிப்படுத்தும் அத்தாட்சிப் பத்திரத்தின் மூலப்பிரதி (Original document) வழங்கினால் போதும். தேவையானால் கம்பனி மேலும் சில விண்ணப்பங்களை சமர்ப்பிக்குமாறு கோரலாம். முக்கியமாக மரணத்தினை உறுதிப்படுத்தும் மருத்துவரின் அத்தாட்சி பத்திரம் (Proof of Physician Statement for Death). ஏற்கனவே கடந்த காலங்களில் பெற்ற சிகிச்சைகள் தொடர்பான விபரங்கள், பிற நாடுகளில் உயிர் இழப்பு நடந்தால் அதற்கு ஒரு பிரத்தியேகமான விண்ணப்பப் படிவம், இவைகள் யாவற்றுடனும், ஆயுள் காப்புறுதி ஒப்பந்த பத்திரத்தினையும் சமர்ப்பிக்குமாறு சில கம்பனிகள் கோருவதுண்டு.

மேற்குறிப்பிட்ட பத்திரங்கள் யாவும் சமர்ப்பித்து எதுவிதமான தடங்கலும் இல்லையேல் சராசரி ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட தொகை பணம் ஒரு மாத காலத்தினுள் பணம் பெற உரித்துடையவர்களுக்கு அவர்கள் பெயரில் காசோலையாக வந்து சேரும் என்பது எங்களின் பல வருட கால தொழில் அனுபவங்களில் கண்ட உண்மைகள்.

## நட்ட ஈடு கோரும் ஆயுள் காப்புறுதி ஒப்பந்தங்களின் வகைகள்:

'உயிர் இழப்பு' நடந்து நட்ட ஈடு கோரும் காப்புறுதி ஒப்பந்தங்கள் என்பது பின்வரும் வகைகளாக பிரிக்கலாம்.

## தனிப்பட்ட ஒரு மனிதனின் ஆயுளுக்கு கைச்சாத்திடும் இவ் ஒப்பந்தத்தில் இருந்து பணம் பெறுதல் (Personal life insurance)

மரணம் என்பது எந்த ரூபத்தில் நடந்தாலும் இவ் ஒப்பந்தத்தில் நட்டஈடு பெற ஒப்பந்தமும் ரத்தாகிவிடும்.

## கூட்டான ஆயுள் காப்புறுதியில் இருந்து பணம் பெறுதல் (Joint life insurance)

கணவன், மனைவி என இருவரும் சேர்ந்து ஒரே ஒப்பந்தமாக கைச்சாத்திடுதல் இவ் ஒப்பந்தம் ஆகும். ஒருவருக்கு உயிர் இழப்பு நடந்தால் அடுத்தவருக்கு பணம் கிடைக்கும். அத்துடன் பத்திரமும் ரத்தாகி விடும். விரும்பினால் தொடாந்து உயிர் வாழ்பவர் புதிய ஒரு காப்புறுதி ஒப்பந்தமாக, தொடரப் போகும் வயதில் உள்ள புதுவிலையில் மருத்துவ பரிசோதனைகளும் புலன் விசாரணைகளும் இல்லாது ஒப்பந்தத்தினை தொடரலாம்.

## அடமான ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்தில் பணம் பெறுதல் (Mortgage life insurance)

வீடு, வியாபார ஸ்தாபனங்கள் ஆகியவற்றினை ஈடாக வைத்து வங்கியில் இருந்து பெறும் மிக பெரிய கடன் தொகைகளுக்காக வங்கி போன்ற நிதி நிறுவனங்கள் தங்களின் கடனுக்கு ஒரு பாதுகாப்பாக ஒரு ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்தினை காப்புறுதி கம்பனியுடன் கடன்பட்டவர் சார்பில் அவரது செலவில் செய்துகொள்வது வழமையாகும். இங்கு உயிர் இழப்பு நடந்தால், எவ்வளவு தொகை கடன் இறுதியாக இருக்குமோ, அவ்வளவு தொகையினையும் காப்புறுதி கம்பனி வங்கிக்கு கொடுத்து தீர்த்துவிடும். இதில் காப்புறுதி நட்ட ஈட்டு பணம் என்பது வங்கிக்கு போய் சேருமே தவிர குடும்பங்களுக்கு வந்து சேராது. ஈட்டு கடனில் இருந்த வீடு, அல்லது வியாபார நிலையம் கடனில் இருந்து விடுபட்டு மரணமாகியவரின் குடும்பத்தினருக்கு சொந்தமாகும்.

> "காப்புறுதி நட்டஈட்டு, நிவாரண கொடுப்பனவுகளில் காப்புறுதி கம்பனியுடன் 'முரண்பாடுகள்' அல்லது ஏதாவது வழியில் 'திருப்தியின்மை' ஏற்பட்டால் அதனை முறைப்பாடு செய்தால் வாடிக்கையாளர் சார்பில் கம்பனிகளுடன் பேசி நியாயபூர்வமான தீர்வினை முன்வைப்பதற்கு ஒரு அரச நிறுவனம் கனடாவில் இயங்கிக்கொண்டே உள்ளது."

## கடன்களுக்கான ஆயுள் காப்புறுதியில் நட்டஈடு (Credit Life Insurance Policy)

பெருந்தொகைக்கு வங்கி கடன் அட்டைகள், தனிப்பட்ட ஈடு எதுவும் இல்லாத கடன்களை வங்கி தரும்போது தங்கள் கடன் தொகைகளை பாதுகாப்பதற்காக வாடிக்கையாளர் சார்பில் வாடிக்கையாளரிடமே கடனுடன் சிறு கட்டு பணம் அறிவிட்டு காப்புறுதி கம்பனி ஒன்றுடன் ஒப்பந்தம் கைச்சாத்திடப்படும்.

உயிர்இழப்பு நடந்தால் கடன் தொகையினை மட்டும் காப்புறுதி கம்பனி கொடுத்து தீர்க்கும்.

## வேலை இடங்களில் வழங்கும் குழுவான ஆயுள் காப்புறுதி திட்டத்தில் இருந்து பணம் பெறுதல் (Employer Group life Insurance)

தொழில் செய்யும் இடங்களில் பணிபுரியும் ஊழியர்கள் யாவருக்கும் சேர்த்து தொழில் வழங்கும் கம்பனி ஒன்று ஏதாவது ஒரு காப்புறுதி கம்பனியில் ஒப்பந்தம் செய்வதுண்டு. தொழில் செய்து கொண்டிருக்கும் காலத்தில் மட்டும் உயிர் இழப்பு நடந்தால் குடும்பத்தில் உள்ளவர்கள் நட்ட ஈடு பெற்றுக் கொள்ளலாம்.

## விபத்து ஆயுள் காப்புறுதியில் (Accidental Death Life Insurance)

'மரணம்' என்பது இயற்கையாக இல்லாது விபத்து மூலம் மட்டும் நடந்தால் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட தொகை குடும்பத்தவர்களுக்கு கிடைக்கும்.

இதற்கு செலுத்தும் மாதகட்டு பணம் மிகவும் குறைவானதாகும். நட்டஈடு கோரும்போது மரணம் என்பது விபத்தினால் நடந்தது என்பது அத்தாட்சிகளுடன் நிரூபிக்கப்படல் வேண்டும்.

## வாகன விபத்தில் உயிரிழப்பு நடந்தால் வாகன காப்புறுதியில் இருந்து நட்டஈடு பெறுதல்

வாகன விபத்தில் உயிரிழப்பு நடந்தால் கணவன் அல்லது மனைவியாக இருந்தால் இவர்களில் ஒருவர் $25,000 நட்ட ஈடு பெறுவதுடன், தங்கியிருக்கும் பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் தலா $10,000 வரை பெறலாம். அத்துடன் மரண செலவுக்கு என $6,000 வரை வழங்குவார்கள். "மேலதிக சலுகை" (Optional Benefit) என சற்று அதிக பணம் மாத கட்டு பணத்துடன் சேர்த்து செலுத்தி வாகன காப்புறுதியில் மேலதிகமான ஒப்பந்தமாக வைத்திருந்தால் இந்த இடத்தில் சற்றுகூடுதலாகவும் நட்ட ஈடு பெறலாம்.

(இங்கு குறிப்பிடப்பட்டது வாகன விபத்தில் உயிரிழப்பினை சந்தித்தவர் தமது வாகன காப்புறுதியில் இருந்து பெறும் நட்டஈடு ஆகும். ஆனால் விபத்து என்பதில் உயிர் இழந்தவர் பக்கம் தப்பு இல்லையேல், தப்பினை விபத்தில் உருவாக்கியவரின் வாகன காப்புறுதி கம்பனிக்கு எதிராக குடும்பத்தவர்கள் என இம் மரணத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் வழக்கு தொடர்ந்து நட்டஈடு மேலதிகமாக பெறலாம்).

## கனடிய ஓய்வூதிய திட்டத்திலிருந்து கிடைக்கும் ஆயுள் காப்புறுதி பணம் (CPP Life Insurance Claims)

கனடாவில் தொழில் செய்யும் ஒருவரின் சம்பளத்தில் இருந்து ஒரு சிறு வீதம் மத்திய அரசினால் நிர்வகிக்கப்படும் ஓய்வூதிய திட்டத்திற்கு செலுத்தி வருவது வழமையாகும். இவ்வாறு இத்திட்டத்திற்கு பணம் செலுத்தி வருபவர் ஒருவருக்கு உயிர் இழப்பு நடக்கும்போது, மிக சிறிய தொகை பணம் குடும்பத்தவர்களுக்கு இதில் இருந்து போய் சேரும்.

பொதுவாக கனடாவில் மரணச் சடங்குகள் நடாத்தும் நிறுவனத்தினர் உடல் அடக்கம் செய்யப்பட்டு முடிந்தவுடன் இதற்குரிய விண்ணப்பங்கள் யாவும் குடும்பத்தவர்களிடம் செலுத்தி விரைவில் இதனை பூரணப்படுத்தி அரசுக்கு உத்தியோகபூர்வமாக சமர்ப்பிக்குமாறு கோருவது வழமையாகும்.

## கனடாவில் ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் செய்த ஒருவர் பிற நாடுகளில் நிற்கும் போது மரணம் நடந்தால்.......

கனடாவில் ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் செய்த ஒருவர் தாயக மண் உட்பட ஏனைய நாடுகளில் போய் நிற்கும்போது அந்த நாட்டில் உயிர் இழப்பு நடந்து அங்கு மரணச்சடங்குகளும் செய்யப்பட்டால், பணத்தினை பெற உரித்துடையவர் காப்புறுதி கம்பனியில் இருந்து இலகுவான முறையில் பணத்தினை பெறலாமா?

இது பொதுவாக எல்லோர் மனதிலும் எழும் ஒரு முக்கியமான கேள்வி! ஆயுள் காப்புறுதி ஒப்பந்தங்களின் சட்டப்படி உயிர் இழப்பு என்பது கனடாவில் என்று மட்டும் அல்லாது உலகில் எங்கு நடந்தாலும் நட்டஈடு வழங்கியே தீர வேணடும் என்பது நிபந்தனையாகும்.

ஆனால் ஏனைய நாடு ஒன்றில் உயிர் இழப்பு நடக்கும்போது கனடாவில் உள்ள ஆயுள் காப்புறுதி ஒப்பந்தம் ஒன்று பணம் செலுத்தாத காரணத்தினால் எந்த சந்தர்ப்பத்திலும் ரத்து செய்யப்படாத நிலையில் வலிமையுடையதாக இருந்தால் சரி! இங்கும் சமர்ப்பிக்கப்பட வேண்டிய "மரண அத்தாட்சிப்பத்திரம்" என்னும் பத்திரம் மரணம் நடந்த இடத்திலிருந்து பெற்று நட்டஈடு பெறும் போது சமர்ப்பித்தல் வேன்டும்.

இலங்கையில் மரண அத்தாட்சிப் பத்திரம் என்பது உதவி அரசாங்க அதிபரின் அலுவலகத்தில் இருந்தோ அல்லது கிராமங்களில் இருக்கும் அரச பிறப்பு, இறப்பு பதிவாளரிடமிருந்தோ பெற்று வழங்குவது வழமையாகும்.

இதேபோல் ஏனைய நாடுகளின் நிர்வாக கட்டமைப்புகளுக்கு ஏற்ற மாதிரி இவ் மரணங்களை உறுதிப்படுத்தி வழங்கும் பத்திரம் தனியார் நிறுவனங்களினால் வழங்கப்படும்.

நட்டஈட்டினை வழங்க போகும் கனடாவில் உள்ள ஆயுள் காப்புறுதி கம்பனி தேவையேற்படின் தமது செலவில் எப்படியோ குறிப்பிட்ட இவ் ஆவணத்தினை வழங்கிய நாட்டின் நிர்வாக பிரிவுடன் தொடர்பு கொண்டு இதனை உறுதிபடுத்துவார்கள். சிலநேரங்களில் தேவைஏற்படின் கனடாவில் உள்ள அந்தந்த நாட்டின் தூதராலயங்

73ம் பக்கம் பார்க்க...

72ம் பக்கத் தொடர்ச்சி...

களினூடாகவும் உறுதிப்படுத்திக்கொள்வார்கள்.

ஆயுள் காப்புறுதி தொகை என்பது சிறிய தொகையாக இருந்தால் சில கம்பனிகள் உறுதிபடுத்தல் இல்லாது ஒரு நம்பிக்கையின் அடிப்படையில் நட்ட ஈட்டினை வழங்குவார்கள். 'மரண அத்தாட்சி பத்திரம்' என்பது வேறு மொழியில் இருந்தால் அதனை அதிகார பூர்வமாக மொழிபெயர்ப்பு செய்யும் இடங்கள், வசதிகள் கனடாவில் இருப்பதால், அதனை இங்கு மொழிபெயர்த்து வழங்குதல் வேண்டும். இவ் மொழிபெயர்ப்பு வசதிகள் என்பது கனடாவில் சிரமமாக இருப்பதில்லை.

ஆனால் ஏனைய நாடு ஒன்றில் மரணம் நடந்து கனடாவில் நட்டஈடு கோரும்போது நட்டஈடு கோரிக்கை விண்ணப்பத்துடன் விசேடமாக இன்னொரு விண்ணப்ப படிவம் பூர்த்தி செய்து சமர்ப்பிக்க வேண்டும். இவ் விண்ணப்ப படிவத்தில் பொதுவாக பின் வரும் கேள்விகள் கேட்கப்படும்.

- மரணமாகியவரின் பெயர்
- இறுதியாக கனடாவில் இருந்த விலாசம்
- ஆயுள் காப்புறுதி இலக்கம்
- பிறந்த திகதி, ஆண்டு. இடம்
- சமூக காப்புறுதி இலக்க அட்டை
- கடவுச்சீட்டு இலக்கம்
- செய்த தொழில்
- மரணமாகியவர் கனடாவினை விட்டு புறப்பட்ட திகதி
- பிரயாணத்தின் நோக்கம்
- பிரயாணத்தில் ஏனைய நாட்டில் தங்கியிருந்த காலம்
- பிரயாணம்செய்த பாதை, விமான கம்பனி விபரங்கள்
- (தேவையாயின் விமான ரிக்கற்றின் பிரதிகளை சமர்ப்பிக்கலாம்)
- பிரயாணத்தில் கிளம்பிய இடம் - போய் சேர்ந்த இடம்
- திரும்பி வர ரிக்கற் செய்திருந்தால் அது பற்றிய விபரம்

மேற்குறிப்பிட்ட விபரங்கள் தவிர இதே விண்ணபத்தில் மரணம் எப்படி? வெளிநாட்டில் எந்த முகவரியில், என்ன காரணத்தினால் ஏற்பட்டது என்பது உட்பட ஏதாவது வைத்திய நிலையங்களில் சிகிச்சைகள் பெற்று இருந்திருந்தால் அது பற்றிய விபரங்களும் கேட்கப்படுவதுடன், மரணத்தின் பின்பு உடல் தகனம் செய்யப்பட்டதா? அல்லது அடக்கம் செய்யப்பட்டதா? என்ற விபரங்களுடன் அது தொடர்பாக ஆவணங்கள் இருந்தால் அவற்றினையும் சமர்ப்பிக்கலாம்.

சரியான தகவல்கள் அல்லது ஆவணங்கள் எதுவும் இல்லையாயின் 'இல்லை' என குறிப்பிட்டு அதற்குரிய காரணங்களையும் தெரியப்படுத்தினால் போதுமானது. விண்ணப்பங்கள் உறுதிப்படுத்தப்பட்ட பின்பு பணம் காசோலை வடிவத்தில் பணம் பெற உரித்துடையவரின் பெயரில் வந்து சேரும்.

நட்டஈடு பெற உரித்துடையவர் என நியமிக்கப்பட்டவர் தாயக மண்ணில் மட்டும் வாழ்பவராக இருந்தால், கனடாவின் பிரதிநிதியாக அந்தந்த நாடுகளில் உள்ள கனடிய தூதராலயங்களினூடாக கனடாவில் உள்ள காப்புறுதி கம்பனியில் இருந்து நட்டஈடு கோரிக்கையினை முன்னெடுக்கலாம்.

இத்தகைய நிலையில் அந்தந்த நாடுகளில் செயல்படும் சர்வதேச காப்புறுதி துறையில் பணிபுரியும் வக்கீல் மூலமாக நட்டஈடு கோரிக்கையினை முன்னெடுக்கலாம். (சட்டத் துறை நிறுவனங்கள், வக்கீல் மூலமாக பணம் பெற முயலும்போது அதற்கென அவர்களுக்கு வழங்கும் சட்டச் செலவு ஏற்படுவது தவிர்க்க முடியாத ஒன்றாகும்.)

காப்புறுதி நட்டஈட்டு, நிவாரண கொடுப்பனவுகளில் காப்புறுதி கம்பனியுடன் 'முரண்பாடுகள்' அல்லது ஏதாவது வழியில் 'திருப்தியின்மை' ஏதாவது ஏற்பட்டால் அதனை முறைப்பாடு செய்தால் வாடிக்கையாளர் சார்பில் கம்பனிகளுடன் பேசி நியாயபூர்வமான தீர்வினை முன்வைப்பதற்கு ஒரு அரச நிறுவனம் கனடாவில் இயங்கிக் கொண்டே உள்ளது.

இந் நிறுவனத்திற்கு ஒரு பிரச்சனையின் முறைப்பாட்டினை முன் எடுப்பதற்கு முன்பு

முதலில் கம்பனியின் நட்ட ஈடு வழங்கும் பிரிவுடன் பேசி தீர்த்துக் கொள்ளலாம். சாதாரணமாக பேசி தீர்வு காணமுடியாவிட்டால் நட்டஈடு வழங்கும் பிரிவின் அதி உயர் தலைமை அதிகாரிக்கு (Chief Executive officer in Claims Department) நேரடியாக முறைப்பாடு செய்வதன் மூலம் முரண்பாட்டினை சற்று மேல் மட்டத்திற்கு எடுத்து செல்லலாம். அங்கும் தங்களுக்குத் தீர்வு திருப்தியாக கிடைக்காவிட்டால் ஒவ்வொரு கம்பனியிலும் இருக்கும் வாடிக்கையாளர் முறைப்பாட்டு விசாரணை மன்றத்திற்கு பிரச்சனையினை முன் எடுக்கலாம். இப்பிரிவினை ஆங்கிலத்தில் 'Ombudsman" என குறிப்பிடப்படுவதுண்டு. அதாவது வாடிக்கையாளர்களின் முறைப்பாடுகளையும், அதிருப்தியினையும் விசாரித்து நீதி வழங்க என இருக்கும் ஒரு கம்பனியின் சட்ட பூர்வமான நீதிமன்றம் என இதனைக் குறிப்பிடலாம். இச் சிறு நீதிமன்ற பிரிவு கனடாவின் சகல காப்புறுதி கம்பனிகள், வங்கிகள் போன்றவற்றில் கனடாவின் காப்புறுதி, நிதியியல் சட்ட விதிகளின்படி உருவாக்கப்பட்டு கம்பனிக்குள் இயங்கிக் கொண்டே உள்ளது. இங்கும் தீர்வு கிடைக்காவிட்டால் பிரச்சினையினை இறுதியாக முன் எடுக்க வேண்டிய அரச நிறுவனமே இங்கு கீழே குறிப்பிடப்படும் நிறுவனமாகும்.

சில நேரங்களில் மரணமாகியவரின் ஆயுள் காப்புறுதி தொடர்பான பத்திரங்கள் தொலைக்கப்பட்டு, அது தொடர்பான தகவல்கள் எதுவும் கையில் இல்லையானாலும் இது தொடர்பான விபரங்களை தேடி கண்டு பிடித்து உதவி செய்வதற்கும் இந்நிறுவனம் கைகொடுக்கும். இந்நிறுவனம் தொடர்பான விபரம் ரொறன்ரோவில் பின்வருமாறு:

**Consumer Assistance Center**
**Canadian Life & health insurance Ombud service**
**20, Toronto Street, Suite #710**
**Toronto, Ontario.**
**M5C 2B6**
**தொலைபேசி: 1 - 800 -268 - 8099,**
**416 – 777 - 2344**

ஆயுள் காப்புறுதி தொடர்பான தகவல்கள், நட்டஈடு கோருதல் தொடர்பான தகவல்கள் என சகல விடயங்களுக்கும் பொதுவாக உதவுவதற்காக என்றும் தொடர்பு கொள்ளலாம். குறிப்பிடப்பட்ட கம்பனியோடு தொடர்பு கொண்டும் தீர்வு காண முடியாது என்ற நிலைமை உள்ளது என்ற பின்னரே இறுதியாக பிரச்சனையினை முன் எடுக்கும் நிறுவனமே மேலே குறிப்பிடப்பட்ட நிறுவனம் ஆகும்.

ஆயுள் காப்புறுதி கம்பனியின் சகல செயல்பாடுகளையும் கனடிய மத்திய, மாகாண நிதி அமைச்சுகள் என்றும் பரிசீலனை செய்து கண்காணித்துக் கொண்டேயிருக்கும்.

இங்கு கம்பனி ஒன்று வங்குரோத்து (Bankruptcy) நிலைமைக்கு போகும் நிலமை ஏற்பட்டால், வாடிக்கையாளர் ஒருவர் பாதிக்காமல் இவ் ஒப்பந்தங்கள் நிதி அமைச்சின் நிறுவனத்தினால் இன்னொரு கம்பனிக்கு மாற்றியமைக்கப்படும். இதற்கு மேலும் பிரச்சனை வந்தாலும் நிதி அமைச்சுகளின் கண்காணிப்பில் இயங்கும் ஒரு நிறுவனம் வாடிக்கையாளர்களுக்கு அவர்கள் பாதிக்காமல் இருக்கும் நேரத்தில் ஒரு தொகை வரை பாதுகாப்பு வழங்குகின்றது.

இங்கு ஒப்பந்தம் பணம் செலுத்தாத காரணத்தினால் ரத்து செய்யப்படாமல் இருத்தல் வேண்டும். ஒப்பந்த உடன்படிக்கைகள் மோசடிகள் எதுவும் இல்லாது எழுதப்பட்டு இருத்தல் வேண்டும். இவ் இரண்டும் இருந்தால் வாடிக்கையாளர் எந்த வகையிலும் பாதிக்கப்பட மாட்டார். இரு வருடங்களுக்கு மேல் ஒப்பந்தம் ஒன்று வலிமையுடையதாக இருந்தாலே (Incontestability Period) ஆயுள் காப்புறுதி ஒப்பந்தத்துக்கு வலிமையான உறுதியும் பாதுகாப்பும் என்றும் இருக்கும் என்பது இதன் சட்ட ஒழுங்கு விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

■ ■ ■

# ஒன்ராறியோ
# வாடகைச் சந்தையின் தோற்றம்


S.K. பாலேஸ்
- வீடு விற்பனை முகவர் -
skbales@thaiveedu.com

### றொறொன்டோ

2007ல் இருந்தது போலவே வாடகைக் குடியிருப்புகளுக்கு மவுசு 2008லும் இருக்கும். வெறுமையாக இருக்கும் மாடிக் குடியிருப்புகளின் வீதம் 2008ல் 3.5%மாக இருக்கும். அதே வேளை ஒரு சராசரி இரண்டறை கொண்ட மாடிக் குடியிருப்பு வாடகை 1.5%தால் அதிகரிக்கும்.

சொந்த வீட்டுக்கு குடிபுகும் எண்ணம் தொடரும். எனவே வாடகைச் சந்தையில் ஒரு கீறலை ஏற்படுத்தும். ஆனால் அது ஒரு புது வழியில் ஏற்கனவே கட்டப்பட்ட வீடுகளும், புதிய வீடுகள் அடுத்த வருடத்திலிருந்து சற்றுக் குறைந்த விலைக்கே விற்கப்படும். முதல் தடவை வீடு வாங்கியவர்கள் தொடாந்து வாடகை வீடுகளை விட்டு, சொந்த வீடுகளுக்குக் குடிபோவார்கள். இந்த வீடுமாற்றம் 2008ல் முடிவுறப் போகிற அநேக கொண்டோமினியங்கள் கட்டிமுடிக்கப்பட உள்ளவற்றின் அடிப்படையிலும் ஏற்பட்டது. 2007ல் கட்டப்பட்டதைப் போன்று இரண்டு மடங்கு இந்த ஆண்டு கொண்டோமினியங்கள் கட்டப்பட உள்ளமை முதலீடு செய்பவர்கள் வைத்திருக்கும் கொண்டோக்கள் இரண்டாம்பட்ச சந்தையினரை கவரக் கூடியதாக இருக்கலாம். காரணம் புதிய கொண்டோக்களில் உள்ள வசதிகளும், வேலையின் சிறப்பும் நன்றாக இருப்பதே.

இப்போதைக்குச் சில காரணங்களால் வாடகை வீடுகளின் மவுசைத் தொடர்ந்து அதிகரிக்கச் செய்யும். அவையாவன

- தொழிலாளர் சந்தையின் இறுக்கம் காரணமாக இளைஞர் வேலைவாய்ப்பு அதிகரிக்கலாம்.
- குடிவரவு அதிகரிக்கும்.
- வீட்டிலுள்ளவர்களின் வருவாய் சராசரி வாடகையின் வரவே.

### வின்ட்சர்

CMAல் மூன்று அல்லது அதிக அறைகள் கொண்ட தொடர் மாடிக் கட்டிடங்களின் வெற்றிட வீதம் 2008ம் ஆண்டு பிற்பகுதியில் சற்றுக் குறைந்து காணப்படும். 11வீதம் அளவில் 2008 பிற்பகுதியில் காணப்படலாம். ஆனால், வழமையான சராசரிக்கு மேலே வெற்றிட வீதம் இருக்கும். சற்று அபிவிருத்தியடைந்து வரும் வேலைவாய்ப்புகளும் கனடா டொலரின் பெறுமதி அதிகரிப்பும், அமெரிக்க பொருளாதார வளர்ச்சி மந்தமும், ஆட்டோ தொழிலின் மறுசீரமைப்பு முயற்சிகளும் வின்ட்சரின் பொருளாதாரத்திலும் வீட்டுச் சந்தையிலும் தொடர்ந்து ஒரு அழுத்தத்தை கொடுக்கும்.

### ஒட்டாவா

ஒட்டாவாவிலுள்ள வாடகைச் சந்தையின் சாரதிகள் அநேகர் 2008ன் வாடகை வீதத்தின் மீதும் தொடர்ந்தும் தாக்கத்தை ஏற்படுத்தவே செய்வார்கள். வெற்றிட வீதம் 2008ல் 2.1% குறைந்தும், வாடகை 2007ல் இருந்ததை விட 2 தசத்தால் அதிகரித்தும் காணப்படும். தேவையுடன் கட்டப்பட்ட ஒரு குறிப்பிட்ட வாடகை நகர வீடுகளும், தொடர் மாடி கட்டிடங்களும் இருப்பதால் அவற்றின் அதிகரிப்பு புலப்படாது. ஆனால், 2008ல் கொண்டோக்களின் நிர்மான வேலை முடிவுறும்போது மேலதிக கொண்டோக்கள் தேவைக்காக கட்டப்பட்ட குடியிருப்புகளுடன் போட்டியிட வேண்டியிருக்கும். இந்த சிறு தொகை குடியிருப்புகளின் அதிகரிப்பு, வீட்டுத் தேவையும் சிறிது அதிகரிப்பதால் ஒன்றுக்கொன்று ஈடு கொடுக்கின்றன. மோட்கேச் வீதம் சென்ற மூன்று ஆண்டுகளை விட அதிகமாக இருக்குமாகையால் வாடகை குடியிருப்புகளிலிருந்து, சொந்த குடியிருப்புகளிற்கு செல்லும் வேகத்தை குறைக்கவே செய்யும். நாளடைவில் ஒட்டாவா வாசிகள் பிற மாகாணங்களிற்குச் செல்வது குறையும் போது இந்த வீதத்தில் முன்னேற்றம் காணப்படும். மேலும் இளைஞர்கள் பலர் தொழில் வசதி பெறுவதால் வாடகை குடியிருப்புகளின் தேவை அதிகரிக்கும்.

குடிவரவு அதிகரிக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. மேலும் ஒட்டாவாவிலிருந்து வெளிமாகாணங்களுக்குப் போவது குறையும். அரச இலாகாக்கள் பொருளாதார செயல்பாட்டின் ஒரு பகுதியாக தங்கள் சேவையை அதிகரித்துள்ளார்கள். அரச இலாகாக்களில் வேலை செய்யும் இளைஞர்கள், வளர்ந்தவர்களதும் இந்த மாதிரியான வாடகை குடியிருப்புகளில் குடியிருக்க முன்வருவார்கள்.

### மொன்றியல்

2008ல் வாடகை கட்டிட நிர்மாண வேலைகள் மந்தகதி அடைந்தாலும் மொன்றியல் பகுதியில் வெற்றிட வீதம் அதிகரிக்கும். அதன் காரணமாக 2007ஐ விட 2008ல் கூடுதலான வாடகை குடியிருப்புகள் பூர்த்தி செய்யப்படும். ஆனாலும் வாடகைக் குடியிருப்புக்களுக்கான மவுசு போதியளவு இல்லாத காரணத்தால் வாடகைக் குடியிருப்புகளில் குடியிருக்க போதிய எண்ணிக்கையில் இருக்க மாட்டார்கள். இதனால் மக்கள் வசிக்காத வீடுகளின் எண்ணிக்கை அதிகரித்து, 2008ல் அவை 3.3 வீதமாக உயர்ந்திருக்கும்.

### கியூபெக் நகரம்

2008ல் கியூபெக் நகரத்தின் 400 ஆவது ஆண்டுவிழா தொழில் சந்தையில் மேலதிக அழுத்தத்தை ஏற்படுத்தும். இதுவரை வேலைக்கு எடுத்த தொழிலாளர்களை விட அதிகமான தொழிலாளர்கள் தேவைப்படும். 2008ல் உருவாகும் தொழில் வாய்ப்புகளில் அநேகமானவை பகுதிநேர வேலையாகவே இருக்கும். பலமான குடிவரவு தொடர்ந்து நடைபெறுவதால் வாடகை குடியிருப்புகளிற்கு மவுசு அதிகமாகவே இருக்கும். ஆனால் குடியிருப்புகளின் விநியோகம் எதிர்வரும் வருடத்தில் குறைவாகவே இருக்கும் என எதிர்பார்க்கப்படுகின்றது. சில குடியிருப்புகளின் வாடகை நிலையாக நிற்கும். சிலவற்றின் வாடகை சற்றுக் குறையவே செய்யும். இளம் சந்ததியினர் எவ்வளவு வேகமாக வீட்டுச் சொந்தக்காரராக விரும்புகிறார்கள் என்பதிலும் வாடகைக் குடியிருப்புகளின் எண்ணிக்கை அதிகரிக்கவோ குறையவோ காரணமாகலாம். எனவே அக்டோபர் 2008ல் வாடகைக் குடியிருப்பின் வீதம் 1.00 க்கும் 1.5க்குமிடையில் நிற்கும்.

### அட்லான்டிக் பிரதேச வாடகைச் சந்தையின் தோற்றம்

- மரலிபக்ஸ் -

அடுத்து ஒன்றரை வருடத்திற்கு வாடகைக் குடியிருப்புகளின் மவுசு பலமாக இருக்கும். அதிக அளவு வாடகைக்குடியிருப்புகளின் வரவும், சொந்த வீடு வாங்குவதனால் ஏற்படுகிற போட்டியும் வெற்றிட வீதத்தில் மேல்நோக்கிய அழுத்தத்தையும், சராசரி வாடகையில் கீழ்நோக்கிய அழுத்தத்தையும் ஏற்படுத்தும். வாடகை வீதம், உயரும் வாடகைக் கிராக்கி விநியோக வீதத்துடன் இணையாகச் செயல்பட்டு வெற்றிட வீதத்தைக் குறைந்தளவில் வைத்துக்கொள்ளும். செலவினங்களின் அதிகரிப்பு வாடகை அதிகரிப்புக்கு வழிவகுக்கும். செலவினங்களின் அதிகரிப்பு சந்தைப்படுத்தப்பட்ட புதிய பல பொருட்களுடன் சேர்ந்து சகல பிரிவிற்கும் வாடகை உயர்வு ஏற்படும்.

...

# அழகான வாழ்வே நிறைவான இன்பம்

சிவவதனி
பிரபாகரன்
vathani@thaiveedu.com



"இறைவன் தன் வேலையைக் குறைப்பதற்காகத் தாயைப் படைத்தான்" என்பர். உலகில் எந்த உயிருக்கும் உன்னதமான மூலமாக திகழ்பவள் தாய். தாய்க்கு நிகராக உலகில் எதுவுமேயில்லை. ஐந்தறிவு உயிரினங்களில் கூட தாய்மையின் கருணையைக் காண்கின்றோம். இவ்வாறாக தாயின் மேன்மையை எடுத்துச்சொல்லிக் கொண்டே போகலாம். கடலின் நீரையும் வானத்தின் அகலத்தையும் அளவிட முடிந்தாலும் தாயின் அன்பினை அளவிட எவராலும் முடியாதிங்கு.

ஆனால் உயிர் கொடுக்கும் தாயொருவர் தன் சேய்கள் இருவரை கொன்ற கொடுஞ்செயல் அண்மையில் பிரித்தானியாவில் இடம் பெற்றமையானது தமிழர்களை மட்டுமல்ல உலகையே அதிர்ச்சியடையச் செய்துள்ளது.

ஊடகங்கள் தோறும் செய்திகளாகிய இச் சம்பவத்தினை எம் சமூகம் தன் ஒருமுகப் பார்வையால் பார்க்க விளைவதனைக் காண்கையில் வேதனை எழுகின்றது. கொடிய தாயாக அவ்விளம் பெண்ணைச் சித்தரித்து அவள் மீது காறி உமிழ விளைகின்ற இச் சமூகம் பெருந்தவறினை மறுபடியும் செய்ய விளைகின்றது. இதயத்தை அறுக்கின்ற அதிர்ச்சி தரும் செய்தி இதுவென்பது உண்மைதான். ஆனால் இதற்கு அந்த கொலையாளியான தாயை மட்டும் குற்றம் சொல்லவதில் அர்த்தமேதுமில்லை.

இத்தகைய நிகழ்வுகள் பல புலம்பெயர்ந்து வாழும் தமிழர்களிடையே இடம்பெற்று வருகின்றன. ஒரு தாய் தன் சேயை இவ்வண்ணம் சொல்லுவாளா? அங்ஙனம் ஓர் இழிசெயலைச் செய்ய அவளைத் தூண்டிய காரணி யாது? ஏத்தகைய மனோநிலையில் அவள் இங்ஙனம் ஓர் செய்யத் தகாத தீஞ்செயலைச் செய்தாள்? ஏங்ஙனம் இத்தகையதோர் கொடுமனதை அவள் பெற்றாள்? தாயாகவே இருந்து செய்தாளா? இல்லை தன்னிலை இழந்து செய்தாளா? இதில் சமூகத்தின் பங்கு என்ன? எனும் பல்லாயிரம் வினாக்கள் எம் எண்ணங்களைத் துளைத்துச் சல்லடை போடுகின்றன. நாம் எம்மிடம் கேட்டு ஆய்ந்தறிய வேண்டிய வினாக்கள் தான் இவையாவுமே. எனவே அவற்றை உதறித்தள்ளிவிட முடியாது.

மலிந்துவரும் தற்கொலைகள், கொலைகள் என்பனவற்றிற்கெல்லாம் பிரதான காரணம் மனதில் ஏற்படும் பாதிப்புக்களேயாகும். புலம்பெயர்வு என்பது ஒன்றும் எளிதான விடயமல்ல. பிறந்து வளர்ந்து வாழ்ந்த சூழலைவிட்டு விலகி புதிய சூழலுக்குள் அடியெடுத்து வைத்து தன்னை நிலைப்படுத்திக்கொள்ள போராடுதல் என்பது மிகப் பெரிய சவாலாகும்.

மாறுபட்ட காலநிலை, வேற்றினக் காலாச் சாரச் சூழல், மொழிச்சிக்கல்கள், வாழ்வு முறை வேறுபாடுகள், பொருளாதாரப் பிரச்சினைகள் போன்ற எண்ணற்ற மாறுபட்ட காரணிகள் அன்னியச் சூழலில் புலம் பெயர்ந்து வாழும் மக்களை உளவியல் சிக்கலுக்குள் எளிதில் தள்ளிவிடுகின்றன. எனினும் பெரும்பான்மையானோர் அவற்றை எதிர்த்துப் போராடி வெல்லுகின்றனர். அத்தகைய வீரம் எம் இனத்தவருள் இயல்பாகவே உண்டு. எனினும் சிலர் மட்டும் கோழைகளாகி விடுகின்றனர்.

மேற்குலக நாடுகளில் மனவளநல நிலையங்கள் மலிந்து கிடக்கின்றன. ஆனாலும் அத்தகைய சேவைகளைப் பெற்றுப் பயன் பெறுவதற்கு எம் இனத்தவர்கள் பின் நிற்கின்றார்கள். அகதிகளாகப் புலம்பெயர்ந்து வந்து அவசர உலகில் அமைதியின்றி வாழும் எம் சமூகத்தினருக்கு உளவியல் தாக்கங்களும் அவற்றினால் ஏற்படும் பாரதூரமான விளைவுகளும் பெரும் அச்சுறுத்தலாக திகழுகின்றன.

மனிதன் ஒரு சமூகப்பிராணி. புறச்சூழலுடன் அவனைத் தொடர்புபடுத்தி வைத்திருக்க 'மனம்' அவனுக்கு உதவுகின்றது. "மனம் என்பது ஒரு செயற்பாடு" அதன் செயற்பாட்டை மூளையும் நரம்புத்தொகுதியும் நிர்ணயிக்கின்றன.

ஒருவனது சிந்தை நல்வழியில் செல்லுவதும் தீயவழியில் செல்லுவதும் அவனது மனதில் தங்கியிருக்கின்றதெனினும் அந்த மனதின் செயற்பாடானது உடலியற் கூறான மூளையில் தங்கியுள்ளதனைக் காணலாம்.

எனவே ஒருவர் மனநிலை பாதிப்புறும் பொழுது அது உடலியல் பாதிப்புகளால் வந்த பாதிப்பாகவும் இருக்ககூடும் என்பதனை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். எனினும் மனதின் தன்மை வெறுமனே மூளையமைப்பில் மட்டுமே தங்கியிருப்பதில்லை. அது ஒவ்வொருவரதும் மனப்பான்மையையும் பொறுத்துமே அமைகின்றது. எந்த ஒரு விடயத்தையும் அணுகும் முறையானது மனிதர்களுக்கு மனிதர் வேறுபடுவதற்குக் காரணம் மனிதர்களுக்கிடையேயுள்ள மனப்பான்மை வேறுபாடுகளேயாகும்.

இதையே "மனம்போல வாழ்வு" என எம் முன்னோர் அழகாகக் கூறியிருக்கின்றார்கள்.

மனதின் எண்ணப்பாங்கே வாழ்க்கையின் வடிவமாகின்றது.

பாதையில் இருந்த முள் ஒன்று எம் காலைக் குத்திவிட்டது என வைத்துக்கொள்வோம். "ஐயோ முள் முத்திவிட்டதே" என ஓவென கதறியழுதபடி நின்ற இடத்திலிருந்து அழுபவன் தன் பயணத்தின் இலக்கை ஒரு போதுமே அடையமாட்டான். மாறாக குத்திய முள்ளை எடுத்து தூரவீசிவிட்டு பாதையில் வேறும் முட்கள் உள்ளனவா? ஏன அவதானமாகப் பார்த்து பார்த்து நடந்து தன் பயணத்தை தொடர்பவன் தான் செல்ல வேண்டிய இடத்தை வெற்றிகரமாகச் சென்றடைகின்றான். அவனுடைய பார்வையில் பயணத்தில் எதிர்வரும் முட்கள் தெரிவதில்லை. மாறாக பயணத்தின் முடிவில் வரும் இலக்குகளே தெரிகின்றன

வாழ்வும் இது போன்றதே. எத்தகைய பிரச்சினைகளையும் சிறியதாக்கி பார்க்கக் கற்றுக்கொண்டால் உள்ளத்தின் நோய்கள் எம்மை நெருங்கா. மனதின் நோய்கள் வெறுமனே மனதை மட்டும் பாதிப்பதில்லை. உடலையும் பாதிக்கின்றன. தேவையற்ற பயங்கள், பதட்டம், அச்சம், கோபம், கவலை போன்ற பல எதிர்மறை உணர்வுகள் மன நோய்களைத் தோற்றுவிக்கின்றன.

வாழ்வில் இடம்பெறும் துன்பியல் நிகழ்வுகள் எதிர்ப்புகள் இழப்புகள் போன்றனவும் மனோநிலையை பாதிப்பை ஏற்படுத்த வல்லன.

உடலில் ஏற்படும் பாதிப்புகள், உடலின் தாங்குதிறனை மிஞ்சிவிடும் கடும் உழைப்பு போன்றனவையும் மனதை பாதிக்கவல்லவையாகும்.

மனநோய்களுக்கு எடுத்த எடுப்பில் சிகிச்சையளிக்க முடியாது. மூலகாரணங்களை ஆய்ந்தறிந்து அவற்றிக்கேற்ப சிகிச்சைமுறைகள் மாறுபடும். மனநோய் சிகிச்சை முறைகள் சிலவற்றில் ஆழ்மன ஆய்வினைச் (Psychoanalysis) செய்து நோயாளியின் அடிமனதில் உள்ள காயங்களை வைத்தியர்கள் முதலில் இனங்காண்பர். நரம்பியல் தொகுதியின் பாதிப்புகளையும் ஆராய்வர். எனவே எமக்குள் மனபிரியல் பாதிப்புக்கள் உள்ளன எனக் காணும்பொழுது வைத்திய ஆலோசனை பெறுவது அவசியமாகும். பல ஆரம்ப நிலை மனநிலைப் பாதிப்புக்களுக்கு தூக்கமருந்து கொடுத்து மன ஓய்வின் மூலம் சிகிச்சை வழங்குவர். எது எவ்வாறாயினும் ஆரம்பநிலையிலேயே வைத்தியரைக் காண்பது அவசியமாகும். வைத்தியரேயானாலும் தனக்குத் தான் அறுவைச் சிகிச்சை செய்ய முடியாது. மனநோய்களும் அவ்வாறானவையே.

பொதுவாக அமைதியான அவசரமற்ற நிதானமான திட்டவட்டமான வாழ்வுமுறை, உடற்பயிற்சி, யோகாசனம், ஓய்வுப்பயிற்சி, விருப்பமான பொழுதுபோக்குகள் போன்றவற்றின்பால் வாழ்வின் ஒரு பகுதியை ஈடுபடுத்தும் பொழுது மன அழுத்தமானது தானாகவே குணமாகி மாறும் வாய்ப்பு உண்டு. நோயுற்றவர்கள் மட்டுமன்றி பொதுவாக எல்லோருமே இத்தகைய வாழ்க்கைச் சமநிலைகளைக் கடைப்பிடிப்பது மிக மிக அவசியமாகும்.

ஒருவரது நோயானது அடுத்தவருக்கு புலப்படுகையில் காலம் கடந்திருக்கலாம். எனினும் ஆரம்ப நிலையிலேயே ஒவ்வொருவரும் தன்னைத்தான் உற்றுநோக்க கற்றுக் கொண்டால் தனது மனக்குழப்பங்களைத் தானே இனம் கண்டு சிகிச்சை பெறலாம். ஒருவரால் தனக்குரிய மன அழுத்தக் காரணியை முதற்கண் இனம் காண இயலுமாயின் சரியான மனஅழுத்தத்தின் ஆரம்ப நிலையிலேயே ஆலோசனைகளைத் தகுந்த காலத்தில் தக்கபடி பெற்று குணமடைதல் சாத்தியமாகும்.

வாழ்க்கை முறையில் எமது சமூகத்தவர் தொன்றுதொட்டு பின்பற்றும் அந்நியோன்யமான தாம்பத்யம், அன்பான குடும்ப உறவு முறைகள், உறவினர்களுடன் உறவாடும் பண்புகள் போன்றன மனநோயாளிக்கு மருந்தாகின்றன. சமூகத்துடன் ஒன்றிணைந்து பரந்த நோக்கோடு வாழும் ஒருவருக்கு உளவியல்த் தாக்கங்கள் வருவது மிகவும் குறைவாகும்.

கணவன், மனைவி, குழந்தைகள் எனக் குடும்பமாக கூடி மகிழும் வாழ்வு முறையை புலம்பெயர்ந்து அவசர உலகில் அறக்கப் பறக்க ஓடியோடி உழைத்து வாழும் எமது சமூகத்தினர் தொலைத்து வாழ்கின்றனர். இதுவே மன அழுத்தங்களின் மூலகாரணமாக திகழ்கின்றது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்ப்பதில்லை. ஒருவரோடு ஒருவர் பேசநேரமில்லை. அளவளாவி மகிழும் சூழலைத் தொலைத்து வெறும் இயந்திரங்களாக வாழும் மனிதர்களுக்கு உள அழுத்தம் வருவதில் ஐயமேது?

புரிந்துணர்வு இல்லா உறவுமுறைகளும் விரக்திநிலைக்கு காரணமாகின்றது. எத்தகைய உறவு முறைக்கும் புரிந்துணர்வு என்பதே காத்திரமானதாக அமைகின்றது. இன்றைய திருமணங்களில் பல மண முறிவில் முடிகின்றமைக்குக் காரணம் இந்தப் புரிந்துணர்வு என்ற அத்திவாரம் உறுதியின்றி போகின்றமையாலும் அன்பு என்னும் கட்டடம் கட்டியெழுப்பப்படாமையுமேயாகும்.

திருமண வயது வந்தும் திருமணமாகாமல் இருப்பவர்களும் வாழ்வில் விரக்தியுறுகின்றனர். மணமுறிவுற்றோரும் விரக்தியெய்துகின்றனர். திருமணமாகாதோரும் குடும்பங்களை பிரிந்து புலம்பெயர்ந்து தனியே வாழ்கையில் விரக்தியெய்துகின்றனர். இவ்வண்ணம் தனியே வாழ்வோர் அனுபவிக்கும் தனிமைக் கொடும் துயர்

78ம் பக்கம் பார்க்க...

# Just make a phone call

## A Bright Financial Future is waiting for you!

## NOW Hiring! Agents.

Free Class

- Best Compensation in the industry
- Step-by-step Personal Training
- Guartanteed Leads Provided

You can make **50 to 100** Thousands dollars

## Join hands with Canada's #1 RBC Life Broker (2006-2007)

A state-of-the-art web site, that will make you
• More Productive • More Efficient • More Money

ROYAL BROKERS
Tel: 416•315•8100

பல்வேறு நிறுவனங்களிடமிருந்து குறைந்த விலையில் உங்கள் காப்புறுதியை தெரிவு செய்துகொள்ள

மருத்துவ பரிசோதனையற்ற ஆயுட் காப்புறுதி

Insuring your life. Ensuring your trust.



Canada
Top Life Insurance
Sales Award Winner
2006-2007
RBC Insurance

**Siva Kandiah**
*Managing General Agent, RBC*
416•992•1259

ROYAL BROKERS
Corporation

80 Nashdene Ave., Unit B26 Toronto ON. M1V 5E4
Tel: 416•298•4722 Fax: 416•298•4664

மிகக் குறைந்த கட்டணமாக
**$15ல் இருந்து!**

வயோதிபர்களுக்கு
அதிகுறைந்த விலையில் காப்புறுதி

**100% Cash Back**
**Mortgage Insurance**

சிறுவர்களுக்கான
சிறந்த RESP திட்டங்கள்

RBC Insurance
Managing General Agent
Industrial Alliance
Canada Life

• Life Insurance/ Income Protection • Disability/ Critical Illness • Mortgage & Mortgage Insurance • Registered Education Saving Plans
• Travel Coverage • RRSP's, Annuities, RIF's GIS's • Tax Sheltered Savings & Investments













# அழகான வாழ்வே நிறை...

**76ம் பக்கத் தொடர்ச்சி...**

வார்த்தைகளால் விபரிக்க முடியாதவை. அவர்கள் அறியாமலே அவர்களின் மனம் தனிமை வாழ்வு தரும் விரக்தியான சிந்தனைகளால் பாதிக்கப்படுகின்றது. இதனால் மதுப்பழக்கம், போதை மருந்துப்பழக்கம், புகைப்பழக்கம் என உடலுக்கு ஊறுவிளைவிக்கும் தீய பழக்கவழக்கங்களுக்கு அடிமையாகின்றனர். இத்தகையோர் தனிமைப்படுத்தப்பட்ட வாழ்விலிருந்து வெளியே வந்து சமூகத்துடன் ஒன்றாக வாழப்பழகுவதன் மூலமே பல மனநோய்களிலிருந்து விடுபடலாம்.

விரக்தி மனப்பான்மையைப் போன்றே தோல்வி மனப்பான்மையும் மனநோய்களை உருவாக்கி தன்னாளுமையைச் சிதைக்கின்றது. சுயமதிப்பை இழக்கச் செய்கின்றது. இதனால் சமூகத்திலிருந்து ஒதுங்கி வாழும் கூச்ச சுபாவம் ஏற்படுகின்றது. இத்தகைய தனிமை வாழ்வும் மனநோய்க்கு காரணமாகின்றது.

மன அழுத்ததிற்கான காரணிகளும் விளைவுகளும் எல்லையற்று விரிந்துள்ளன. அவற்றை அறிந்து எம்மை நாம் கண்காணிப்பதன் மூலம் எம்வாழ்வில் நாம் இழந்த சமநிலையை இனங்கண்டு ஆரம்ப நிலையிலேயே எம் மனநலக்குறையைப் போக்கலாம். வெள்ளம் வரும்முன் அணை கட்ட வேண்டும். நோய் வரும்முன் நோய் வராமல் தடுக்கவேண்டும். எம்மில் பலர் உடலுக்கு கொடுக்கும் முக்கியத்துவத்தை மனதுக்குக் கொடுப்பதில்லை. மனம் எல்லா வற்றையும் விட அதிகமாக பத்திரப்படுத்தப்பட வேண்டிய ஒன்றாகும்.

குடும்பங்களில் தொலைந்து போகும் நிம்மதிக்கு குடும்ப வன்முறை ஒரு பிரதான காரணமாக இருந்து வருகின்றது.

குறிப்பாக மனைவியை அடித்து துன்புறுத்தும் கணவன் பிள்ளைகளை அடிக்கும் பெற்றோர் என நலிவுற்ற உடலினரை வலிமை கொண்ட உடலினர் உடலியல் ரீதியாக துன்புறுத்துவது மன்னிக்க முடியாத அநுமதிக்கலாகாத பெருங்குற்றச்செயலாகும். எமக்குள்ளிருக்கும் மன அழுத்தத்தையும் பிரச்சினைகளையும் நாம் அடுத்தவரிடம் காட்டும்பொழுது அவர்களையும் மன நோயாளிகளாக்குகின்றோம். இவற்றாலும் பாரதுாரமான விளைவுகள் எதிர்நோக்கப்படுகின்றன.

வெறுப்பும் கோபமும் உறவுக்கு பகையானவை. அன்பு உறவுக்கு ஊட்டமாகத் திகழுகின்றது. விரக்தியின் விளைவே கோபம் என்பர். கோபத்தின் விளைவுகளோ விபரீதமானவை. கோபம் அடுத்தவரை மட்டுமல்லாது எம்மை நாமே வெறுக்கவும் காரண மாகிவிடுகின்றது. இத்தகைய சுயவெறுப்பு (self hate) ஒருவருள் வளரும்போது சுய மதிப்பின்மை நிலைகொள்ள நேரிடுகின்றது. இதனால் சுயதண்டனைகளுக்கு தம்மை ஆளாக்கும் சுய கட்டுப்பாடற்ற நிலைகள் உருவாகின்றன. தற்கொலை சுயதண்டனை களுள் ஆபத்தானதானதும் அச்சமூட்டுவதுமாகும்.

பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்வு எம் கரங்களில் தரப்பட்டுள்ளது நிச்சயமாக விரும்பியோ விரும்பாமலோ இறப்பு என்பது எமது வாழ்வில் என்றோ ஒருநாள் வரத்தான் போகின்றது. எனின், எதற்காக அதனை வலிந்து வரவழைத்து அவசரமாக நாட வேண்டும்? அழகான வாழ்வில் வரும் சுக துக்கங்களை சமனாகவும் சவாலாகவும் எதிர்கொள்ளும் மனத்தைரியத்தை நாம் எமக்குள் வளர்க்கவேண்டும்.

தற்கொலையை விட கொடுமையானது கொலை. எவருக்குமே அடுத்தவர் உயிரை எடுக்கும் உரிமை இவ்வுலகில் இல்லை. அது பெற்ற தாயானாலும் சரி தனது சேயின் வாழ்வை முடிக்கும் அதிகாரம் எவருக்கும் இல்லவேயில்லை. மனதில் தோன்றும் வக்கிரமான புத்தியின் விளைவுகளே இத்தகைய வன்முறைகளுக்கு மூலகாரணமாகின்றன. சுயகட்டுப்பாடு இழந்த நிலையில் சரி தவறு குறித்து ஆராயும் திறமையற்ற நிலையில் மனம் அத்தருண சிந்தனைகளுக்கு அடிமையாகி தவறான முறைகளின் பால் செயற்பட தூண்டுகின்றது. ஆழ்மனதின் காயங்கள் காலப்போக்கில் நோய் நிலைக்கு ஒருவரை இட்டுச்செல்லுகின்றது. சில காயங்கள் சிறுவயது பருவத்தின் பாதிப்புக்களாக இருக்கவும் கூடும்.

எம்மில் பலர் தேவையற்ற பீதிகளை தமக்குள் வளர்த்துக் கொள்வதனைக் காணலாம். இத்தகைய மனப்பயங்கள் மனப்பதட்டத்திற்கு (anxiety)எம்மை இட்டுச் செல்லுகின்றன. இந்த மனப்பதட்டமும் மனப்பயங்களும் பின்பு உள உடல் நோய்களைத் தோற்றுவிக்கின்றன.

உள்ளம் தன் தேவைகளைப் பூர்த்தி செய்ய வேட்கையோடு காத்திருக்கும். அவை பூர்த்தியாகாத வேளைகளில் நெறிபிறழ்வு ஏற்படும். உந்தல் கோட்பாடு (Drive theory) எதிர்பார்ப்புகள் கோட்பாடு (Expectance theory) அறிவுசார் கோட்பாடு (Cognitive theory) மனிதவியல் கோட்பாடு (Humanistic theory) போன்ற கோட்பாடுகள் யாவற்றிலும் உள்ளத்தின் தேவைகளின் பூர்த்தியின் அவசியம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

மனம் என்பது பூப்போன்றது. பத்திரமாக பாதுகாக்காவிட்டால் சகங்கிப்போய்விடும். எனவே தேவையற்ற சிக்கல்களுக்குள் மனதைச் சிக்க வைக்காமல் பத்திரப்படுத்த வேண்டும்.

சிலவேளைகளில் எம்முள் மண்டிக்கிடக்கின்ற குற்றவுணர்வுகளும் எம்மை மனநோயாளிகளாக்குகின்றன. தவறுகளை உணர்ந்து திருத்தி உரியவரிடம் மன்னிப்பு கோருவதோடு அதனை அதற்கு மேலும் தொடராமல் மறக்க முயலவேண்டும்.

உள்ளம் என்பது கோவில் போன்றது. அதில் தேவையற்ற குப்பைகளைக் கொட்டித் தூய்மை இழக்கச் செய்யலாகாது. மாறாக, ஆரோக்கியமான ஆளுமையான அன்பும் பண்பும் நிறைந்த ஆக்கபூர்வமான சிந்தனைகளால் உள்ளத்தினை அலங்கரிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தன்னிறைவும் தன்னம்பிக்கையும் இழந்து தாழ்வு மனப்பான்மை தோன்றிடின் அது வாழ்க்கையை வெகுவாகப் பாதிக்கின்றது. தன்னாளுமை என்பதும் தன்மதிப்பு என்பதும் ஒவ்வொருவருள்ளும் அவசியமாக இருக்க வேண்டியவை. அவை கருவிலேயே வளப்படுத்தப்படக்கூடியவை. பிள்ளைகளை ஆளுமையுள்ளவர்களாகவும் சுயமதிப்புள்ளவர்களாகவும் வளர்ப்பது பெற்றோரின் கட்டாய கடமையாகும்.

'நிறைவான வாழ்வே குறையற்ற செல்வம் என்பர்'. நிறைவு என்னும் பதம் மனநிறைவையே அர்த்தப்படுத்துகின்றது. "போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்பர். சிலருக்கு எவ்வளவு இருந்தாலும் இல்லை என்ற பாட்டுத்தான். சிலரோ எதுவுமே இல்லாவிட்டாலும் இருப்பதை எண்ணி நிறைந்த மனதோடு வாழ்வர். அவர்கள் மனங்களை எத்தகைய நோய்களும் அணுகமாட்டா.

நின்று நிமிர்ந்து நினைத்துப் பார்ப்பதற்குள் முடிந்து போகும் இந்த சிலபொழுது வாழ்வுக்குள் எத்தனை எத்தனை தேவையற்ற மனச்சுமைகள்? இத்தகைய மனப்பாரங்கள் எதற்காக? வேண்டாம் விட்டு விடுங்கள்! சுமையை இறக்கிவிட்டு மனதை இலகுவாக்குங்கள்.

மனம் அழகானால் வாழ்வு அழகாகும். ஆழகான வாழ்வே நிறைந்த இன்பம். என்ன வாழலாமா இன்பமாக? வாழ்வைச் சுமந்து கழிப்பதைவிட சுவைத்துக் களியுங்கள். வாழ்க்கை ஒரு முறைதான் வாழலாம். நிறைவான பேரின்பத்தோடு வாழுமட்டும் நன்மைக்காக [redacted]ழ்ந்[redacted] தா[redacted] பார்ப்போமே?

# மேற்கத்திய இசைக்குறிப்புகளும் (Western Notes) நன்மைகளும்


V. அஜித்
- இசையமைப்பாளர் -
ajith@thaiveedu.com

மேற்கத்திய இசைக்குறிப்பு (Western Notes) கற்றுக்கொள்வதால் ஏற்படும் நன்மைகள்.

- Western Notes என்றால் என்ன?
- அதை கற்றுக்கொண்டால் என்ன நன்மை?
- நமது இசைக்கும் அதற்கும் என்ன சம்மந்தம்?
- அதன் மூலம் தமிழ் பாடல்களை கற்றுக்கொள்ள முடியுமா?

இது சாதாரணமாக நம்மில் பலர் கேட்கும் கேள்வியாகும். இத்தகைய கேள்விகளுக் கான விடையை இன்றைய தாய்வீடு வாசகர்களுடன் பகிர்ந்துகொள்வதில் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

இசைக்கு மொழி ஏது என்பது பலரும் அறிந்த உண்மை. காரணம் இசையே ஒரு பொதுவான மொழியாகும். அதை யார் வேண்டுமானாலும் கற்றுக்கொள்ளலாம். ரசனை உள்ள எந்த இசைக்கும் மொழி தேவையில்லை. உலகின் பல பாகங்க-ளிலும் பலவிதமான இசை வடிவங்கள் இருந்தாலும் அவற்றை ஒன்றிணைக்கும் ஒரு பொதுவான பாலம் தான் இந்த Western Notes ஆகும். ஒரு பாடகராக இருந்தாலும் சரி வாத்தியக்கலைஞராக இருந்தாலும் சரி ஏன் இசையமைப்பாளராக இருந்தாலும் சரி இதைப்பற்றி தெரிந்து கொள்வது மிகவும் அவசியம். இரண்டு வெவ்வேறு இசைக்-கலைஞர்கள் ஒன்றிணைந்தால் கூட அவர் களை ஒன்றிணைக்கும் ஒரு பொதுவான கருவியும் இந்த Western Notes தான். ஒரு வாத்தியத்தைக் கையாளும் போது நாம் மேற்கொள்ளும் ஒவ்வொரு அசைவுக்கும் அடையாளம் உண்டு. இன்னும் சொல்லப் போனால் Western Notesஐ முறையாகக் கற்றுக்கொண்டால் எந்த மொழிப் பாடல் களையும் மிக இலகுவாக இசைக்க முடியும்.




இன்றைய விஞ்ஞான வளர்ச்சியில் இசையில் பல புரட்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. முக்கியமாக கம்பியூட்டர் இசை என்பது மிகவும் முக்கியமானதொன்றாகி விட்டது. இப்பொழுது வெளிவரும் அனைத்து திரை இசைப்பாடல்களும் கம்பியூட்டர் மயமாக்கப்-பட்டதாகவே உள்ளது. கம்பியூட்டரின் முழுப்பயனையும் பெற்றுக்கொள்ள வேண்டு மாயின் நாம் நிட்சயமாக Western Notes ஐப்பற்றி கொஞ்சமாவது தெரிந்து வைத்-திருப்பது நல்லது. இசையமைப்பாளர்கள் கையாளும் எல்லா Softwareகளும் இந்த Western Notesஐ மையமாகக் கொண்டு தான் உருவாக்கப்பட்டுள்ளன. ஒரு இசை அமைப்பாளர் தன்னுடைய கற்பனையில் எழும் இசையை உருவாக்கி அதை உரிய கலைஞர்களிடம் மிக இலகுவாக வெளிப்-படுத்த இந்த Western Notes இன்றியமை-யாததாகும். தொழில்நுட்பம் எவ்வளவு வளர்ச்சி அடைந்தாலும் Western Notesஇனு டைய தேவை இன்னும் இருந்துகொண்டு-தான் இருக்கிறது.

சரி இனி தமிழ் பாடல்களை எப்படி Western Notes முறைக்கு மாற்றுவது என்று பார்ப்-போம். நாம் அறிந்த இசைக்கருவிகளில் மிகவும் இலகுவாக பாடல்களை இசைக்-கக்கூடியதாய் இருப்பது கீபோட் ஆகும். இந்த கீபோட் வாத்தியத்தை கம்பியூட்ட-ருடன் MIDI port மூலம் connect செய்து அதற்குரிய software ஐ install செய்தால் நாம் விரும்பிய பாடல்களை இசைத்து அதற்குரிய Notesஐ print செய்து கொள்ள முடியும். இந்த Notesஐக் கொண்டு வேறு இனத்தவர்களைக்கூட தமிழ் பாடல்களை இசைக்க வைக்க முடியும். கனடாவில் பாடசாலைகளில் கல்விகற்கும் 75 சதவீத மாணவர்களுக்கு Western Notes பற்றிய அறிவு உண்டு. அவர்களிடம் இந்த Notesஐக் கொடுத்தால் தமிழ்ப் பாடல்களை மிகவும் இலகுவாகவும் விரைவாகவும் இசைப்பார் கள் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. சிலர் சொல்வார்கள் கேள்வி ஞானம் இருந்தால் Notes ஒன்றும் தேவையில்லை என்று. ஆனால் ஒருவர் இசையைக் கற்கவோ அல்லது மற்றவர்களுக்கு கற்பிப்பதற்கோ நிட்சயமாக Notesஇனுடைய தேவை இருக்கிறது.

நமது குழந்தைகளை வைத்து தமிழ் பாடல் களையோ அல்லது வேறு மொழிப் பாடல்க ளையோ மிகவும் இலகுவாக இசைக்க வைக்க முடியும். அதற்கு Western Notes இனுடைய முக்கியத்துவத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும். இசையினுடைய பரிணாம வளர்ச்சியில் எமது பிள்ளைகளை யும் இணைக்க முயற்சி செய்வோம்.

-நன்றி-

■ ■ ■

**தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.**

**E-mail:thaiveedu@gmail.com**
**Fax: 416-849-0594**
**Tel: 416-646-3422**

# மில்லியன் டொலர் பெறுமதிமிக்க ஆலோசனை உங்களுக்குக் கிடைக்கிறதா?




## ஆயுட்காப்புறுதியும் குழந்தைகளின் உயர்கல்விக்கான சேமிப்புத் திட்டமும்

- வயோதிபருக்கான காப்புறுதி மிகக் குறைந்த செலவில்
- மருத்துவப் பரிசோதனை இல்லாத காப்புறுதி
- வீட்டுக்கடன் காப்புறுதி
- கொடிய நோய்களுக்கான காப்புறுதி

## குழந்தைகளின் உயர் கல்விக்கான சேமிப்புத் திட்டம்

*கனடிய அரசினால் வழங்கப்படும் 20 - 40 சதவீத மானியத்துடன் எமது நிறுவனத்தால் 15 சதவீத சலுகையயும் அதிகமாக வழங்கப்படும். அத்துடன் 500 டொலர்* Canada Learning Bond *அரசினால் வழங்கப்படுகின்றது.*

MDRT is The Premier Association of Financial Professionals. An independent, international association, MDRT members demonstrate exceptional professional knowledge, strict ethical conduct and outstanding client service. MDRT membership is recognized internationally as the standard of excellence in the life insurance and financial services business.

**ஆயுட்காப்புறுதி சம்பந்தமான அனைத்து ஆலோசனைகளுக்கும்** Million Dollar Round Table **உறுப்பினருடன் தொடர்பு கொள்ளுங்கள்.**

# சிறீதரன் துரைராஜா

MDRT Member of Million Dollar Round Table

**416.918.9771**



Assumption Life  INDUSTRIAL ALLIANCE INSURANCE AND FINANCIAL SERVICES INC.  RBC Insurance

LiLAND INSURANCE INC. 759 Warden Ave. Toronto, ON M1L 4B5, Bus: 416-759-5453 x: 407

# சக்தியையும் பணத்தையும் சேமிப்போம்

அலன் சிவசம்பு
- வீடு விற்பனைப் பிரதிநிதி -
skbales@thaiveedu.com



சக்தியைச் சேமித்தல் (Energy Save) என்பது தற்போதைய காலகட்டத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பிடிக்கின்றது. சகல அரசாங்கங்களும் நீங்கள் விரும்பினால் எவ்வாறு Energyஐச் சேமிக்கலாம் என்பதற்கு உதவி செய்யத் தயாராக இருக்கின்றது.

Consumerஆன நாம் நான்கு விதமான எதிர்பார்ப்பை வைத்துக்கொள்வது நல்லது.

- Energy சேமிப்பதற்கான பொருட்களைக் குறைந்த செலவில் வாங்குவது.
- வீட்டின் வசதியை அதன் மூலம் அதிகரித்துக்கொள்வது.
- எமது Utility அத்துடன் Fuel Costஐக் கட்டுப்படுத்துவது.
- நாம் நாட்டிற்கு எவ்வாறு நன்மை செய்கின்றோம்.

அரசாங்கம் Climate Changeஐ எவ்வாறு கட்டுப்படுத்தலாம் என முயற்சி செய்து கொண்டு இருக்கின்றது. அத்துடன் நாம் உபயோகிக்கும் தண்ணீரையும் எவ்வாறு சேமிக்கலாம்.

## எவ்வாறு Eco Energy Auditl தயார் செய்துகொள்ளலாம்

முதலாவதாக Energy Audit செய்வதற்கு $300.00 இருந்தாலும் $150.00 உங்களால் அரசாங்கத்திடமிருந்து பெற்றுக்கொள்ள முடியும். Energy Audit Report எவ்வாறு, எங்கே energy சோமித்துக் கொள்ள முடியும்? என அறிவிக்கப்பட்டிருக்கும். அடுத்ததாக Reportல் குறிக்கப்பட்டதைச் செய்வது.

## Heating and coolingஐப் பற்றி அறிந்துகொள்ள வேண்டியன

92% AFUE அல்லது Better Energy star with DC variable Motorஐக் கொண்ட Gas Fumaceஐ பூட்டுவதால் Federal Govt $500.00 Provincial $500.00 $ 100.00 From Ambridge Gas Distribution அத்துடன் $150.00 from Ontario Power Authority (Cool Savings Rebate நில்கள் Programmable thermo starஐப் பூட்டுவதன் மூலம் இன்னொரு $25.00ஐப் பெற்றுக்கொள்வதற்கு வாய்ப்பு உண்டு.

அதேபோல் Gas or Oil Boilஐப் உபயோகிப்பதன் மூலம் அதாவது 85% AFUE அல்லது Better Energy Star Federal 600 Alen Provincial $600.00 அத்துடன் $100.00 From Ambridge Gas Distribution உடன் இருந்தும் பெற்றுக் கொள்ளலாம்.

அதேபோல்,

1. Oil Furnace பூட்டுவதால் Federal & Provincial இலிருந்து தனித்தனியாக $500.00 கிடைக்கும்.
2. Energy Star qualified Seer 14/15 High efficiency

Air Conditioner: Federal $200 Provincial 200 அத்துடன் Ontario Power Authority $400.00ஐயும் பெற்றுக் கொள்ளலாம்.

## Insulation

- Basement Wall with More then R23 additional Insulation ‘Federal” $ 1000.00 and Provincial $1000.00
- Crawl space Insulate with R23 additional Insulation ‘Federal” $ 800.00 and Provincial $800.00
- அதிகமாக R 20 additional Insulation Joist Header Space at the top of the foundation walls. ‘Federal” $ 100.00 and Provincial $100.00
- Upgrade attic insulation from R 12 to R 50 ‘Federal” $ 600.00 and Provincial $600.00
- Upgrade Flat அல்லது cathedral root insulation from R 12 to R 28 பொருத்துவதன் மூலம் ‘Federal” $600.00 and Provincial $600.00
- Air sealing அதாவது காற்று உள்ளே வராதவாறு செய்வதற்கு ‘Federal” $150.00 and Provincial $ 150.00

அத்தோடு வீட்டின் ஜன்னல்கள் கதவுகள் அல்லது Skylights யன்னல்களை Energy Star உள்ளவற்றைப் பொருத்துவதன் மூலம் Federal $ 300.00 and Provincial $ 300.00

## தண்ணீர் சேமிப்பு

Replace toilet with law flush toilet ‘Federal $ 50.00 and Provincial $ 50.00 அத்துடன் $60.00 from any of Toronto.

அதுமட்டுமல்லாது தை மாதம் 2010 வரை Energy Insulation செய்வதால் PST tax rebate கொடுக்கப்படும். மேலே கொடுக்கப்படும் சேமிப்புகளும் அதனது Rebateம் அரசாங்கங்களினால் கொடுக்கப்படுவதன் மூலம் Customer ஆகிய எம்மை ஊக்குவிக்கும் என நம்புகின்றார்கள். ஆகவே உங்களுக்கு ஏதாவது யோசனை இருந்தால் கொடுக்கப்பட்டிருக்கும் தகவல்கள் பிரயோசனமாக இருக்கும் என நம்புகின்றேன்.

■ ■ ■

# மறதி நோய்-2

- சிவா சுப்ரா -
sivasubra@thaiveedu.com

**சென்ற மாதத் தொடர்...**
*தான் யாரென்று தெரியாமலே இறந்து போன முன்னை நாள் அமெரிக்க ஜனாதிபதி!*

*"எனக்கு ஊரில மனுசி, பிள்ளையள் எல்லாம் இருக்கினம். அவையளை நான் பார்க்கவேணும்"* திருநாவுக்கரசு மிகுந்த கவலையோடு கூறிக்கொண்டிருந்தார்.

*"ஓ! அவையளுக்கு என்ன வயசாகுது?"*

*"மனுசிக்கு வயசு முப்பது இருக்கும். பிள்ளையளுக்கு ஆறு, ஏழு வயசுதான். இப்பத்தான் பள்ளிக் கூடம் போகத் தொடங்கி இருக்கினம். அவையளை ஒருக்காப்போய் பாத்திட்டு வருவம் என்டால்.. அம்மா போறதுக்கு விடுறா இல்லை."*

கனடாவில் ஒரு வீட்டில் நடந்த உரையாடல் இது.

என்ன திருநாவுக்கரசின் அம்மா இவ்வளவு கொடுமைக்காரியா? என்று ஆத்திரம் அடைந்து விடாதீர்கள்.

திருநாவுக்கரசிற்கு உண்மையில் இலங்கையில் தற்போது யாருமே இல்லை. அவருடைய பிள்ளைகள் எல்லாம் கனடாவுக்கு வந்து, திருமணமாகி தனிக்குடித்தனம் போய் விட்டனர். திருநாவுக்கரசு 'அம்மா' என்று கூறியது அவருடைய மனைவியைத்தான். அது தன்னுடைய மனைவி என்று திருநாவுக்கரசுவின் மூளையில் பதிவுகள் எதுவும் இல்லை.

திருநாவுக்கரசின் மூளையில் இப்போதும் மனைவியாக இருப்பது முப்பது வருடங்களுக்கு முன்பு இளமையாக இருந்த அவருடைய இளமைக்கால மனைவி. அவருடைய மூளை பதிவு செய்து வைத்திருக்கின்ற மனைவிக்கும், அவர் முன்னால் இருக்கின்ற உண்மையான மனைவிக்கும் இடையில் நிறைய வேறுபாடு. அதனால் அறுபது வயதில் உள்ள அவருடைய மனைவி அவருக்கு அம்மா என்று தோன்றுகின்றது

இன்னோரு சம்பவமும் மிக அண்மையில் நடந்தது.

*சரியான குளிர். வெப்பநிலை -18க்கு கீழ் இறங்கி விட்டது. எந்த விதமான குளிர் உடுப்புகளும், பாதணிகளும் அணியாமல் ஒரு வயோதிபர் தெருவில் காத்துக் கொண்டிருந்தார். இன்னும் சில நிமிடங்கள் அந்தக் குளிரில் அவர் நின்றிருந்தால் கோமா நிலைமைக்குப் போயிருப்பார்.*

அவருடைய நல்ல காலம். யாரோ பொலிசாருக்குத் தகவல் கொடுத்ததினால் காப்பாற்றப்பட்டார்.

வீட்டில் மகனுடனும், மருமகளுடனும் சண்டை போட்டுக் கொண்டு அந்தப் பெரியவர் வீட்டை விட்டு வெளியே வந்து விட்டார் என்று தப்பாக புரிந்து விடாதீர்கள்.

*"அப்பா என்னத்துக்கு குளிர் உடுப்பு ஒன்றும் போடாமல் வெளியில போய் நின்டனீங்கள்?"* மிக ஆறுதலாக மகன் கேட்டார்.

*"பனை தறிக்க ஆட்கள் வாறம் என்டு சொன்னவை. அதான் அவையளைப் பார்த்துக் கொண்டிருந்தனான்."* என்றார் அப்பா.

எல்லாமே அல்சிமர் என்ற இந்த நோயின் விளைவுகள்.

யாரையாவது எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள்.

நாற்பது வருடங்களுக்கு முன் இறந்துபோன மகளுக்கு கொள்ளிவைத்தது இவராகத்தான் இருக்கும். அந்த மகளை எதிர்பார்த்து இன்று இவர் காத்துக்கொண்டிருப்பார்.

*"அவள் வாறன் என்டு சொன்னவள் ஏன் இன்னமும் வரேல்லை ?"* என்று அடிக்கடி கேள்வி எழுப்புவார்கள். அவளைப் பற்றியே பேசிக்கொண்டிருப்பார்.

தமது பொருட்களையெல்லாம் யாராவது திருடிவிடுவார்கள் என்ற பயம் இந்த நோயாளிகளுக்கு எப்போதும் உண்டு. அதனால் கத்தி, பேனா, நகை, பணம், உடுப்பு என்று எதையாவது எங்காவது ஒளித்து வைப்பார்கள். பின்னர் அதை மறந்து போய் தமது பொருட்களைக் காணவில்லை யாரோ களவெடுத்துவிட்டார்கள் என்று சண்டை போடுவார்கள்.

*"இன்டைக்கு வெள்ளிக் கிழமை."*

*"இல்லையம்மா, இன்டைக்கு ஞாயிற்றுக் கிழமை."*

*"இல்லை இன்டைக்கு வெள்ளிக் கிழமை."*

*"அம்மா. கலண்டரைப் பாருங்கள். இன்டைக்கு ஞாயிற்றுக் கிழமை."*

*"இல்லை இன்டைக்கு வெள்ளிக் கிழமை."*

இப்படி சண்டை போடுவார்கள்.

மூக்கு முட்ட சாப்பிட்டு விட்டு, அதை மறந்து போய் *"எனக்கு ஏன் இன்டைக்கு சாப்பாடு தரேலை?"* என்று சத்தம் போடுவார்கள். ஆனால் தனது எட்டாம் வகுப்பில் தமிழ் படிப்பித்த ஆசிரியரின் பெயரை மறக்காமல் ஞாபகம் வைத்திருப்பார்கள்.

அல்சிமர் நோய் வந்தவர்களை மாற்ற முடியாது. ஏன் என்றால் அவர்களுடைய மூளையில் ஏற்பட்ட பாதிப்பினாலேயே அவர்கள் அவ்வாறு செயல்படுகின்றார்கள். அவர்களை ஏசுவதாலோ, சத்தம் இடுவதாலோ, குறை கூறுவதாலோ, அடிப்பதினாலோ மாற்ற முடியாது.

அல்சிமர் நோய் நமது வீட்டில் யாருக்காவது வந்து விட்டால் எங்களைத்தான் நாங்கள் மாற்ற வேண்டும்.

*"இன்டைக்கு வெள்ளிக் கிழமை."*

*"இல்லையம்மா, இன்டைக்கு ஞாயிற்றுக் கிழமை."*

*"இல்லை இன்டைக்கு வெள்ளிக் கிழமை."*

*"ஓம் அம்மா இன்டைக்கு வெள்ளிக் கிழமைதான். நான் தான் மறந்து போனன்."* என்று நாம் தான் கிழமையை அவர்களுக்கா மாற்றிக் கொள்ள வேண்டும்.

*"மகள் இன்டைக்கு வாறன் என்டு சொன்னவள். என்ன இன்னம் காணேலை"* என்டு காத்திருக்கின்ற தந்தையிடம் *"அவள் செத்துப் போய் முப்பது வருசமாச்சு."* என்று கூறக் கூடாது.

"ஓம் அப்பா வாறன் என்டுதான் சொன்ன வள்பிறகு ஏதோ அலுவலாய் கொழும்புக்கு போட்டாள். அடுத்த மாதம் வாறன் என்டு சொன்னவள்" என்று புளுகு மூட்டையை அவிழ்த்து விடவேண்டும்.

அல்லது "அப்பா, ஏன் அப்பா அவளில உங்களுக்கு ஒரு தனியான பாசம் ?" என்று கதை கேட்டு அவரை திசைதிருப்பி விடவேண்டும்.

பிறகு மகள் வரவில்லையே என்ற பிரச்சனையை மறந்து, மகளைப்பற்றி பாசமாக கதைத்துக் கொண்டிருப்பார்

அல்சிமர் நோய் உள்ளவர்களுக்காக நம்மை நாம் மாற்றிக் கொள்வதினால் ஒரு நட்டமும் கிடையாது.

*"அம்மா, குளிச்சிட்டு, உடுப்பு மாத்தி வெளிக்கிட்டு வாங்கோ"* என்ற கட்டளை அவர்களுக்கு புரியாது.

*"அம்மா குளிச்சிட்டு வாங்கோ"* என்று மட்டும் சொல்வது அவர்களுக்குப் புரியலாம். அல்லது துவாய், சவர்க்காரம் என்பனவற்றைக் காட்டி *"குளிச்சிட்டு வாங்கோ"* என்று சொல்வதுதான் சமயத்தில் புரியலாம். இதற்குக் காரணம், வார்த்தைகளை புரியமுடியாவிட்டாலும், சைகைகளையும், பொருட்களையும் சமயத்தில் புரிந்து கொள்ளக் கூடியதாக அவர்களுக்கு இருக்கலாம்.

குளித்து விட்டு வந்த பின்னர், *"அலுமாரிக்குள் இருந்து உங்களுக்கு விருப்பமான ஒரு உடுப்பை போட்டுக்கொண்டு வாங்கோ"* என்று கூறக் கூடாது.

அப்படிக் கூறினால் அவர்களுக்குப் புரியாது. அலுமாரி எங்கிருக்கின்றது, அதற்குள் என்ன இருக்கின்றது என்பதெல்லாம் அவர்களின் மூளையில் இருந்து துடைக்கப்பட்டு வெகுநாட்கள் ஆகியிருக்கும். ஓரளவு நினைவுள்ளவர்கள் நீல நிற சீலைக்கு எவ்விதமும் பொருத்தம் இல்லாத வகையில் கடும் சிவப்பு நிற சட்டையைப் போட்டுக்கொண்டு வருவார்கள்.

காற்சட்டையை போட்டபின் அதற்கு மேல் ஜட்டியை ஒருவர் அணிந்து கொண்டும் வரலாம்.

*"அம்மா இந்த நீல நிற உடுப்பு உங்களுக்கு விருப்பமா? அல்லாட்டி சிவப்பு நிற உடுப்பு விருப்பமா?"* என்று கேட்க வேண்டும். அதில் இருந்து ஒன்றை அவர் தெரிவு செய்வார்.

*"செம்பில தண்ணி கொண்டுவா"* என்பார்கள்.

இந்த தொடர்ச்சியான செயல்முறைகள் எல்லாம் அல்சிமர் நோய் வந்தவர்களுக்கு நினைவுக்கு வராது.

சாப்பிட என்று போனவர் சமயல் அறையில் சிறுநீர்கழித்து விட்டும் வரலாம். அல்லது சாப்பாட்டுத் தட்டை எடுத்துக்கொண்டு வந்து அதை மணிக் கணக்கில் வைத்துக் கொண்டும் இருக்கலாம்.

இதற்குப் பதிலாக நாம் அவர்களுடைய



'கிளாஸ்', அல்லது 'கோப்பை' என்ற சொல்லை மறந்து விட்டிருப்பார்கள். அந்த சொற்கள் அவர்களுடை மூளையில் இருந்து அழிந்து போயிருக்கும். செம்பு இன்னமும் மூளையில் பதிவாய் இருக்கும். சின்ன வயதில் செம்பில் தண்ணீர் குடித்த பழைய ஞாபகம் மட்டும் அவர்களுக்கு இருக்கின்றது.

"ஓம்" என்று சொல்லி தண்ணீர் கொடுக்க வேண்டியது மட்டும்தான் நமது வேலை.

*"சாப்பாடு மேசையில் இருக்கு. போட்டு சாப்பிடுங்கோ"* என்றால் அது அவர்களால் செய்ய முடியாது.

சாப்பிடுவது என்றால் எவ்வளவு படி முறைகள் உள்ளன என்பதை முதலில் நாம் தான் புரிந்து கொள்ள வேண்டும்.

- முதலில் சமையல் அறைக்குப் போக வேண்டும்.
- பிறகு கை கழுவ வேண்டும்.
- கோப்பை எங்கிருக்கின்றது என்று கண்டு பிடிக்க வேண்டும்.
- அதில் சோறு கறிகளை போடுவதற்குரிய கரண்டியை கண்டு பிடிக்க வேண்டும்.
- பின்னர் கோப்பையில் அவற்றை போட வேண்டும்
- பின்னர் அதை எடுத்துக் கொண்டு மேசையில் அமர வேண்டும்
- அதன் பின்னர் அதை குழைக்க வேண்டும்
- பின்னர் வாய்க்குள் வைக்க வேண்டும்.
- அதை பற்களால் கடித்து அரைக்க வேண்டும்.
- பின்னர் விழுங்க வேண்டும்.
- அதன் பிறகு மறுபடியும் உணவை வாய்க்குள் வைக்க வேண்டும்.

சாப்பாட்டை தட்டில் போட்டுக் குழைத்து, ஊட்டிவிட வேண்டும்.

அப்போதும் கூட அதை அவர்கள் விழுங்காமல் வாயினுள் வைத்துக் கொண்டிருக்கலாம். இத்தகைய நிலையில் நாமும் உணவை சாப்பிட்டு வாயைத் திறந்து ஒன்றும் இல்லை,அதை விழுங்க வேண்டும் என்று அவர்களுக்கு உணர்த்த வேண்டும்.

அல்சிமர் நோய் ஏற்பட்டவருக்கு அல்சிமர் நோயைப் பற்றி எதுவும் தெரிய வேண்டிய அவசியம் இல்லை. அதைப்பற்றி மட்டும் இல்லை, எதைப்பற்றியும் எதுவுமே தெரிந்து கொள்ள முடியாத நிலையிலேயே அவர்கள் இருக்கின்றனர்.

அல்சிமர் நோய் வராதவர்களே இந்த நோயைப் பற்றி தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த நோயைப் பற்றி நாங்கள் தெரிந்து கொண்டால் தான், இந் நோய் வந்தவர்களை எம்மால் புரிந்து கொள்ள முடியும். அது மட்டுமல்ல அவர்களை தகுந்த முறையில் நம்மால் பராமரிக்கவும் முடியும்.

■ ■ ■

***தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.***

***E-mail:thaiveedu@gmail.com***
***Fax: 416-849-0594***
***Tel: 416-646-3422***


வீடு வாங்கவும், விற்கவும்...
E. Whites/N.Kingston
$539,500
In Pickering
4 Bedrooms, 3 Washrooms
Ground Floor Master
Fully Hardwood. $$$ Upgrades
8 Months Old Custom Built
Jane/Lawrence
$389,900
4 Bedrooms, 3 Washrooms
Walk Out Basement
8 Yrs old.
Brimley/Finch
Commercial
$179,900
DAISY MART
Sale Of Business
Warden/Finch
SOLD CONDITIONALLY
$249,900
3+1 Bedrooms, 3 Washrooms
Att/Row/Twnhouse
Finshed Basement
24 Hrs TTC
Weston/Rutherford
SOLD CONDITIONALLY
$349,900
3 Bedrooms
2 Full Washrooms
Condo Townhouse Free Hold
Steeles/McCowan
Just Listed
SOLD CONDITIONALLY
$349,000
3 Bedrooms
2 Washroms
Brimorton/Orton Park
$275,000
3 Bedrooms
2 Washrooms
Sidesplit 3
Detached
Markham/Sheppard
$290,000
3 Bedrooms
2 Washrooms
Sidesplit 5
Detached
Jane/Lawrence
$698,400
Bayview/Sunset Beach
4+1 Bedrooms, 4 Washrooms
Finished Walkout Basement
50x175 feet
Staines/Morningside
New Listing
$329,900
3 Bedrooms, 3 Washrooms
Att/Row/Twnhouse
Corner unit
Brimley/Denison
SOLD
FOR MORE THAN ASKING PRICE
3 Bedroom
3 Washroom
Finished Basement
Kingston/Galloway
SOLD
$174,900
Condo Townhouse
3+1 Bedrooms
2 Full Washrooms
Brock/401
SOLD
$269,900
3 Bedrooms, 3 Washrooms
Call for more info
Neilson/McLevin
SOLD CONDITIONALLY
3 Bedrooms
2 Washrooms
Near 401
Steeles/9th Line
$499,900
4 Bedrooms
4 Washrooms
Sq 2500-3000
0-5 Years Old
24 HOURS / 7 DAYS OF
WEEK FULL TIME REALTORS
RAJ Ariyanayagam
Pathmarajah
Real Estate Broker
Cell: 416-930-4663
Kirew
Kanagasabai
Real Estate Broker
Cell: 416-903-4663
HOMELIFE
HIGHER STANDARDS
HomeLife Today Realty Inc., Brokerage*
Independently Owned And Operated
31 Progress Avenue, Suite 210
Toronto, ON M1P 4S6
Office: 416-298-3200







**இம்மாதப் புகைப்படக் கலைஞர்**
**சிந்து மாறன்**

கனடா, றிச்மன்ஹில்லில் வசிக்கும் இவர் பல்கலைக் கழகத்தில் உயிரியல் விஞ்ஞானம் இரண்டாம் ஆண்டு கல்வி பயில்கின்றார். தனது ஓய்வுநேரங்களில் புகைப்படத்துறையிலும் ஆர்வம்காட்டி வருகின்றார்.

**உங்களிடம் (நீங்கள் எடுத்த) அழகான புகைப்படங்கள் இருக்கின்றனவா? அவற்றை நாங்கள் பிரசுரிக்க விரும்புகிறோம்.**

புகைப்படம் எடுத்தவரின் பெயர், விலாசம், தொலைபேசி இலக்கம், மின்னஞ்சல், புகைப்படம், எடுக்கப்பட்ட காட்சி அல்லது எடுக்கப்பட்டவருடைய விபரங்கள் என்பவற்றுடன் நீங்கள் எடுத்த புகைப்படத்தையும் அனுப்பிவையுங்கள். அவை இந்தப் பகுதியில் பிரசுரமாகும்.